

உ

கடவுட்டுணை.

# பஞ்சலட்சணமூலம்

## நேமிநாதமூலம்.

## வீரசோழியமூலம்.

---

இவை

சமிவனக்ஷேத்திரமென்னும்-கோயிலூர்

ஸ்ரீ - முத்துராமலிங்கசுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ - சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

கண்டமாணிக்கம்-இங்கிலீஷ்

மெய்யப்பசெட்டியார் வேண்டுகோளின்படி

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து

சென்னை

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

—:0:—

விய(ஹ) ஆனிமீ.



கடவுடுணை.

# நன்னூல் மூலம்.

## சிறப்புப்பாயிரம்.

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
விலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
வற்புத மூர்த்திதன் மலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவது
முனிவற வருளிய மூவறு மொழியுளுங்
குணகடல் குமரி குடகம் வேங்கட
மெனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலு
ளரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னு
ரிகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்க

னருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
யென்னு நாமத் திருந்தவத் தோனே.

## பொதுப்பாயிரம்.

1. முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம். (க)

2. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே. (உ)

3. நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்து
மெல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம். (ங)

4. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
யையிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணான் குத்தியி னோத்துப் படல
மென்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே. (ச)

5. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும். (ரு)

அவற்றுள், வினையினீங்கி விளங்கிய வறிவின்
6. முனைவன் கண்டது முதனூ லாகும். (சு)

7. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும். (௭)

8. இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும். (௮)

வெண்பா.

9. முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள். (௯)

10. அறம்பொரு ளின்பம் வீடடைத னூற்பயனே. (௧௦)

11. எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ ணாட்டித் தனாது நிறுப்பே
யிருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறனூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே. (௧௧)

12. குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்று தேய்ந்திறுத னின்றுபய னின்மை
யென்றிவை யீரைங் குற்ற நூற்கே. (௧௨)

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்த
னவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்த
லோசை யுடைமை யாழமுடைத் தாதன்
முறையின் வைப்பே யுலக மலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே. (௧௩)

14. நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டன்
முடித்துக் காட்டன் முடிவிடங் கூற
றனெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்த றொடர்சொற் புணர்த்த
லிரட்டுற மொழித லேதுவின் முடித்த
லொப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுக
லிறந்தது விலக்க லெதிரது போற்றன்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தன் முடிந்தது முடித்த
லுரைத்து மென்ற லுரைத்தா மென்ற
லொருதலை துணித லெடுத்துக் காட்ட
லெடுத்த மொழியி னெய்த வைத்த
லின்ன தல்ல திதுவென மொழித
லெஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
பிறநூன் முடிந்தது தானுடன் படுத
றன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்த
லொன்றின முடித்த றன்னின முடித்த
லுய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே. (௧௪)

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
யேற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி. (கரு)

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர் மொழிப் புலவர். (கசு)

17. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும். (கஎ)

18. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம். (கஅ)

19. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை. (கக)

20. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம். (உ0)

21. பாடங்கருத்தே சொல்வகை சொற்பொரு
டொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே. (உக)

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினு
மவற்றொடு வினாவிடை யாக்க லானுஞ்
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை. (உஉ)

23. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்
கின்றி யமையா தியாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானு
மைய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி. (௨௩)

வெண்பா.

24. பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு. (௨௪)

இதுவுமது.

25. உரத்தின்வளம்பெருக்கி யுள்ளியதீமைப்
புரத்தின்வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு. (௨௫)

26. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியு
முலகிய லறிவோ டுயர்குண மினையவு
மமைபவ னூலுரை யாசிரி யன்னே. (௨௬)

27. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலு
மருவிய நன்னில மாண்பா கும்மே. (௨௭)

28. அளக்க லாகா வளவும் பொருளுந்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே. (உஅ)

29. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலு
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே. (உகூ)

30. மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே. (௩௦)

31. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பு
மழுக்கா றவாவஞ்ச மச்சமா டலுங்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையு
முடையோ ரிலரா சிரியரா குதலே. (௩க)

32. பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்
செய்திக ழற்பெய் குடத்தின் சீரோ. (௩உ

33. தானே தரக்கொளி னன்றித் தன்பான்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை. (௩௩)

34. அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை. (௩௪)

35. பல்வகை யுதவி வழிபடு பண்பி
னல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே. (௩௫)

36. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்

சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
யுரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப. (௩௬)

37. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
யுரைகோ ளாளற் குரைப்பது நூலே. (௩௭)

38. அன்ன மாவே மண்ணொடு கிளியே
யில்லிக் குடமா டெருமை நெய்யரி
யன்னர் தலையிடை கடைமா ணாக்கர். (௩௮)

39. களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
றுயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே. (௩௯)

40. கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகிய வன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்னவார் வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுக ளனாகக்

கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர். (௪0)

41. நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்த
லாசாற்சார்ந்தவை யமைவரக்கேட்ட
லம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும். (௪க)

42. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருகநூலிற் பிழைபாடிலனே. (௪உ)

43. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும். (௪ங)

44. ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும். (௪௪)

45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலு
மையறுபுலமை மாண்புடைத் தாகும். (௪ரு)

46. அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா நிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திற
மறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே. (௪கூ)

பொதுப்பாயிரமுற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே. (௧)

48. காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநருமுளரே. (௨)

49. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மை முத னிமித்தினு
மிடுகுறி யானு நூற்கெய்தும் பெயரே. (௩)

50. தொகுத்தல் விரித்த தொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப. (௪)

51. தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
றன்மா ணாக்கன் றகுமுறை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே. (௫)

52. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்த றகுதி யன்றே. (௬)

53. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினுந்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினு
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினுந்
தன்னை மறுதலை பழித்த காலையுந்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே. (௭)

54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே. (அ)

வெண்பா.

55. மாடக்குச் சித்திரமு மாநகர்க்குக் கோபுரமு
மாடமைத்தோ ணல்லார்க் கணியும்போ—னாடிமு
னைதுனையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது. (க)

சிறப்புப்பாயிரம்முற்றிற்று.

பாயிரம் - உ-ஐ, சூத்திரம் - ருரு.

---

முதலாவது

# எ ழு த் த தி கா ர ம்.

## க. எழுத்தியல்.

56. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே. (க)

57. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதனீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே. (உ)

58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே. (௩)

59. உயிரு முடம்புமா முப்பது முதலே. (௪)

60 உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இ-உ.-ஐ-ஔ மஃகான்
றனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும். (ரு)

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்த
மெட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
யாறே ழஃகு மிம்முப் பானே
மூகர மாறு றைகான் மூன்றே
யௌகா னொன்றே மஃகான் மூன்றே
யாய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
யொன்றொழி முந்நூற் றெழுபா னென்ப. (சு)

62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின. (எ)

63. அம்முத லீரா றுவி கம்முதன்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர் (அ)

64. அவற்றுள், அ-இ-உ-எ-ஒ க்குறிலைந்தே. (கூ)

65. ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ நெடில். (க0)

66. அ-இ-உ-ம்முதற்றனி வரிற்சுட்டே. (கக)

67. எ-யா முதலும் ஆ-ஓ வீற்று மேயிருவழியும் வினாவாகும்மே.

68. வல்லினங் க-ச-ட-த-ப-ற வெனவாறே. (கங)

69. மெல்லினம்-ங-ஞ-ண-ந-ம-னவென வாறே. (கச)

70. இடையினம்-ய-ர-ல-வ-ழ-ள-வென வாறே. (கரு)

71. ஐ-ஔ-இ-உச்செறியமுதலெழுத்
திவ்விரண்டோரினமாய்வரன்முறையே. (கசு)

72. தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் றுதியோர் புடையொப் பினமே. (கஎ)

73. சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முத
னடத்த றுனே முறையா கும்மே. (கஅ)

74. நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே. (கக)

75. அவ்வழி, ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை. (உ0)

76. அவற்றுள், முயற்சியுள் அ-ஆ வங்காப் புடைய. (உக)

77. இ-ஈ-எ-ஏ-ஐ-யங் காப்போ
டண்பன் முதனா விளிம்புற வருமே. (உஉ)

78. உ-ஊ-ஒ-ஓ-ஔ விதழ்குவிவே. (உங)

79. கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே. (உச)

80. அண்பல் லடிநா முடியுறத் தநவரும். (உரு)

81. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும். (உசு)

82. அடிநா வடியண முறயத் தோன்றும். (உஎ)

83. அண்ண னுனிநா வருட ரழவரும். (உஅ)

84. அண்பன் முதலு மண்ணமு முறையி
னுவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும் (உகூ)

85. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே. (௩௦)

86. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும். (௩க)

87. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய. (௩உ)

88. எடுத்தல் படுத்த னலித லுழப்பிற்
றிரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும். (௩௩)

89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியு
மேனை யுயிரோ டுருவு திரிந்து
முயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய். (௩ச)

90. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
யுயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. (௩ரு)

91. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடி
லளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே. (௩சா)

92. ஙஞண நமன வயலள வாய்த
மளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே. (௩எ)

93. யகரம் வரக்குற ளுத்திரி யிகாமு
மசைச்சொன் மியாவி னிகரமுங்குறிய. (௩அ)

94. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகர
மஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே (௩௯)

95. தற்சுட் டளபொழி யைம்மூ வழியு
நையு மௌவு முதலற் றுகும். (௪0)

96. ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும். (௪க)

97. லளவீற் றியைபினு மாய்த மஃகும். (௪உ)

98. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மேகார வோகார மெய்புள்ளி. (௪௩)

99. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தம்
கால்குறண் மஃகா னுய்த மாத்திரை. (௪௪)

100. இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை. (௪௫)

101. ஆவியுமொற்று மளவிறந் திசைத்தலும்
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின். (௪௬)

102. பன்னீ ருயிருங்கசதந பமவய
ஞஙவீரைந்துயிர் மெய்யு மொழிமுதல். (௪௭)

103. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல். (௪அ)

104. அ-ஆ-உ-ஊ-ஒ-ஔ யம்முதல். (சகூ)

105. அ-ஆ-எ-ஒ வ்வோடாகு ஞம்முதல். (ருo)

106. சுட்டியா வெகர வினவழி யவ்வை
யொட்டி ஙவ்வு முதலா கும்மே. (ருக)

107. ஆவி ஞண நமன யரலவழள மெய்
சாயு முகரநா லாறு மீறே. (ருஉ)

108. குற்றுயி ரளபி னீறு மெகர
மெய்யொ டேலாதொந் நவ்வோ டாமௌக்
ககர வகரமொ டாகு மென்ப. (ருங)

109. நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே. (ருச)

110. கசதப வொழித்தவீ ரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே. (ருரு)

111. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே. (ருசு)

112. ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும். (ருஎ)

113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும். (ருஅ)

114. ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும். (ருகூ)

115. மம்முன் பயவ மயங்கு மென்ப. (சுo)

116. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும். (சுக)

117. லளமுன் கசப வயவொன் றும்மே. (கஉ)

118. ரழவல் லனதம்முற் ருமுட னிலையும். (கங)

119. யரழவொற் றின்முன் க-ச-த-ப-ங-ஞ-ந-ம
ஈரொற் றும்ரழத் தனிக்குறி லணையா. (கச)

120. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே. (கரு)

121. தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்
இம்முறை மாறிய மியலு மென்ப. (கசு)

122. மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே. (கஎ)

123. அ-ஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன். (கஅ)

124. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே. (கக)

125. அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன. (எ0)

126. மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்
ஐயௌக் கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற. (எக)

127. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே. (எஉ)

எழுத்தியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - கஉஎ.

## உ. பதவியல்.

128. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப. (க)

129. உயிர்மவி லாறுந் தபநவி லைந்துங்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின. (உ)

130. பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ ருகத் தொடரு மென்ப. (௩)

131. பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம். (௪)

132. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே. (௫)

133. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும். (௬)

134. தத்தம், பகாப்ப தங்களே பகுதி யாகும். (௭)

135. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகா நிலைப் பதமே. (௮)

136. ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதிநீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே. (கூ)

137. நடவா மடிசீ விடுகூ வேவை
தொப்போ வெளவுரி ஞுண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றெய்திய விருபான் மூன்று மீற்றவுஞ்
செய்யெ னேவல் வினைப்ப காப்பதமே. (க0)

138. செய்யென் வினைவழி விப்பி தனிவரிற்
செய்வியென் னேவ லிணையினி ரேவல். (கக)

139. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே. (கஉ)

140. அன்-ஆன்-அள்-ஆள்-அர்-ஆர்-பம்மார்
அ-ஆ-குடுதுறு என்-ஏன்-அல்-அன்
அம்-ஆம்-எம்-ஏம் ஓமொ டும்மூர்
கடதற ஐ-ஆய்-இம்மின் இர்-ஈர்
ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே. (கங)

141. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே. (கச)

142. தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை. (கரு)

143. ஆநின் று கின் று கிறுமூ விடத்தின்
ஐம்பா லிகழ்பொழு தறைவினை யிடையிலே. (கரு)

144. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சில்வில. (கஎ)

145. றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவுர்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தஞ்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே. (கஅ)

146. இடையி னன்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்க முதலீறி
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும். (கக)

147. அவற்றுள், ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலும்
எட்டே யவ்வு முப்பது சயவும்
மேலொன் று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றைய் மீயீ றிகரமும். (உ0)

148. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே. (உக)

149. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற. (உஉ)

150. றனழ எ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே. (உரு)

ஆ-சூத்திரம் - கடுo.

இரண்டாவது பதவியல் முற்றிற்று.

## ரு. உயிரீற்றுப் புணரியல்.

151. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே. (க)

152. வேற்றுமை யைம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
யெழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே. (உ)

153. விகார மனைத்து மேவல தியல்பே. (ரு)

154. தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும். (ச)

155. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி. (ரு)

156. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே. (௬)

157. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும். (௭)

158. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்புங்
குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும். (௮)

159. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பா மாவி யரமுன்
வன்மை மிகாசில விகார மாமுயர்திணை. (௯)

160. ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி யியல்பே. (௧௦)

161. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே. (௧௧)

162. இ-ஈ-ஐ வழி யவ்வு மேனை
உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும். (௧௨)

163. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுத னெறியே. (௧௩)

164. உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி. (௧௪)

165. இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
கசதப மிகும்வித வாதன மன்னே. (கரு)

166. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே. (கசு)

167. செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றுற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே. (கஎ)

168. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே. (கஅ)

169. சாவவென் மொழியீற் றுயிர்மெய்சா தலும்விதி. (கக)

170. பலசில வெனுமிவை தம்முன் றாம்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலுமுளபிற. (உ0)

171. அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா. (உக)

172. குறியதன் கீழாக் குறுகலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின். (உஉ)

173. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே. (உங)

174. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே. (உச)

175. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும். (உ௫)

176. அல்வழி இஐ முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும். (உ௬)

177. ஆமுன் பகரவீ யனைத்தும் வரக்குறுகும்
மேலன வல்வழி யியல்பா கும்மே. (உ௭)

178. பவ்வீ நீமீ முன்ன ரல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே. (உ௮)

179. மூன்று றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகு முகர முன்ன ரியல்பாம். (உ௯)

180. அதுமுன் வருமன் றான்றாந் துாக்கின். (௩0)

181. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி. (௩௧)

182. இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை. (௩உ)

183. நெடிலோ டுயிர்த்தொடர் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே. (௩௩)

184. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்
றம்மின வன்றொட ராகா மன்னே. (௩௪)

185. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே. (௩௫)

186. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற. (௩௬)

187. செங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின். (௩எ)

188. எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டீறு மெண்ணுள்
முதலீ ரெண்முத னீரு மூன்று
றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனார் புலவர். (௩அ)

189. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே (௩௯)

190. மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும். (௪0)

191. நான்கன் மெய்யே லறவா கும்மே. (௪௧)

192. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும். (௪௨)

193. எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப. (௪௩)

194. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப் பஃதகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே. (௪௪)

195. முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல்
எனவிரு விதியு மேற்கு மென்ப. (௪௫)

196. ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே. (௪௬)

197. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே. (சஎ)

198. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்று னவ்வாகு மென்ப. (சஅ)

199. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி. (சகூ)

200. பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும். (ருo)

201. இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே. (ருக)

202. வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
யீற்றழி வோடும் மேற்பவு முளவே. (ருஉ)

203. பனைமுன், கொடிவரின் மிகலும் வலிவரி னைபோய்
அம்முந் திரள்வரி னுறழ்வு மட்டுறின்
ஐகெட் டந் நீ ளலுமாம் வேற்றுமை. (ருங)

மூன்றாவது உயிரீற்றுப் புணரியல் முற்றிற்று.
ஆ சூத்திரம்-உoங.

## ச. மெய்யீற்றுப் புணரியல்.

204. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே. (க)

205. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும். (உ)

206. தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே. (ங)

207. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்
உவ்வுறு மேவ லுருசில சில்வழி. (ச)

208. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை. (ரு)

209. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே. (சு)

210. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே. (எ)

211. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
யியல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே (அ)

212. னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே. (கூ)

213. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே. (க0)

214. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி. (கக)

215. மரமல் லெகின்மொழி யியல்பு மகர
மருவ வலிமெலி மிகலு மாகும். (கஉ)

216. குயினுன் வேற்றுமைக் கண்ணு மியல்பே. (கங)

217. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென் மையோ டுறழும். (கச)

218. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழுநின்னீ றியல்பா முறவே. (கரு)

219. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும் (கசு)

220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வு
மல்வழி யுயிரிடை வரினியல் பும்முள. (கஎ)

221. நுந்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே. (கஅ)

222. அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும். (க௯)

223. ஈமுங், கம்மு முருபுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே. (உ0)

224. யரழ முன்னர்க் கசதப வல்வழி
யியல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல். (உக)

225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே. (உஉ)

226. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும். (உங)

227. லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி.
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப. (உச)

228. குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே. (௨௫)

229. குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் திரிபு மாவன வுளபிற. (௨௬

230. லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுறு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள. (௨௭)

231. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம். (௨௮)

232. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும். (௨௯)

233. இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும். (௩0)

234 புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும். (௩௧)

235. சுட்டு வகரமூ வினமுற முறையே
யாய்தமு மென்மையு மியல்பு மாகும். (௩௨)

236. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும். (௩௩)

237. னலமுன் றனவும் ணளமுன் டணவு
ஆகுந் தனக்க ளாயுங் காலே. (௩௪)

238. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும். (௩௫)

239. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலிய் மருஉம் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே. (௩௬)

நான்காவது மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - உ௩௯.

## ௫. உருபுபுணரியல்.

240. ஒருவ னொருத்தி பலரொன்று பல்வென
வருபெய ராந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே. (௧)

241. பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே. (௨)

242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே. (௩)

243. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும். (௪)

244. அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தந்
தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே. (௫)

245. எல்லா மென்ப திழிதிணையாயின்
அற்றோ டுருபின் மேலும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றுரும். (௬)

246. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே. (எ)

247. தான்தாம் நாமுதல் குறுகும் யான்யாம்
நீ நீர் என் எம் நின்றுமாம்பிற
குவ்வினவ்வரு நான்கா றிரட்டல. (அ)

248. ஆமா கோனவ் வணையவும் பெறுமே. (கூ)

249. ஒன்று முத லெட் டீறு மெண்ணூர்
பத்தின்முன் றன்வரிற் பவ்வற் றொழியமேல்
எல்லா மோடு மொன்பது மிற்றே. (கo)

250. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே. (கக)

251. சுட்டின்முன் றய்த மன்வரிற் கெடுமே. (கஉ)

252. அத்தி னகர மகரமுனை யில்லை. (கஈ)

253. இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே. (கச)

254. விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே. (கரு)

255. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்

விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்னபிறவு மாகுமை யுருபே. (௧௬)

256. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
தம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும். (௧௭)

257. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே. (௧௮)

ஐந்தாவது உருபுபுணரியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - உ௫௭.

முதலாவது எழுத்ததிகாரம் முற்றிற்று.

---

கட்டளைக்கலித்துறை.

அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந்தெழுத்து மிருபதமும்
படுபுணர் மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உடனுணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே.





## இரண்டாவது

# சொல்லதிகாரம்.

## க. பெயரியல்.

258. முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே. (௧)

259. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே. (௨)

260. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன. (௩)

261. மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை. (௪)

262. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை. (௫)

263. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை. (௬)

264. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும். (௭)

265. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே. (௮)

266. தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே. (௯)

267. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
யெனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல். (க0)

268. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள். (கக)

269. ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவுங்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை. (கஉ)

270. அதுவே, இயற்சொற் றிரிசொ லியற்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்குமாந் திசைவட சொல்லணுகாவழி. (கங)

271. செந்தமி ழாகித் திரியாதி யார்க்குந்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல். (கச)

272. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
மரிதுணர் பொருளன திரிசொல் லாகும். (கரு)

273. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினுந்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப. (கசு)

274. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல். (௧௭)

275. இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே. (௧௮)

276. அவற்றுள், கிளையெண் குழூஉமுதற் பலபொரு டிணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
டிருது மதினா ளாதிக் காலந்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓத லீத லாதிப் பல்வினை
இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ
டுற்ற னவ்வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசி றோன்ற
லின்னன வாண்பெய ராகு மென்ப. (௧௯)

277. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவுந்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே. (௨௦)

278. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்
கள்ளொ டீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும். (௨௧)

279. வினைச்சுட் டுடனும் வேறு மாம்பொரு
ளாதி யுறுதச் சுட்டணை யாய்தம்
ஒன்றனென் ணின்னன வொன்றன் பெயரே. (உ௨)

280. முன்ன ரவ்வொடு வருவை யவ்வுஞ்
சுட்டிறு வவ்வுங் கள்ளிரு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ளவில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே. (உ௩)

281. பால்பகா வஃறிணைப் பெயர்கள் பாற் பொதுமைய. (உ௪)

282. முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ்
சினைமுதற் பெயரொரு நான்கு முறை யிரண்டுந்
தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர். (உ௫)

283. ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்
ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர். (உ௬)

284. அவற்றுள், ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும். (உ௭)

285. தன்மை யானுன் யாநா முன்னிலை
யெல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை யெல்லா மெனல் பொது. (உ௮)

286. வினையின் பெயரே படர்க்கை வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும். (உ௯)

287. தான்யா னானீ யொருமை பன்மை தாம்
யாம்நா மெலா மெலீர் நீயிர் நீர் நீவிர். (௩0)

288. ஒருவ னொருத்தி பெயர்மே லெண்ணில. (௩௧)

289. ஒருவனென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப. (௩௨)

290. பொருண்முத லாறோ டளவைசொற் றானி
கருவிகாரியங் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகுபெயரே. (௩௩)

291. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை. (௨௪)

292. பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை. (௩௫)

293. ஆற னுருபு மேற்குமவ் வுருபே. (௩௬)

294. நீயிர் நீவிர் நா னெழுவா யலபெறா. (௩௭)

295. அவற்றுள், எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே. (௩௮)

296. இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதியாகும். (௩௯)

297. மூன்றா வதனுரு பாலா னோடொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள். (௪0)

298. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே. (௪௧)

299. ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பில்லை யேதுப் பொருளே. (௨௯)

300. ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே. (௩௰)

301. ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன் பொரு ளென்ப. (௩௧)

302. கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முறைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே. (௩௨)

303. எட்ட னுருபே யெய்து பெய ரீற்றின்
திரிபு குன்றன் மிகுத லியல்பயல்
திரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே. (௩௩)

304. இ உ ஊ வோ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகா னவ்வீ றாகும் பொதுப் பெயர்
ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன. (௩௪)

305. இம்முப் பெயர்க்க ணியல்பு மேயும்
இகர நீட்சியு முருபா மன்னே. (௪௮)

306. ஐயிறு பொதுப் பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றுயுமாகும். (௪௯)

307. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோ
டுறுபோத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயலிற் தேயுற லீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும். (௫௦)

308. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றுதல்
ஆயலி லகரமே யாதலும் விளித்தனு. (௫௧)

309. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இஈ யாத லாண் டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றி னீருற லிவையு மீண்டுருபே. (௫௨)

310. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே. (௫௩)

311. ணவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி. (௫௪)

312. லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கவை
ஈற்றய னீட்சியு முருபா கும்மே. (௫௫)

313. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்
அளபும் புலம்பி னோவு மாகும். (௫௬)

314. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தா னின்னன விளியா. (௫௭)

315. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்
அதுமுதற் காயிற் சினைக்கை யாகும். (௫௮)

316. முதலிவை சினையிவை யெனவே றுளவில
உரைப்போர் குறிப்பி னவற்றே பிண்டமும். (௫௯)

317. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும். (௬௦)

318. ஐயான் குச்செய்யுட் கவ்வு மாகும்
ஆகா வஃறிணைக் கானல் லாதன. (௬௧)

319. எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்
புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர். (௬௨)

ஆ- சூத்திரம்-௩௧௧.

க-வது. பெயரியல் முற்றிற்று.

## உ. வினையியல்.

320. செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே. (க)

321. பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே. (உ)

322. அவைதாம், முற்றும் பெயர்வினை யெச்சமுமாகி
ஒன்றற் குரியவும் பொதுவு மாகும். (ங)

323. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே. (ச)

324. ஒருவன் முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினும்
முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பாகும். (ரு)

325. அன் ஆ னிறுமொழி யாண்பாற் படர்க்கை. (சு)

326. அள் ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கை. (எ)

327. அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே. (அ)

328. து றுடுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கை டுக்குறிப்பி னாகும். (கூ)

329. அ ஆ வீற்ற பலவின் படர்க்கை
ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும். (கo)

330. தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
உண்மை யெச்ச மிருதிணைப் பொதுவினை.

331. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்லன் னென்னே னாகு மீற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை. (கஉ)

332. அம்மா மென்பன முன்னிலை யாரையு
எம்மே மோமிவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையுந்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை. (கங)

333. செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே. (கச)

334. முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை. (கரு)

335. ஐயா யிகர வீற்ற மூன்றும்
ஏவலின் வருஉ மெல்லா வீற்றவும்
மூப்பா லொருமை முன்னிலை மொழியே. (கசு)

336. முன்னிலை முன்ன ரீயு மேயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. (கஎ)

337. இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல். (கஅ)

338. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப. (ககூ)

339. வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன. (௨0)

340. செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே. (௨௧)

341. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே. (௨௨)

342. தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே. (௨௩)

343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றுறுமுக் காலமு முறைதரும். (௨௪)

344. அவற்றுள், முதலி னான்கு மீற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற. (௨௫)

345. சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும். (௨௬)

346. சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை. (௨௭)

347. ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா. (௨௮)

348. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே. (௨௯)

349. யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால். (௩0)

350. எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால். (௩௧)

351. வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே. (௩௨)

உ - வது. வினையியல்முற்றிற்று.

ஆ சூத்திரம் - ௩௫௧.

## ௩. பொதுவியல்.

352. இருதிணை யாண்பெண்ணு ளொன்றனை யொழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பி னானே. (௧)

353. பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே. (௨)

354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினும்
திரியா தத்தமீற் றுருபி னென்ப. (௩)

355. உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம மெச்ச மீறுற முடியும். (௪)

356. உருபுமுற் றீரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன. (௫)

357. எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும். (௬)

358. ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே. (௭)

359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே. (அ)

360. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை
யெதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதும்
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும். (கூ)

361. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல். (கo)

362. வேற்றுமை வினைபண் புவமை யும்மை
யன்மொழி யெனவத் தொகையா றாகும். (கக)

363. இரண்டு முதலா விடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே. (கஉ)

364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை. (கங)

365. பண்பை விளக்கு மொழிதொக் கனவு
மொருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை. (கச)

366. உவம வுருபில துவமத் தொகையே. (கரு)

367. போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே. (கசு)

368. எண்ணெ லெடுத்தன் முகத்த னீட்டல்
எனுநான் களவையு ளும்மில தத்தொகை. (கஎ)

369. ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி. (கஅ)

370. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
யெனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள். (கக)

371. வல்லொற் றுவரினே யிடத்தொகை யாகும்
மெல்லொற் றுவரினே பெயர்த்தொகை யாகும். (உ0)

372. உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே. (உக)

373. தொக்குழி மயங்குன விரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப. (உஉ)

374. முற்றீ றொச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறிரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை. (உங)

375. திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழு மயங்கினும் வழுவே. (உச)

376. ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப. (உரு)

377. உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின. (உசு)

378. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினு மிழிபினு மொருமுடி பினவே. (உஎ)

379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே. (உஅ)

380. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே. (உகூ)

381. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும். (௩0)

382. இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே. (௩க)

383. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே. (௩உ)

384. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉ முக்காலமு மேற்புழி. (௩௩)

385. அறிவறி யாமை'யையுறல் கொளல் கொடை
ஏவ றரும்வினு வாறு மிழுக்கார். (௩ச)

386. சுட்டு மறைநே ரேவல் வினாதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப. (௩ரு)

387. வினுவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல். (௩சு)

388. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே. (௩எ)

389. வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும். (௩௮)

390. வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்தே. (௩௯)

391. எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
யிசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப. (௪0)

392. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியுமொ ரோவழி. (௪௧)

393. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே. (௪௨)

394. படர்க்கை முப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி. (௪௩)

395. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும். (௪௪)

396. இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசையா. (௪௫)

397. ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார். (௪௬)

398. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா. (௪௭)

399. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும். (௪௮)

400. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே. (௪௯)

401. பொருண்முத லாறு மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும். (௫௦)

402. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின். (௫௧)

403. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செயுட்கே. (௫௨)

404. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல். (௫௩)

405. காரண முதலா வாக்கம் பெற்றும்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள். (௫௪)

406. தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது கூறியு மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே. (௫௫)

407. ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை. (௫௬)

408. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே. (௫௭)

409. கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே. (௫௮)

410. உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே. (௫௯)

411. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே. (௬௦)

412. மற்றைய னோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே. (௬௧)

413. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றி யோரடியுள் வழங்கன் மொழிமாற்றே. (௬௨)

414. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே. (௬௩)

415. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும். (௬௪)

416. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுத லாப்பிசை. (௬௫)

417. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே. (௬௬)

418. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே. (௬௭)

419\. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறு வடியவு மடிமறி (சுஅ)

க-வது. பொதுவியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - சகக.

## ௪. இடையியல்.

420\. வேற்றுமை வினைசா ரியை யொப்புருகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல். (க)

421\. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை யொழியிசை
பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள். (உ)

422\. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே. (௩)

423\. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே. (௪)

424\. வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
எனவென மொழிவரு மென்று மற்றே. (ரு)

425\. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே. (சு)

426. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும். (௭)

427. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை. (௮)

428. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்
நான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணு மஃதின்றியு மியலும். (௯)

429. என்று மெனவு மொடுவு மொரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும். (௧௦)

430. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன. (௧௧)

431. விழைவே கால மொழியிசை தில்லை. (௧௨)

432. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும். (௧௩)

433. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே. (௧௪)

434. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம். (௧௫)

435. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே. (௧௬)

436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே. (௧௭)

437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே. (௧௮)

438. அம்ம வுரையசை கேண்மினென் றாகும். (௧௯)

439. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல். (௨௦)

440. மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை. (௨௧)

441. யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றாந் தாந்தான் கின்றுகின் றசைமொழி. (உஉ)

ஆ சூத்திரம் - சசக.
ச - வது. இடையியல் முற்றிற்று.

## ரு. உரியியல்.

442. பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பல்குணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல். (க)

443. உயிருயி ரல்லதாம் பொருட்குணம் பண்பே. (உ)

444. மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும். (ஙு)

445. புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர். (ச)

446. முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர். (ரு)

447. சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர். (சு)

448. தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர். (எ)

449. வானவர் மக்க ணரகர் விலங்குபுள்
ஆதிசெவி யறிவோ டையறி வுயிரே. (அ)

450. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து முயிரல் பொருளே. (கூ)

451. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர். (கo)

452. அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம். (கக)

453. துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
உய்த்தலாதி யுடலுயிர்த் தொழிற் குணம். (கஉ)

454. பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம். (கக)

455. தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைத னடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம். (கச)

456. சால வுறுதவ நனிகூர் கழிமிகல். (கரு)

457. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னாகும். (கசு)

458. மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன்மொழி கிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே. (கஎ)

459. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
அரவ மார்ப்போ டின்னன வோசை. (கஅ)

460. இன்ன தின்னுழி யின்னன மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே. (கக)

461. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலின்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்த றெள்ளியோர் திறனே. (உ0)

462. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே. (உக)

உ-வது. சொல்லதிகாரம் முற்றிற்று.

ஐந்தாவது உரியியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - சகஉ.

---

கட்டளைக்கலித்துறை.

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டுரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

நன்னூல்மூலம் முற்றுப்பெற்றது.

---

கடவுடுணை.

# பொருளதிகாரம்.

# அகப்பொருள்விளக்கம்.

## சிறப்புப்பாயிரம்.

பூமிசை நடந்த வாமனை வாழ்த்தி
வடமலைச் சென்னி யீண்டிக் கடவுளர்
வேண்டலிற் போந்து குடங்கையி னலைகட
லடக்கி யீண்டிய தென்மலை யிருந்த
விருந்தவ னியற்றமிழ் கெழீஇ யவகப்
பொருடழீஇ நோக்கி வழிகொடுத்து நிறீஇ
வகுத்துப் புலப்படுத் தாங்கி கப்பி
லகப்பொருள் விளக்கம் பகர்ந் தெழுதினன்
செந்தமிழ் நாட்டு மைந்தன் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென் பவனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

பூமலி நாவன் மாமலைச் சென்னி
யீண்டிய விமையோர் வேண்டலிற் போந்து
குடங்கையில் விந்த நெடுங்கிரி மிகைதீர்த்
தலைகட லடக்கி மலயத் திருந்த
விருந்தவன் றன்பா லியற்றமி ழுணர்ந்த
புலவர்பன் னிருவருட் டலைவ னாகிய

தொல்காப் பியனரு ளொல்காப் பெரும்பொரு
ளகப்பொரு ளிலக்கண மகப்படத் தழீஇ
யிகப்பருஞ் சான்ரு ரிலக்கிய நோக்கித்
தொகுத்து முறைநிறீஇச் சூத்திரம் வகுத்தாங்
ககப்பொருள் விளக்கமென் றதற்கொரு நாமம்
புலப்படுத் திருளறப் பொருள்விரித் தெழுதினன்
மாந்தருந் தேவரும் வாழ்த்த முக்குடைக்கீ
ழேந்தெழி லரிமா னேந்துபொன் னணைமிசை
மதிமுன் றுகலிப் பவுதய மால்வரைக்
கதிரோ னிருந்தெனக் காண்டக விருந்து
தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய
வுத்தமன் புளிங்குடி யுய்யவந் தானெனு
மூத்தமி ழாசான் மைந்த னித்தலத்
திருபெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்க விராச நம்பியென் பவனே.

இச்சிறப்புப்பாயிரம் பிற்காலத்தது.

---

## முதலாவது

# அகத்திணையியல்.

1. மலர்தலை யுலகத்துப் புலவோ ராய்ந்த
வருந்தமி ழகப்பொருள் கைக்கிளை யைந்திணை
பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும். (௧)

2. அதுவே, புணர்ந்துறை யுலகிய லெனுந்திற மிரண்டினுந்
தொல்லியல் வழாமற் சொல்லப் படுமே. (௨)

3. அவற்றுள், கைக்கிளை யுடைய தொருதலைக் காமம். (௩)

4. ஐந்திணை யுடைய தன்புடைக் காமம். (௪)

5. பெருந்திணை யென்பது பொருந்தாக் காமம். (௫)

6. குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந்திணைக் கெய்திய பெயரே. (௬)

7. அவைதாம், முதற்பொருள் கருப்பொரு ளுரிப்பொரு ளென
முறை, முதற்பொருண் மூன்றினு முவலப் படுமே. (௭)

8. நிலமும் பொழுதுமென முதலிரு வகைத்தே. (௮)

9. வரையே சுரமே புறவே பழனந்
திரையே யவையவை சேர்தரு மிடனே
யெனவீ ரைவகைத் தனையிய னிலமே. (௯)

10. பெரும்பொழு தென்று சிறுபொழு தென்று
விரண்டு கூற்ற தியம்பிய பொழுதே. (௧௦)

11. காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனி லென்றுங்
இருமூன் றிறத்தது தெரிபெரும் பொழுதே. (௧௧)

12. மாலை யாமம் வைகறை யெற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும். (௧௨)

13. அவற்றுள், கூதிர் யாம முன்பனி யென்றிவை
யோதிய குறிஞ்சிக் குரிய வாகும். (௧௩)

14. வேனி னண்பகல் பின்பனி யென்றிவை
பான்மையி னுரிய பாலை தனக்கே. (௧௪)

15. மல்கு கார்மாலை முல்லைக் குரிய (௧௫)

16. இருள்புலர் காலை மருதத்திற் குரித்தே. (௧௬)

17. வெய்யோன் பாடு நெய்தற் குரித்தே. (௧௭)

18. மருத நெய்தலென் றிவையிரண் டற்கு
முரிய பெரும்பொழு திருமூன் றும்மே. (௧௮)

19. ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்
கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும். (௧௯)

20. விறற்சேய் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயின் மறப்புலி குடாவடி

கறையடி யியஞ் சிறுகுடி யருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்த
ளாரந் தேக்ககி லசோக நாகம்
வேர லவனந் தோரை யேனல்
கறங்கிசைத் தொண்டகங் குறிஞ்சியாழ் குறிஞ்சி
வெறிகோ ளவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தன் முழங்கிவீ ழருவியொடு
கொழுஞ்சுனை யாடல் குறிஞ்சிக் கருப்பொருளே. (உ0)

21. கன்னி விடலை காளை மீளி
யின்னகை யெயிற்றினை யெயின ரெயிற்றியர்
மறவர் மறத்தியர் புறவு பருந்தெருவை
கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு
குழிவறுங் கூவல் குராஅ மராஅ
வுழிஞ்சில் பாலை யோமை யிருப்பை
வழங்குகதிக் கொண்டன செழும்பதிக் கவர்ந்தன
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக்கருப் பொருளே. (உக)

22. நெடுமால் குறும்பொறை நாடன் றோன்றல்
வடுவில் கற்பின் மனைவி கிழத்தி
யிடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்
கான வாரண மான்முயல் பாடி
குறுஞ்சுனை கான்யாறு குல்லை முல்லை
நிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவங்

கொன்றை காயா மன்றலங் குருந்தந்
தாற்றுக் கதிர்வர கொடுசாமை முதிரை
யேற்றுப் பறைமுல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தரமுடன் வித்த
லவைகளை கட்ட லரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதன்
மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்
கழுமிய குரவையொடு கான்யா றென்றிவை
முழுதுட னுடன் முல்லைக்கருப் பொருளே. (௨௨)

23. இந்திர னூரன் பைந்தார் மகிழ்நன்
கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி
யுழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்
மழலை வண்டான மகன்றி னாரை
யன்னம் போதா நன்னிறக் கம்புள்
குருகு தாரா வெருமை நீர்நாய்
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூர்
யாறு மனைக்கிண றிலஞ்சி தாமரை
நாறிதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதஞ்
செந்நெல் வெண்ணெ லந்நெ லரிகிணை
மன்றன் முழவ மருத்யாழ் மருத
மன்றணி விழாக்கோள் வயற்களை கட்ட
லரிதல் கடாவிட லகன்குளங் குடைதல்
வருபுன லாடன் மருதக் கருப்பொருளே. (௨௩)

24\. வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும வல்குற் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்திய
ரளவர ளத்திய ரலைகடற் காக்கை
சுறவம் பாக்கம் பெறலரும் பட்டின
மூவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவுமீ னுப்பு விலைகளிற் பெற்றன
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
விளரியாழ் செவ்வழி மீனுப்புப் படுத்த
லுணங்கலை விற்றன்மீ னுணக்கல்புள் ளோப்ப
னெடுங்கட லாட னெய்தற் கருப்பொருளே. (உச)

25\. புணர்தலும் பிரிதலு மிருத்தலு மூடலு
மிரங்கலு மிவற்றி னிமித்தமு மெனவாங்
கெய்திய வுரிப்பொரு ளையிரு வகைத்தே. (உரு)

26\. அளவையி லின்பத் தைந்திணை மருங்கிற்
களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும். (உசு)

27\. இயற்கைப் புணர்ச்சி யிடந்தலைப் பாடு
பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டமென்
றுணர்த்திய களவிற் புணர்ச்சிநால் வகைத்தே. (உஎ)

28\. மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப. (உஅ)

29. அதுவே, காமஞ் சான்ற விளமை யோள்வயிற்
குறிப்பறி காறுங் குறுகாது நின்று
குறிப்படு நெஞ்சொடு கூற லாகும். (உக)

30. மறையோர் மன்னர் வணிகர் சூத்திர ரென
றிறையோர் தத்தமக் கெய்துமற் றதுவே. (௩0)

31. அதுவே; மொழிந்தோர் நால்வரு மொழிந்தைந் நிலத்துறை
யிழிந்தோர் தம்மு ளுயர்ந்தோரு மெய்துப. (௩க)

32. தெய்வந் தன்னினுங் கிழத்தி தன்னினு
மெய்தவும் படூஉ மியற்கைப் புணர்ச்சி. (௩உ)

33. இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி
முயற்சி யின்றி முடிவ தாகும். (௩௩)

34. உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்
கள்ளப் புணர்ச்சியிற் காதலற் குரிய. (௩௪)

35. பொருவிறந் தோர்க்குப் பெருமையு முரனு
நன்னுதற் கச்சமு நாணு மடனு
மன்னிய குணங்க ளாதலின் முன்ன
ருள்ளப் புணர்ச்சி யுரிய தாகும். (௩௫)

36. காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே (௩௬)

37. பகற்குறி யிரவுக் குறியெனும் பான்மைய
புகற்சியி னமைந்தோர் புணர்ச்சிநிக ழிடனே. (௩௭)

38. இல்வரை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி
யில்வரை யிகவா வியல்பிற் றாகும். (௩௮)

39. ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத்தாகு
நிறைதரு காதன் மறையினிற் பிரிவே. (௩௯)

40. அவற்றுள், ஒருவழித் தணத்தற்குப் பருவங்கூரார். (௪௦)

41. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவோ
ரிருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர். (௪௧)

42 களவு வெளிப்படா முன்னும் பின்னும்
விளையு நெறித்தென விளம்பினர் வரைவே. (௪௨)

43. நான்குவகைப் புணர்ப்பினுந் தான்றெருண்டு வரைதலும்
பாங்கனிற் பாங்கியிற் றெருளுற்று வரைதலுங்
களவு வெளிப்படா முன் வரைதலாகும். (௪௩)

44. உடன்போய் வரைதலு மீண்டு வரைதலு
முடன்போக் கிடையீ டுற்று வரைதலுங்
களவு வெளிப்பட்டபின் வரைத லாகும். (௪௪)

45. அவற்றுள், உடன்போய் வரைத லொருவகைத்தாகும். (௪௫)

46. அவன்மனை வரைதலுந் தன்மனை வரைதலு
மெனமீண்டு வரைத லிருவகைத் தாகும். (௪௬)

47. ஆற்றா றஞ்சினு மவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினுங் காப்புக்கைம் மிகினு
மாற்றுறத் தோன்று மறத்தொடு நிலையே. (௪௭)

48. தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்குஞ்

செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கு
நற்றாய் தந்தைதன் னையர்க் கறத்தொடு
நிற்குமென்ப நெறியுணர்ந்தோரே. (௪அ)

49. ஒருபுணர் வொழிந்தவற் றொருவழித் தணப்பவும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியவு
மிறைவனைச் செவிலி குறிவயிற் காணவு
மனைவயிற் செறிப்பவும் வருத்தங் கூறின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணு
மனநடைக் கிழத்தி யறத்தொடு நிற்கும். (௪௯)

50. முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளிற்
சின்மொழிப் பாங்கி செவிலிக் குணர்த்தும். (௫0)

51. செவிலிநற் றாய்க்குக் கவலையின் றுணர்த்தும். (௫௧)

52. நற்றா யறத்தொடு நிற்குங்காலைக்
குரவனுந் தன்னையுங் குறிப்பி னுணர்ப. (௫௨)

53. பாங்கி தலைவியை வினவுஞ் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையு
நற்றாய் தானும் வினவுஞ் செவிலியிற்
பொற்றொடிக் கிழத்தியை யுற்று நோக்கின். (௫௩)

54. ஆங்குடன் போயுழி யறத்தொடு நிற்ப
பாங்கியுஞ் செவிலியும் பயந்ததாயும். (௫௪)

55. களவின் வழிவந்த கற்பும் பொற்பமை
களவின் வழிவாராக் கற்புமென் றாங்கு
முற்படக் கிளந்த கற்பிரு வகைத்தே. (௫௫)

56. குரவரிற் புணர்ச்சி வாயிலிற் கூட்டமென்
றிருவகைத் தாகுங் கற்பிற் புணர்ச்சி. (ருசு)

57. அவற்றுள், களவின்வழி வந்த கற்பிற் புணர்ச்சி
கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே
யுடன்போய் வரைதலு முண்மையான. (ருஎ)

58. மறையிற் புணர்ச்சியு மன்றற் புணர்ச்சியு
மிறைவற் கெய்தலுண் டிருவகைக் கற்பினும். (ருஅ)

59. காதற் பரத்தையர் காமக் கிழத்தியர்
பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென்
றன்னவ ருரிய ரவை யிரண்டற்கும். (ருகூ)

60. அவருள், காதற் பரத்தையர் களவிற் குரியர். (சு0)

61. ஒழிந்தோர் மன்றற் புணர்ச்சிக் குரியர். (சுக)

62. பரத்தையிற் பிரிதலோ தற்குப் படர்த
லருட்டகு காவலொடு தூதிற் ககற
லுதவிக் கேக னிதியிற் கிகத்தலென்
றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே. (சுஉ)

63. அயன்மனைப் பிரிவயற் சேரியி னகற்சி
புறநகர்ப் போக்கிவை புரவலற் குரிய
பரத்தையிற் பிரியும் பருவத்தான. (சுங)

64. கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாத்
தழீஇய வயன்மனைத் தலைவன் பிரியும். (சுச)

65. பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையு
மின்னியல் விழவு மேதுவாக
வவனயற் சேரியி னகலுமென்ப. (௬௫)

66. விருந்தின் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்
டிளமரக் காவின் விளையாடற்கும்
புனலாடற்கும் புறநகர்ப்போகும். (௬௬)

67. ஊட லவ்வழிக் கூடுங் கிழத்திக்கு. (௬௭)

68. கொளைவல பாணன் பாடினிகூத்த
ரிளைஞர் கண்டோ ரிருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி யறிவர்
காமக் கிழத்தி காதற் புதல்வன்
விருந்தாற்றுமை யென்றிவை யூடன்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்க ளாகும். (௬௮)

69. ஓதற் றொழிலுரித் துயர் மூவர்க்கும். (௬௯)

70. அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே. (௭௦)

71. படைக்கலம் பயிறலும் பகடுபிற வூர்தலு
முடைத்தொழி லவர்க்கென வுரைத்திசி னோரே (௭௧)

72. அறப்புறங் காவ லொடு காவலெனச்
சிறப்புறு காவற் றிறமிரு வகைத்தே. (௭௨)

73. அவற்றுள், அறப்புறங்காவ லனைவர்க்கு முரித்தே, (௭௩)

74. மற்றைக் காவல் கொற்றவற்குரித்தே. (௭௪)

75. வேதமாந்தர் வேந்தரொன் றிருவர்க்குந்
தூதுபோதற் றொழிலுரித் தாகும். (எரு)

76. சிறப்புப் பெயர்பெறிற் செப்பிய விரண்டு
முதற்குரிமரபின வொழிந்தோ ரிருவர்க்கும். (எசு)

77. உதவியந்தண ரொழிந்தோர்க் குரித்தே. (எஎ)

78. பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவு
முரைத்தநால்வர்க்கு முரியவாகும். (எஅ)

79. இழிந்தோர்தமக்கு மிவற்றுண் மேம்பட்டவை
யொழிந்தன வாமென மொழிந்தனர் புலவர். (எகூ)

80. கல்விமுதலா வெல்லா வினைக்குஞ்
சொல்லி யகறலுஞ் சொல்லா தகறலு
முரியன் கிழவோன் பெருமனைக் கிழத்திக்கு. (அ0)

81. சொல்லா தகலினுஞ் சொல்லும் பாங்கிக்கு (அக)

82. குறிப்பி னுணர்த்தும் பெறற்கருங் கிழத்திக்கு. (அஉ)

83. காலிற் சேறலுங் கலத்திற் சேறலு
மூர்தியிற் சேறலு நீதியாகும். (அங)

84. புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வற்குக்
கலத்திற்சேறல் கடனன் றென்ப. (அச)

85. வலனுயர் சிறப்பின் மற்றை மூவர்க்குங்
குலம்பட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப. (அரு)

86. ஓதன் முதலா வோதிய வைந்தினும்
பிரிவோ னழுங்கற்கு முரிய ளுகும். (அசு)

87. இல்லத் தழுங்கலு மிடைச்சுரத் தழுங்கலு
மொல்லு மவற்கென வுரைத்திசி னோரே. (அஎ)

88. தலைவி தன்னையுந் தன்மனந் தன்னையு
மலமர லொழித்தற் கழுங்குவ தல்லது
செல்வத் தோன்றல் செல்லா னல்லன். (அஅ)

89. அவற்றுள், ஓதற்பிரிவுடைத் தொருமூன் றியாண்டே. (அகூ)

90. தூதிற்பிரிவுந் துணைவயிற் பிரிவும்
பொருள்வயிற்பிரிவு மோர்யாண் டுடைய. (கூ0)

91. பூத்தகாலைப் புனையிழை மனைவியை
நீராடியபின் னீராறுநாளுங்
கருவயிற்றுறூஉங் கால மாதலிற்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன். (கூக)

92. ஓதற் ககன்றோ னொழிந்திடை மீண்டு
போதற் கியையவும் புலம்பவும் பெறாஅன். (கூஉ)

93. தூதுந் துணையு மேதுவாகச்
சென்றோனவ்வினை நின்றுநீட்டித்துழிப்
புலந்துபாசறைப் புலம்பவும்பெறுமே. (கூங)

94. பூத்தமைசேடியிற் புரவலற்குணர்த்தலு
நீத்தமைபொருது நின்றுகிழவோனைப்
பழிக்குங்காமக் கிழத்தியைக்கழறலுங்
கிழவோற்கழறலும் வழிமுறைமனைவியைக்

கொழுநனொடுவெகுண்டெதிர் கோடலுமவனொடு
பாங்கொடுபொரத்தையைப் பழித்தனீங்கிப்
புறநகர்க்கணவனொடு போகிச்செறிமலர்ச்
சோலையுங்காவு மாலையங்கழனியு
மாலைவெள்ளருவியு மலையுங்கானமுங்
கண்டுவிளையாடலுங் கடும்புனல்யாறும்
வண்டிமிர்கமல வாவியுங்குளனு
மாடிவிளையாடலுங் கூடுங்கிழத்திக்கு. (கச)

95. வாயில்வேண்டலும் வாயினேர்வித்தலுஞ்
சேயிழையூட னீர்த்தலும்போயுழி
யவணலந்தொலைவுகண் டழுங்கலுமவன்வயிற்
செல்லவிரும்பலுஞ் சென்றவற்குணர்த்தலுஞ்
சொல்லியகூற்றெனச் சொல்லலுங்கிழவோன்
வரவுமீண்டுவந் தரிவைக்குணர்த்தலு
மணிநலம்பெற்றமை யறியான்போன்றவட்
பணிவொடுவினவுதலும் பாணற்குரிய. (கரு)

96. செலவிற்றேற்றலும் புலவியிற்றணித்தலும்
வாயில்வேண்டலும் வாயினேர்வித்தலுந்
தெரியிழைவிறலிக் குரியவாகும். (கசு)

97. செல்வம்வாழ்த்தலு நல்லறிவுகொளுத்தலுங்
கலனணிபுணர்த்தலுங் காமநுகர்புணர்த்தலும்
புலவிமுதிர்காலைப் புலன்கொளவேறுவிற்
றேற்றலுஞ் சேய்மை செப்பலும் பாசறை

மேற்சென் றுரைத்தலு மீண்டுவர வுரைத்தலுங்
கூற்றரு மரபிற் கூத்தற் குரிய. (கஎ)

98. மடந்தையை வாயில் வேண்டலும் வாயி
லுடன் படுத்தலுமவ ளூட றீர்த்தலுங்
கொற்றவற் குணர்த்தலுங் குற்றேவல் செய்தலுஞ்
சென்று முன்வரவு செப்பலுமவன்றிற
மொன்றிநின் றுரைத்தலும் வினைமுடி புணர்த்தலும்
வழியியல்பு கூறலும் வழியிடைக் கண்டன
மொழிதலு மிளையோர் தொழிலெனற் குரிய. (கஅ)

99. தீதுடைப் புலவி தீர்த்தலு மவன்வரல்
காதலிக் குரைத்தலுங் கண்டோர்க்குரிய. (கக)

100. இளமையும் யாக்கையும் வளமையு மேனவு
நிலையாத் தன்மை நிலையெடுத் துரைத்தலுஞ்,
செலவழுங் குவித்தலுஞ் செலவுடன் படுத்தலும்
பிறவு மெல்லா மறையோற்குரிய. (க00)

101. நன்மையி னிறுத்தலுந் தீமையி னகற்றலுஞ்
சொன்னவை பிறவுஞ் சூத்திரற்குரிய. (க0க)

102. சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயினேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்தலும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்தென
வினைவோற் றேற்றலும் பாகற்கியல்பே. (க0உ)

103. பிரிவுழி விலக்கலும் பிரிவுடன் படுத்தலும்
பிரிந்துழித் தேற்றலு மிருந்துட னிரங்கலும்
பிறவு முரிய விறைவிளைப்பாங்கிக்கு. (க0௩)

104. முன்வரு நீதியு முலகியன் முறைமையும்
பின்வரும்பெற்றியும் பிறவுமெல்லாந்
தெற்றெனக்கூறல் செவிலித்தாய்க்கு
முற்றவறிவர்க்கு முரியவாகும். (க0௪)

105. குடிப்பிறந்தோரை வடுப்படுத்துரைத்தலு
மனைவியைப்பழித்தலும் வாட்டாலூடலு
மனையவற்கழறலு மனைவிக்கமைந்த
வொழுக்கமுங் காமக் கிழத்தியர்க் குரிய. (க0௫)

106. கிழவோன் றன்னையுங் கிழத்தி தன்னையு
மிகழ்தலுந் தம்மைப் புகழ்தலு நிகழ்பொருள்
காத்தலும் பரத்தையர் கடனென மொழிப (க0௬)

107. பரத்தையர்காதற் பரத்தையைப் புகழ்லுந்
தம்மையிகழ்தலுந் தம்முளுங்கூறுப. (க0எ)

108. இளையர் கிழவோர்க் கிரவும் பகலுங்
களைதலில்லாக் கவசம்போல்வர். (க0அ)

109. இருவகைப் பாங்கரு மொருபெருங் குரிசிற்
கின்னுயிர்த் துணையா விருபெருங் குரவருந்
தன்னையளித்த தகைமையோரே. (க0௯)

110. தோழிசெவிலி மகளாய்ச்சூழலோ
ரோத்துணையாகிய சாத்தணிவித்தற்
குரியகாதன் மருவியதுணையே. (கக0)

111. செவிலி நற்றாய் தோழியாகி
யவல நீக்கி யறிவுமாசாரமுங்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே. (ககக)

112. அறிவர் கிழவோன் கிழத்தி யென்றிவர்க்
குறுதி மொழிந்த வுயர்பெருங் குரவர். (ககஉ)

113. ஒருவன் றனக்கே யுரிமை பூண்டு
வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்
காமக்கு வரைந்தோர் காமக்கிழத்தியர். (ககங)

114. யாரையு நயவா வியல்பிற் சிறந்த
சேரிப் பரத்தையர் மகளிராகிக்
காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர். (ககச)

115. அவருளும் வரைதற் குரியோருளரே. (ககரு)

116. மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனுந் தலைவியுந் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப. (ககசு)

முதலாவது. அகத்திணையியல் முற்றிற்று.

## உ-வது. களவியல்.

117. உளமலி காதற் களவெனப் படுவ
தொருநான்கு வேதத் திருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத் தியல்பின தென்ப. (க)

118. காட்சியையந் துணிவு குறிப்பறிவென
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை. (உ)

119. புணர்ப்பதும் பிரிப்பது மாகிய பால்களுட்
புணர்க்கும் பாலிற் பொருவிறந் தொத்த
கறைவேற் காளையுங் கன்னியுங் காண்ப
விறையோ னுயரினுங் குறைவின் றென்மனார் (௩)

120. மடமானோக்கி வடிவுங் கண்ட
விடமுஞ் சிறந்துழி யெய்து வதையம். (௪)

121. எழுதியவல்லியுந் தொழில்புனைகலனும்
வாடியமலருங் கூடியவண்டு
நடைபயிலடியும் படைபெயர்கண்ணு
மச்சமும்பிறவு மவன்பானிகழுங்
கச்சமிலையங் கடிவனவாகும். (௫)

122. அரிவைநாட்ட மகத்து நிகழ்வேட்கை
தெரியவுணர்த்துங் குறிசிற்கென்ப. (௬)

123. இயற்கைப்புணர்ச்சி வன்புறைதெளிவே
பிரிவுழிமகிழ்ச்சி பிரிவுழிக்கலங்க
லிடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம்
பாங்கிமதியுடன் பாடுபாங்கியிற்கூட்டம்
பாங்கமைபகற்குறி பகற்குறியிடையீ
டிரவுக்குறியே யிரவுக்குறியிடையீடு
வரைவுவேட்கை வரைவுகடாத
லொருவழித்தணத்தல் வரைவிடைவைத்துப்
பொருள்வயிற்பிரிதலென் றொருபதினேழுங்
களவிற்குரிய கிளவித்தொகையே. (௭)

124. தெய்வம்புணர்ப்பச் சிந்தைவேறாகி
எய்துங்கிழத்தியை யிறையோனென்ப. (௮)

125. கலந்துழிமகிழ்தலு நலம்பாராட்டலு
மேற்புறவணிதலு மென்னுமிம்மூன்றும்
போற்றியதெய்வப் புணர்ச்சியின்விரியே. (௯)

126. வேட்கையுணர்த்தன் மறுத்தலுடன்படல்
கூட்டமென்றிறைவியிற் கூட்டநால்வகைத்தே. (௧௦)

227. இரந்துபின்னிற்றற் கெண்ணலுமிரந்து
பின்னிலைநிற்றலு முன்னிலையாக்கலு
மெய்தொட்டுப்பயிறலும் பொய்பாராட்டலு
மிடம்பெற்றுத்தழாலும் வழிபாடுமறுத்தலு
மிடையூறுகிளத்தலு நீடுநினைந்திரங்கலு
மறுத்தெதிர்கோடலும் வறிதுநகைதோற்றலு
முறுவற்குறிப்புணர்த்தலு முயங்குதலுறுத்தலும்
புணர்ச்சியின்மகிழ்தலும் புகழ்தலும்பிறவு
முணர்த்தியதலைவியிற் புணர்ச்சியின்விரியே. (௧௧)

128. ஐயந்தீர்த்தல் பிரிவறிவுறுத்தலென்
றெய்தியவன்புறை யிருவகைத்தாகும். (௧௨)

129. அணிந்துழிநாணிய துணர்ந்துதெளிவித்தலும்
பெருநயப்புரைத்தலுந் தெய்வத்திறம்பேசலும்
பிரியேனென்றலும் பிரிந்துவருகென்றலு
மிடமணித்தென்றலு மென்றிவையாறு
மடனறத்தெரிந்த வன்புறைவிரியே. (௧௩)

130. தலைவன்மாற்றந் தலைவிதேற்றந்
தெளிவாமென்பர் தெளிந்திசினோரே. (கச)

131. செல்லுங்கிழத்தி செலவுகண்டுளத்தொடு
சொல்லலும்பாகனொடு சொல்லலுமிரண்டும்
பிரிவுழிமகிழ்ச்சியின் விரியெனக்கொளலே. (கரு)

132. மருளுற்றுரைத்த றெருளுற்றுரைத்தலென்
றிருவகைத்தாகும் பிரிவுழிக்கலங்கல். (கசு)

133. ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது
மாயமோவென்றலும் வாயில்பெற்றுய்தலும்
பண்புபாராட்டலும் பயந்தோர்ப்பழிச்சலுங்
கண்படைபெறாது கங்குனோதலுமெனு
மைந்தும்பிரிவுழிக் கலங்கல்விரியாகும். (கஎ)

134. தெய்வந்தெளிதல் கூடல்விடுத்தலென்
றிவ்வோர்மூவகைத் திடந்தலைப்பாடே. (கஅ)

135. தந்ததெய்வந் தருமெனச்சேறலு
முந்துறக்காண்டலு முயங்கலும்புகழ்தலு
முடன்புணராயத் துய்த்தலுமெனவைந்
திடந்தலைப்பாட்டி னிலக்கணவிரியே. (கக)

136. சார்தல்கேட்டல் சாற்றலெதிர்மறை
நேர்தல்கூடல் பாங்கிற் கூட்டலென்
றுங்கெழுவகைத்தே பாங்கியிற்கூட்டம். (உ௦)

137. தலைவன்பாங்கனைச் சார்தலும்பாங்கன்
றலைவனையுற்று வினாதலுந்தலைவ

னூற்றதுரைத்தலுங் கற்றறிபாங்கன்
கழறலுங்கிழவோன் கழற்றெதிர்மறுத்தலுங்
கிழவோற்பழித்தலுங் கிழவோன்வேட்கை
தாங்கற்கருமை சாற்றலும்பாங்கன்
றன்மனத்தழுங்கலுந் தலைவனொடழுங்கலு
மெவ்விடத்தெவ்வியற் றென்றலுமவனஃ
திவ்விடத்திவ்வியற் றென்றலும்பாங்க
னிறைவனைத்தேற்றலுங் குறிவழிச்சேறலு
மிறைவியைக்காண்டலு மிகழ்ந்ததற்கிரங்கலுந்
தலைவனைவியத்தலுந் தலைவியைவியத்தலுந்
தலைவன்றனக்குத் தலைவிநிலைகூறலுந்
தலைவன்சேறலுந் தலைவியைக்காண்டலுங்
கலவியின்மகிழ்தலும் புகழ்தலுந்தலைவியைப்
பாங்கியொடுவருகெனப் பகர்தலும்பாங்கியிற்
கூட்டலுமென்றீங் கீட்டுநாலாறுங்
காட்டியபாங்கற் கூட்டத்துவிரியே. (௨௧)

138. முன்னுறவுணர்தல் குறையுறவுணர்த
லிருவருமுளமழியவன்வரவுணர்தலென்
றொருமூன்றுவகைத்தே பாங்கிமதியுடன்பாடு. (௨௨)

139. நாற்றமுந்தோற்றமு மொழுக்கமுமுண்டியுஞ்
செய்வினைமறைப்புஞ் செலவும்பயில்வுமென்
றிவ்வகையேழினு மையமுற்றோர்தலு
மவ்வகை தம்மாலையந் தீர்தலு
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது

பல்வேறுகவர் பொருட் சொல்லி நாடலுமென
முன்னுற வுணர்தன் மூன்றாகும்மே. (உ௯)

140. பெட்ட வாயில்பெற் றிரவு வலியுறுத்தோன்
கன்னியுந் தழையு மேந்தி நண்ணி
யூர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவுழி
யாரோயிவர்மனத் தெண்ணம் யாதெனத்
தேர்தலு மெண்ணந் தெளிதலு மெனவாங்
கோரிண்டாகுங் குறையுற வுணர்தல். (உ௪)

141. கையுறை யேந்திவந் தவ்வகை வினவுழி
யெதிர்மொழி கொடுத்தலு மிறைவனை நகுதலு
மதியினவரவர் மனக்கருத் துணர்வுமென்
றிருவரு முளவழி யவன்வர வுணர்த
லொருமூன் றாகுந் தெரியுங்காலே. (உ௫)

142. ஈங்கன மியம்பிய விருநான்கு கிளவியும்
பாங்கி மதியுடன் பாட்டது விரியே. (உ௬)

143. இரந்துபின் னிற்றல்சேட் படைமடற் கூற்று
மடல்விலக் குடன்படன் மடற்கூற்றொழிதல்
குறைநயப்பித்த னயத்தல் கூட்டல்
கூடலாயங் கூட்டல் வேட்டலென்
றீரறு வகைத்தே யிருவரயிற் கூட்டம். (உ௭)

144. தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலுந் தலைவன் றலைவி

தன்னை யுயர்த்தலு நன்னுதற் பாங்கி
யறியாள் போன்று வினுதலு மிறையோ
னிறைவி தன்மை யியம்பலும் பாங்கி
தலைவி யருமை சாற்றலுந் தலைவ
னின்றி யமையாமை யியம்பலும் பாங்கி
நின்குறை நீயே சென்றுரை யென்றலும்
பாங்கியைத் தலைவன் பழித்தலும் பாங்கி
பேதைமை யூட்டலுங் காதலன் றலைவி
மூதறி வுடைமை மொழிதலும் பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறலுந்
தன்னிலை தலைவன் சாற்றலும் பாங்கி
யுலகிய லுரைத்தலுந் தலைமகன் மறுத்தலும்
பாங்கி யஞ்சியச் சுறுத்தலு மாங்கவன்
கையுறை புகழ்தலுந் தையன் மறுத்தலு
மாற்ரு நெஞ்சினோ டவன்புலத்தலுமவ
ளாற்றுவித் தகற்றலு மாகு நாலைந்து
மிரந்துபின் னிற்றற்குஞ் சேட் படுத்தற்கும்
பொருந்துவ வென்மனார் தெரிந்திசி னோரே. (உ௪)

145. இரந்துகுறை பெருது வருந்திய கிழவோன்
மடலே பொருளென மதித்தலும் பாங்கிக்
குலகின் மேல்வைத் துரைத்தலு மதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும் பாங்கி
தலைமக ளவயவத் தருமை சாற்றலுந்
தலைமகன் றன்னைத் தானே புகழ்தலு

மலர்மூலைப் பாங்கி யருளியல் கிளத்தலுங்
கொண்டு நிலைகூறலு மென்றிவை யேழு
மடற்கூற்றிற்கு மடல்விலக்கிற்குங்
கடவ வென்மனார் கற்றறிந் தோரே. (உக)

146. தலைவி யிளமைத் தன்மை பாங்கி
தலைவற் குணர்த்தலுந் தலைவன் றலைவி
வருத்திய வண்ண முரைத்தலும் பாங்கி
செவ்வி யருமை செப்பலுந் தலைவன்
செவ்வி யெளிமை செப்பலும் பாங்கி
யென்னை மறைத்தபி னெளிதென நகுதலு
மந்நகை பொறாஅ தவன்புலம் பலுமவ
டேற்றலுங் கையுறை யேற்றலுங் கிழவோ
னாற்றலு மென்னு மவ்வொன்பானுங்
குறைநேர்தற்கு மடற்கூற் றொழிதற்கு
முறைமையி னுரிய மூன்னுங் காலே. (௩௦)

147. இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி
யிறைவிக் கவன்குறை யுணர்த்தலு மிறைவி
யறியாள் போன்று குறியாள் கூறலும்
பாங்கி யிறையோற் கண்டமை பகர்தலும்
பாங்கியைத் தலைவி மறைத்தலும் பாங்கி
யென்னை மறைப்ப தென்னெனத் தழாஅலுங்
கையுறை புகழ்வுமென் றிவ்விரு மூன்று
மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தற்கும்
வலிதாகச் சொல்லி மறுத்தற்கு முரிய. (௩௧)

148. தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தலு
மறுத்தற் கருமை மாட்டலுந் தலைவன்
குறிப்பு வேறாக நெறிப்படக் கூறலுந்
தலைவியை முனிதலுந் தலைவிபாங்கி
தன்னை முனிதலுந் தன்கைக் கையுறை
யேற்றலு மெனமுறை சாற்றிய வாறும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தற்கு
மெலிதாகச் சொல்லி மேவற்கு முரிய. (நஉ)

149. இறைவி கையுறை யேற்றமை பாங்கி
யிறைவற் குணர்த்தலுங் குறியிடங் கூறலுங்
குறியிடத் திறைவியைக் கொண்டு சேறலுங்
குறியிடத் துய்த்து நீங்கலு மிறையோ
னிடத்தெதிர்ப் படுதலு மியைதலும் புகழ்தலும்
விடுத்தலும் பாங்கி மெல்லியற் சார்ந்து
கையுறை காட்டலு மையுறை கண்ணியைப்
பாங்கிற் கூட்டலு நீங்கித் தலைவற்
கோம்படை சாற்றலு முலகியன் மேம்பட
விருந்து விலக்கலும் பெருந்தகை விருந்திறை
விரும்பலு மென்னத் தெரிந்தபன் மூன்றுங்
கூட்டன் முதலா வேட்ட லீரும்
பாங்கிக்கு வகுத்த நான்கிற்கு முரிய (நந)

150. அற்றமில் சிறப்பினிவ் வறுபத் தொன்றுங்
குற்றமில் பாங்கியிற் கூட்டத்து விரியே (நச)

151. கூட்டல் கூடல் பாங்கிற் கூட்டல்
வேட்டலென் றொருநால் வகைத்தே பகற்குறி. (நரு)

152. குறியிடங் கூறன் முதலாப் பெறலரும்
விருந்திறை விரும்ப லீறாப் பொருந்தப்
பகர்ந்தபன் னிரண்டும் பகற்குறி விரியே. (௩௬)

153. இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்
றொருங்கிய மூவகைத் தொருசார் பகற்குறி. (௩௭)

154 கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்
பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலுந்
தலைவ னீடத் தலைவி வருந்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
முன்னிலைப் புறமொழி மொழிதலு மின்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும் பாங்கியச் சுறுத்தலு
நீங்கற் கருமை தலைவிநினைந் திரங்கலுந்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலுஞ்
சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தலு
முன்னிலைப் புறமொழி மொழிந்தறி வுறுத்தலு
முன்னின் றுணர்த்தலு முன்னின் றுணர்த்தி
யோம்படை சாற்றலு மேம்படு கிழவோன்
றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலு
மென்றவீ ரேழு மெல்லுக்குறி விரியே. (௩௮)

155. விலக்கல் சேறல் கலக்க மென்றாங்
கிகப்பின் மூவகைத்தே பகற்குறி யிடையீடு. (௩௯)

156. இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலு
மிறைவியைக் குறிவரல் விலக்கலு மிறைமக

ளாடிட நோக்கி யழிதலும் பாங்கி
யாடிடம்விடுத்துக்கொண் டகறலும் பின்று
ணெடுந்தகை குறிவயி னீடுசென் றிரங்கலும்
வறுங்கள நாடி மறுகலுங் குறுந்தொடி
வாழூஉர் நோக்கி மதிமயங் கலுமெனு
மேழும் பகற்குறி யிடையீட்டு விரியே. (௩0)

157. வேண்டன் மறுத்த லுடன்படல் கூட்டல்
கூடல்பா ராட்டல் பாங்கிற் கூட்ட
லுயங்க னீங்கலென் றென்பது வகைத்தே
யியம்பிப் போந்த விரவுக்குறி தானே. (௩க)

158. இறையோ னிருட்குறி வேண்டலும் பாங்கி
நெறியின தருமை கூறலு மிறையோ
னெறியின தெளிமை கூறலும் பாங்கி
யவனாட் டணியியல் வினாதலுங் கிழவோ
னவனாட் டணியியல் வினாதலு மவற்குத்
தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலு
மிறைவிக் கிறையோன் குறையறி வுறுத்தலு
நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தலு
நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தலு
நேர்ந்தமை பாங்கிநெடுந்தகைக் குரைத்தலுங்
குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதலு
மிறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தலு
மவட்கொண்டு சேறலுங் குறியுய்த் தகறலும்
வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதலும்

பெருமக ளாற்றின தருமை நினைந்திரங்கலும்
புரவலன் றேற்றலும் புணர்தலும் புகழ்தலு
மிறைமக னிறைவனைக் குறிவிலக் கலுமவ
னிறைவியை யில்வயின் விடுத்தலு மிறைவியை
யெய்திப் பாங்கி கையுறை காட்டலு
மிற்கொண் டேகலும் பிற்சென் றிறைவனை
வரவு விலக்கலும் பெருமகன் மயங்கலுந்
தோழி தலைமக ளயர்களைந்து விடுத்தலுந்
திருமகட் புணர்ந்தவன் சேறலு மென்றாங்
கிருபத் தேழு மிரவுக்குறி விரியே. (௪உ)

159. அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றாங்
கெல்லுக்குறி யிடையீ டிருவகைத் தாகும். (௪௩)

160. இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவியவட் குணர்த்தலும்
பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பலும்
புலந்தவன் போகலும் புலர்ந்தபின் வறுங்களந்
தலைவிகண் டிரங்கலுந் தன்றுணைக் குரைத்தலுந்
தலைமக ளவலம் பாங்கி தணித்தலு
மிறைவன் மேற்பாங்கி குறிபிழைப் பேற்றலு
மிறைவிமே லிறைவன் குறிப்பிழைப் பேற்றலு
மிறைவிமே லிறைவன் குறிப்பிழைப் பேற்றலு
மவள்குறி மருண்டமை யவளவற் கியம்பலு
மவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கியம்பலு
மென்பிழைப் பன்றென் றிறைவிநேர் தலுமென
வொன்றுபன் னொன்று மல்லகுறிக் குரிய. (௪௪)

161. தாயு நாயு மூருந் துஞ்சாமை
காவலர் கடுகுத னிலவு வெளிப்படுதல்
கூகை குழறுதல் கோழிகுரற் காட்டுத
லாகிய வேழுமல் லூர்க்குறித் தலைவன்
வருந்தொழிற் கருமை பொருந்துதற் குரிய. (௬௫)

162. இரட்டி யிவ்வாறு செப்பிய வொன்பதிற்
றிரட்டியு மிரவுக்குறி யிடையீட்டு விரியே. (௬௬)

163. அச்ச முவர்த்த லாற்றா மையென
மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே. (௬௭)

164. பருவரல் வினவிய பாங்கிக் கிறைவி
யருமறை செவிலி யறிந்தமை கூறலுந்
தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலுந்
தலைமக னூர்க்குச் செலவொருப் படுத்தலும்
பாங்கி யிறைவனைப் பழித்தலும் பூங்கொடி
யிறையோன் றன்னைநேர்ந் தியற்பட மொழிதலுங்
கனவுநலி புரைத்தலுங் கவினழி புரைத்தலுந்
தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டலுந்
துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லலு
மலர்பார்த் துற்ற வச்சக் கிளவியு
மாறுபார்த் துற்ற வச்சக் கிளவியுங்
காமமிக்க கழிபடர் கிளவியுந்
தன்னுட் கையாறெய் திடு கிளவியு
நெறிவிலக் குவித்தலுங் குறிவிலக் குவித்தலும்
வெறிவிலக் குவித்தலும் பிறவிலக் குவித்தலுங்
குரவரை வரைவெதிர் கொள்ளு வித்தலுமென

வுரைபெற வருத்த வொன்பதிற் றிரட்டியும்
வரைதல் வேட்கை விரியெனப் படுமே. (௬௯)

165. பொய்த்தன் மறுத்தல் கழறன் மெய்த்தலென்
றொருநால் வகைத்தே வரைவு கடாதல். (௭௧)

166. வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலு
மலரறி வுறுத்தலுந் தாயறி வுணர்த்தலும்
வெறியச் சுறுத்தலும் பிறர்வரை வுணர்த்தலும்
வரைவெதிர் வுணர்த்தலும் வரையுநா ளுணர்த்தலு
மறிவறி வுறுத்தலுங் குறிபெயர்த் திடுதலும்
பகல்வரு வானை யிரவுவரு கென்றலு
மிரவு வருவானைப் பகல்வரு கென்றலும்
பகலினு மிரவினும் பயின்றுவரு கென்றலும்
பகலினு மிரவினு மகலிவ ணென்றலு
முரவோ னூடு மூருங் குலனு
மரபும் புகழும் வாய்மையுங் கூறலு
மாறுபாரத் தூற்ற வச்சங் கூறலு
மாற்ருத் தன்மை யாற்றங் கூறலுங்
காவன்மிக வுரைத்தலுங் காமமிக வுரைத்தலுங்
கனவுநலி புரைத்தலுங் கவினழி புரைத்தலு
மெனமுறை நாடி யியம்பிய விருபதும்
வரைவு கடாதல் விரியெனப் படுமே. (௰௦)

167. செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை
செலவுடன் படுத்தல் செலவுடன் படுதல்

சென்றுழிக் கலங்க றேற்றியாற் றுவித்தல்
வந்துழி நொந்துரை யெனவெழு வகைத்தே
யொன்றக் கூறிய வொருவழித் தணத்தல். (௫௩)

168. தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலு
மென்சொற் பாங்கி விலக்கலுந் தலைவ
னீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலுந்
தலைவிக் கவன்செல வுணர்த்தலுந் தலைவி
நெஞ்சொடு புலத்தலுஞ் சென்றோ னீடலிற்
காம மிக்க கழிபடர் கிளவியுங்
கோற்றொடிப் பாங்கி யாற்றுவித் தலுமவன்
வந்தமை யுணர்த்தலும் வந்தோன் றன்னொடு
நொந்து வினாதலும் வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும் பாங்கி
யிறைவியை யாற்றுவித் திருந்த வருமை
கூறலு மென்னு மாறிரு கிளவியு
மொருவழித் தணத்தலின் விரியெனப் படுமே. (௫௪)

169. பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றிருமையிற் கூறிய வொன்பது வகைத்தே
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே. (௫௫)

170. என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றலு
நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலு

நீடே னென்றவ னீங்கலும் பாங்கி
யோடரிக் கண்ணிக் கவன்செல வுணர்த்தலும்
பூங்குழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற்
சொல்லலுந் தலைவி கொடுஞ்சொற் சொல்லலும்
வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும்
பருவங்கண்டு பெருமகள் புலம்பலு
மிகுளைவம் பென்றலு மிறைமகண் மறுத்தலு
மவர்தூ தாகிவந் தடைந்த திப்பொழுதெனத்
துணைவி சாற்றலும் பிணைவிழி யாற்றலு
மவனவட் புலம்பலு மவன்வரு காலைப்
பாகன் றன்னொடு மேகந் தன்னொடுஞ்
சோகங் கொண்டவன் சொல்லலும் பாங்கி
வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தலும்
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும் வந்துழி
நினைத்தமை வினவலு நினைத்தமை செப்பலு
மனைத்தகை யவளை யாற்றுவித் திருந்தமை
பாங்கிகூ றலுமெனு மாங்கெழு மூன்றும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவின்
விரியென மொழிந்தனர் தெரிமொழிப் புலவர். (ருஅ)

இரண்டாவது களவியல்முற்றிற்று.

ஆ சூத்திரம் - கஎ0.

## ௩-வது. வரைவியல்.

171. வரைவெனப் படுவ துரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவுங் கொடாமையுங்
கரணமொடு புணரக் கடியயர்ந்து கொளலே. (க)

172. வரைவு மலிவே யறத்தொடு நிற்றலென்
றுரையமை யிரண்டும் வரைவிற் குரிய
கிளவித் தொகையென கிளந்தனர் புலவர். (௨)

173. வரைவுமுயல் வுணர்த்தல் வரைவெதிர் வுணர்த்தல்
வரைவறிந்து மகிழ்தல் பராவல்கண் டுவத்தலென்
றொருநால் வகைத்தே வரைவு மலிதல். (௩)

174. காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக் குணர்த்தலுங் காதலி நற்று
யுள்ள மகிழ்ச்சி யுள்ளலும் பாங்கி
தமர்வரை வெதிர்ந்தமை தலைவிக் குணர்த்தலு
மவளுவகை யாற்று துளத்தொடு கிளத்தலுந்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவி
மணம்பொருட் டாக வணங்கைப் பராநிலை
காட்டலுங் கண்டோன் மகிழ்வுமென் றீட்டிய
விருமூன்று மொன்றும் வரைவு மலிதற்காம்
விரியென விளம்பினர் மெய்யுணர்ந் தோரே. (௪)

175. முன்னிலை முன்னிலைப் புறமொழி யென்றுங்
கன்ன விருவகைத் தறத்தொடு நிலையே. (௫)

176. கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலுந் தலைவன்
றெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
யெய்தக் கூறலு மிகந்தமை யியம்பலு
மியற்பழித் துரைத்துழி யியற்பட மொழிதலுந்

தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றலு
மில்வயிற் செறித்தமை சொல்லலுஞ் செவிலி
கனையிரு ளவன்வாக் கண்டமை கூறலு
மெனமுறை யியம்பிய வேழும் புனையிழைத்
தலைவி யறத்தொடு நிலைதனக் குரிய. (௬)

177. எறிவளை வேற்றுமைக் கேதுவி னாவினும்
வெறிவிலக் கியவழி வினாவினும் பாங்கி
பூவே புனலே களிறே யென்றிவை
யேதுவாகத் தலைப்பா டியம்பும். (எ)

178. மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழியுஞ் செவிலி. (அ)

179. என்றுட னியம்பிய வெல்லாங் களவிய
னின்றுழி யறத்தொடு நிற்றலின் விரியே. (௯)

180. போக்கே கற்பொடு புணர்ந்த கௌவை
மீட்சியென் றாங்கு விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் கிளவி வெளிப்படு தொகையே. (௧௦)

181. போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்த றேற்றலென்
றியாப்பமை யுடன்போக் கிருநான்கு வகைத்தே. (௧௧)

182. பாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தலு
மாங்கவன் மறுத்தலு மவளுடன் படுத்தலுந்

தலைவன் போக்குடன் படுதலும் பாங்கி
தலைவிக் குடன்போக் குணர்த்தலுந் தலைவி
நாணழி விரங்கலுங் கற்பு மேம்பாடு
பூண்முலைப் பாங்கி புகறலுந் தலைவி
யொருப்பட் டெழுதலும் விருப்புடைப் பாங்கி
சுரத்தியல் புரைத்துழிச் சொல்லலும் பாங்கி
கையடை கொடுத்தலும் வைகிருள் விடுத்தலு
மவன்சுரத் துய்த்தலு மசைவறிந் திருத்தலு
முவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தலுங்
கண்டோ ரயிர்த்தலுங் காதலின் விலக்கலுந்
தன்பதி யணிமை சாற்றலுந் தலைவன்
றன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலு
மென்றிவை யொன்பதிற் றிருவகைக் கிளவியு
மொன்றிய வன்பி னுடன்போக்கு விரியே. (௧௨)

183. செவிலி புலம்ப னற்றாய் புலம்பல்
கவர்மனை மருட்சி கண்டோ ரிரக்கஞ்
செவிலிபின் றேடிச் சேறலென் றாங்குக்
கற்பொடு புணர்ந்த கௌவையை வகைத்தே (௧௩)

184. வினவிய பாங்கியி னுணர்ந்தகாலை
யினைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதலுந்
தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தலுந்
தெய்வம் வாழ்த்தலு மிவ்வொரு மூன்று
மிலங்கிழைச் செவிலி புலம்புதற் குரிய. (௧௪)

185. செவிலி யறத்தொடு நிற்றலிற் கவலையிற்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடு
மயலார் தம்மொடும் பயிலிடந் தம்மொடுந்
தாங்கல ளாகிச் சாற்றிய வெல்லாம்
பூங்கொடி நற்றாய் புலம்பற் குரிய. (௧௫)

186. நிமித்தம் போற்றலுஞ் சுரந்தணி வித்தலுந்
தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கலு
மிளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலு
மச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலு
மெனவிவை யைந்து மனைமருட்சிக் குரிய. (௧௬)

187. ஆயமுந் தாயு மழுங்கக் கண்டோர்
காதலி னிரங்கல் கண்டோ ரிரக்கம். (௧௭)

188. ஆற்றாத தாயைத் தேற்றலு மாற்றிடை
முக்கோற் பகவரை வினாதலு மிக்கோ
ரேதுக் காட்டலு மெயிற்றியொடு புலம்பலுங்
குரவொடு புலம்பலுஞ் சுவடுகண் டிரங்கலுங்
கலந்துடன் வருவோர்க் கண்டுகேட்டலுமவர்
புலம்ப றேற்றலும் புதல்வியைக் காணாது
கவலை கூர்தலு மெனவொன் பானுஞ்
செவிலிபின் றேடிச் சேறற் குரிய. (௧௮)

189. முற்பட மொழிந்த முறையெழு மூன்றுங்
கற்பொடு புணர்ந்த கௌவையின் விரியே. (௧௯)

190. தெளிதன் மகிழ்ச்சி வினாதல் செப்பலென
வெளிப்பட வுரைத்த மீட்சிநால் வகைத்தே. (௨௦)

191. தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்தலுந்
தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றலுந்
தலைவிமுன் செல்வோர் தம்மொடு தன்வரல்
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தலு மாங்கவர்
பாங்கியர்க் குணர்த்தலும் பாங்கியர் கேட்டு
நற்றாய்க் குணர்த்தலு நற்றாய் கேட்டவ
ளுளங்கொள் வேலனை வினாதலு மெனவுடன்
விளம்பிரு மூன்று மீட்சியின் விரியே. (௨௧)

192. மடந்தை யுடன்போய் வரைந்து மீடற்கு
மவண்மனை வரைதற்குந் தன்மனை வரைதற்கு
மிவையைந் துமுரிய செவிலிகூற் றொழித்தே. (௨௨)

193. வினாதல் செப்பன் மேவலென் றிறைவன்
றனாதில் வரைத றான்மூ வகைத்தே. (௨௩)

194. பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினாதலுஞ் செவிலிக் கிகுளை
வரைந்தமை யுணர்த்தலும் வரைந்தமை செவிலி
நற்றாய்க் குணர்த்தலு முற்றாங் கிருவருந்
தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்
கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றலுந்
தானது முன்னே சாற்றிய துரைத்தலு
மென்னு மிவ்வைந்து மின்னிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே. (௨௪)

195. ஆதி யொன்றொழித் தல்லன நான்கு
மாதினை யுடன்போய் வரைந்து மீடற்கு
நீதியி னுரிய நினையுங் காலை. (௨௫)

196. இருவ ரில்லிற்கு மியைந்த பன்னொன்று
மொருவகை மீண்டு வரைதலின் விரியே. (உ௬)

197. போக்கறி வுறுத்தல் வரவறி வுறுத்த
னீக்க மிரக்கமொடு மீட்சி யென்றாங்
குடன்போக் கிடையீ டொருநால் வகைத்தே. (உ௭)

198. நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செல வுணர்த்தி விடுத்தலுந் தலைமக
டன்செல வின்றாட் குணர்த்தி விடுத்தலு
மின்றாட் கந்தணர் மொழிதலு மின்றா
ளறத்தொடு நிற்றலிற் றமர்பின் சேறலைத்
தலைவி கண்டு தலைவற் குணர்த்தலுந்
தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தலுந்
தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக்
கவன்றாற் றலுமென நுவன்றவை யாறு
முடன்போக் கிடையீட்டு விரியா கும்மே. (உ௮)

199. தன்னூர் வரைதலுந் தன்மனை வரைதலு
மென்னுமிவ் விரண்டொழித் தெவற்றினுங் கிழவோ
னந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலந்
தந்து வரைத றகுதி யென்ப. (உ௯)

மூன்றாவது வரைவியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - ௧௧௯.

## ௪-வது. கற்பியல்.

200. பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வு மூடலு மூட லுணர்த்தலும்
பிரிவும் பிறவு மருவிய தாகும். (௧)

201. இல்வாழ்க் கையியே பரத்தையிற் பிரிவே
யோதற் பிரிவே காவற் பிரிவே
தூதிற் பிரிவே துணைவயிற் பிரிவே
பொருள்வயிற் பிரிவெனப் பொருந்திய வேழும்
வளமலி கற்பிற் கிளவித் தொகையே. (உ)

202. கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்
றீங்கு நால்வகைத் தில்வாழ்க் கையியே. (ங)

203. தலைவன் றலைவிமுன் பாங்கியைப் புகழ்தலுந்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவியை
வரையுநா ளளவும் வருந்தா திருந்தமை
யுரையா யென்றலும் பெருமக ளுரைத்தலுந்
தலைவனைப் பாங்கி வரையு நாளளவு
நிலைபெற வாற்றிய நிலைமை வினாதலு
மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை
யன்புற வுணர்த்தலும் வாழ்க்கைநன் றறைதலும்
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பிய னற்றாய்க் குணர்த்தலு
நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தலு
மன்னவர் காத லறிவித் தலுமெனு
மின்னவை பத்து மில்வாழ்க்கை விரியே. (௪)

204. வாயில் வேண்டல் வாயின் மறுத்தல்
வாயினேர் வித்தல் வாயி னேர்தலென்
றுயபரத்தையி னகற்சிநால் வகைத்தே (ரு)

205. காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்
கேது விதாமவ் விறைவிக் கென்றலுந்
தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கலு
மீங்கிது வென்னெனப் பாங்கி வினாதலு
மிறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி
யவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறலும்
பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தைய
ருலகிய னோக்கி விடுத்தலிற் றலைவன்
வரவுகண் டுவந்து வாயில்கண் மொழிதலும்
வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தலு
முதிரா விளமுலை யெதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியின் மகிழ்வுமென் றுணர்த்துபன் னொன்று
முணர்த்த வுணரு மூடற் குரிய. (௬)

206. வெள்ளணி யணிந்து விடுத்துழிப் புள்ளணி
மாலைவே லண்ணல் வாயில் வேண்டலுந்
தலைவிநெய் யாடிய திருவை சாற்றலுந்
தலைவன் றன்மனத் துவகை கூர்தலுந்
தலைவிக் கவன்வரல் பாங்கி யுணர்த்தலுந்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்கி யீறாப்
பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்
டிறையோன் மகிழ்தலு மிறைமகள் விருந்துகண்
டொளித்த வூடல் வெளிப்பட நோக்கிச்

சீறே லென்றவள் சீறடி தொழலுமிஃ
தெங்கையர் காணி னன்றன் றென்றலு
மங்கவர் யாரையு மறியே னென்றலுங்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலுந்
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலுந்
தணியா ளாகத் தலைமக னூடலு
மணிவளைப் பாங்கி யன்பிலைகொடி யையென்
றிணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவு
மூணர்த்த வுணரா வூடற் குரிய. (எ)

207. ஆயிழை மைந்தனு மாற்ரு மையுமே
வாயில் களாக வரவெதிர் கோடலு
மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ
டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தலுந்
தலைவனைப் புகழ்தலுஞ் சிலைநுதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலு மினையவை பிறவு
மனைவகை மொழிந்த வதன்பாற் படுமே. (அ)

208. மூன்று சூத்திரத்து மொழிந்தவை யெல்லா
மான்ற பரத்தையி னகற்சியின் விரியே. (கூ)

209. பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன்படுத்தல் பிரிவுடன்படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றொருமையிற் கூறிய வொன்பது வகைய
கல்வி முதலா வெல்லாப் பிரிவும். (கo)

நான்காவது கற்பியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - உoக.

## ரு-வது. ஒழிபியல்.

210. ஒழிபெனப் படுவ தகப்பாட் டுறுப்பும்
வழுவி னமைதியுந் தழுவிய தாகும். (க)

211. திணையே கைகோள் கூற்றே கேட்போ
ரிடனே காலம் பயனே முன்ன
மெய்ப்பாடெச்சம் பொருள்வகை துறையென
வப்பா லாறிரண் டகப்பாட்டுறுப்பே. (உ)

212. அவற்றுள், முன்னவை யிரண்டுஞ் சொன்னவை யாகும். (௩)

213. தலைவன் றலைவி பார்ப்பான் பாகன்
பாங்கி செவிலியென் றீங்கிவ் வறுவருஞ்
சாற்றிய களவிற் கூற்றிற் குரியர். (ச)

214. நற்றாய் கண்டோர் பாணன் கூத்தர்
விறலி பரத்தைய ரறிவரென் றெழுவரு
மறுவகை யவரு மாகிய வனைவருங்
குறைவறு கற்பிற் கூற்றிற் குரியர். (ரு)

215. பயந்தோன் றன்னை யுயங்குநோ யறிவோ
ருரவ ரயலோர் சேரியோ ரென்றிவர்
முகத்துரை நிகழா ரகப்பொரு ளகத்தே. (சு)

216. தமர்வரி னிடைச்சுரந் தன்னிற் கிழத்தியோ
டமர்தரு கிழவோ னுணையுங் கூறும். (எ)

217. உடன்போய் மீண்ட கொடுங்குழை மடந்தை
பிரிவுழித் தலைவனொடு சுரத்தியல் புகலலும்

பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச்
சொல்லலு முரியள் சொல்லுங் காலை. (அ)

218. தலைவன் றலைவியொடு நற்றாய் கூறுள். (கூ)

219. புணர்ந்துடன் போய துணர்ந்த பின்ன
ரந்தணர் தெய்வ மயலோ ரறிஞர்
சிந்தைகோ யறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க் குரைக்கும் பண்புடை நற்றாய். (கய)

220. தாயொடும் பாங்கி தான்முத லாரொடுஞ்
சேயிழைச் செவிலியுஞ் செப்பு மாங்கே. (கக)

221. தாயர் பாங்கியர் தலைவன் றலைவியோ
டேயு மென்ப கண்டோர் கூற்றே. (கஉ)

222. சாற்று வெழுவருந் தலைவன் றலைவியோ
டேற்றன கூறுப விடந்தொறு மிடந்தொறும். (கங)

223. நெஞ்சு நாணு நிறைசே ரறிவுஞ்
செஞ்சுடர்ப் பரிதியுந் திங்களுமாலையும்
புள்ளு மாவும் புணரியுங் கானலு
முள்ளுறுத் தியன்றவு மொழிந்தன பிறவுந்
தன்சொற் கேட்குந போலவுந் தனக்கவை
யின்சொற் சொல்லுந போலவு மேவல்
செய்குந போலவுந் தேற்றுந போலவு
மொய்குழற் கிழத்தி மொழிந்தாங் கமையும். (கச)

224. இம்முறை யோரும் யாரொடு மின்றித்
தம்மொடு தாமே சாற்றியு மமைப. (கரு)

225. கிழவோன் கூற்றுங் கிழத்தி கூற்றும்
பழமறை யோன்முதற் பதின்மருங் கேட்ப. (கக)

226. மறையோன் கூற்று மறிஞர் கூற்று
மிறையோன் முதலா வெனைவருங் கேட்ப. (கஎ)

227. நெறிப்படு கரும நிகழ்வுழி யிடனே. (கஅ)

228. சென்றது நிகழ்வது மெதிர்வது மெனமுறை
நின்று பொருளுணர நிகழ்வது காலம். (கக)

229. இப்பொருள் பயக்குமிஃ தென்பது பயனே. (உ0)

230. இன்னோர்க் கின்னுழி யின்னது பயக்குமென
முன்னந் தருவது முன்ன மாகும். (உக)

231. நகைமுதலாவிரு நான்குமெய்ப்பாடு
நிகழ்பொருண்மெய்ப்பட நிற்பமெய்ப்பாடே. (உஉ)

232. சொல்லேயாயினுங் குறிப்பேயாயினுஞ்
சொல்லிமுடித்தல் வேண்டுவதெச்சம். (உ௩)

233. ஒருதிணைக்குரிமை பூணுநிலைமை
பொருள்வகையென்மனோர் புலமையோரே. (உச)

234. சொல்லியவல்ல வொன்றினும்வற்றொ
டொல்லும்வகைதேர்ந் துணர்த்தியல்வழாம
லுரைப்போர்கேட்போ ருண்மையின்றி
யுரைக்குங்கவியே யுரைப்பதுதுறையே. (உரு)

235. அவற்றுள், எச்சமின்றியு மியலுமென்ப. (உகூ)

236. உவமப்பொருளு மிறைச்சிப்பொருளு
மெனவிருபொருளு மெய்தும்பாட்டினுள். (உஎ)

237. உள்ளுறையுவமம் வெளிப்படையுவமமென
வுள்ளுறையுவம மிருவகையுடைத்தே. (உஅ)

238. அவற்றுள், உள்ளுறையுவம முய்த்துயர்வகைத்தாய்ப்
புள்ளொடும்விலங்கொடும் பிறவொடும்புலப்படும். (உகூ)

239. வெளிப்படையுவமம் வினைபயன்மெய்யுரு
வெளிப்படநின்று விளங்குவதாகும். (௩0)

240. கருப்பொருட்பிறக்கு மிறைச்சிப்பொருளே. (௩க)

241. காமஞ்சாலா விளமையோள்வயிற்
குறிப்பறிவுறாது குறுகியாங்கவளோ
டிறப்பக்கூறவ. தகப்புறக்கைக்கிளை. (௩உ)

242. அதுவே, இறைமையில்லோர்க்கு மிழிகுலத்தோர்க்கு
முறைமையினுரித்தே முன்னுங்காலை. (௩௩)

243. அகன்றுழிக்கலங்கலும் புகன்றமடற்கூற்றுங்
குறியிடையீடுந் தெளிவிடைவிலக்கலும்
வெறிகோள்வகையும் விரைந்துடன்போக்கும்
பூப்பியலுரைத்தலும் பொய்ச்சூளுரையுந்
தீர்ப்பிலூடலும் போக்கழுங்கியல்பும்
பாசறைப்புலம்பலும் பருவமாறுபடுதலும்
வன்புறையெதிர்ந்து மொழிதலுமன்புறு
மனைவியுந்தானும் வனமடைந்தோற்றலும்
பிறவுமகப்பொருட் பெருந்திணைக்குரிய. (௩ச)

244. மடலேறுதலொடு விடைதழாலென்று
குற்றிசைதன்னொடு குறுங்கலியென்று
சுரநடைதன்னொடு முதுபாலையென்று
தாபதநிலையொடு தபுதாரநிலையெனப்
புகன்றவையியற்பெயர் பொருந்தாவாயி
னகன்றவகப்புறப் பெருந்திணைத்தாகும். (ஙரு)

245. பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைவனெனப்
பாட்டினுட்பாடப் படுவோரிருவர். (ஙசு)

246. அவருள், உயர்ந்தோன்பாட்டுடைத் தலைவனாகும். (ஙஎ)

247. நிலைப்பெயர்வினைப்பெயர் பண்புகொள்பெயரொடு
குலப்பெயரியற்பெயர் கூறுபவவர்க்கே. (ஙஅ)

248. அவற்றுள், இயற்பெயர்கிளவித் தலைவற்கிசையார். (ஙக)

249. இருவருமொருங்கே வருதலுந்தனித்தனி
வருதலுமிருவரும் வாராதொழிதலு
முரியவென்மனா ருணர்ந்திசினோரே. (சo)

250. அகப்புறப்பாட்டு மிகப்பிலவவையே. (சக)

251. முத்திறப்பொருளுந் தத்தந்திணையொடு
மரபின்வாராது மயங்கலுமுரிய. (சஉ)

ஐந்தாவது ஒழிபியல்முற்றிற்று.

ஆக சூத்திரம் - உருக.

அகப்பொருள்விளக்கம் முற்றுப்பெற்றது.

கடவுடுணை.

# புறப்பொருள்

## வெண்பாமாலை.

## சிறப்புப்பாயிரம்.

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோ
னோங்கிய சிறப்பி னுலக முழுதாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் பெருமா
னைய னாரித னகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

## முதலாவது வெட்சிப்படலம்.

வெட்சிவெட்சிய ரவம்விரிச்செலவு
வேயேபுறத்திறை யூர்கொலையாகோள்
பூசன்மாற்றே புகழ்சுரத் துய்த்த
றலைத்தோற்றம்மே தந்துநிறைபாதீ

டுண்டாட்டுயர்கொடை புலனறிசிறப்பே
பிள்ளைவழக்கே பெருந்துடிநிலையே
கொற்றவைநிலையொடு வெறியாட்டுளப்பட
வெட்டிரண்டேனை நான்கொடுதொகைஇ
வெட்சியும்வெட்சித் துறையுமாகும்.

வெட்சி * வென்றிவேந்தன் பணிப்பவும்
† பணிப்பின்றியுஞ் சென்றுதன் முனையாதந்தன்று.

அவற்றுள், மன்னுறுதொழில் வருமாறு.

1. மண்டு மெரியுண் மரந்தடிந்திட் டற்றுக்
கொண்ட கொடிஞ்சிலையான் கோறெரியக் - கண்டே
யடையார் முனையலற வையிலைவேற் காளை
விடையாயங் கொள்கென்றான் வேந்து. (க)

தன்னுறுதொழில் வருமாறு.

2. அறாஅ நிலைச்சாடி யாடுறுதேறன்
மறாஅய் மழைத்தடங் கண்ணி - பொறாஅன்
கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை
நெடுங்கடைய நேரார் நிரை. (உ)

வெட்சியரவம்-கலவார் முனைமேற் செலவமர்ந்தன்று -வ-று

3. நெடிபடு கானத்து நீள்வேன் மறவ
ரடிபடுத் தாரதர் செல்வான் - முடிபடுத்து
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுட் காரி கலுழ்ம். (ங)

---

* வென்றிவேந்தன் பணிப்பவென்பது=மன்னுறுதொழில்.
† பணிப்பின்றி யென்பது=தன்னுறுதொழில்.

விரிச்சி—வேண்டிய பொருளின் விளைவுநன்கறிதற்
கிண்டிருண் மாலைச் சொல்லோர்ந்தன்று. வ-று.

4. எழுவணி சீறூ ரிருண்மாலைமுன்றிற்
குழுவினங் கைகூப்பி நிற்பத் - தொழுவிற்
குடக்கணீ கொண்டுவா வென்று டணிவிற்
றடக்கையாய் வென்றிதரும. (௪)

செலவு—வில்லேருழவர் வேற்றுப்புல முன்னிக்
கல்லேர் கானங்கடந்து சென்றன்று. வ-று.

5. கூற்றினத் தன்னார் கொடுவி லிடனேந்திப்
பாற்றினம் பின்படர முன்படர்ந் - தேற்றின
நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
குன்றங் கொடுவில் லவர். (௫)

வேய் - என்பது. பற்றார் தம்முனைப் படுமணி யாயத்
தொற்றுராய்ந்த வகையுரைத் தன்று. வ-று.

6. நிலையு நிரையு நிரைப்புறத்து நின்ற
சிலையுஞ் செருமுனையுள் வைகி - யிலைபுனைந்த
கள்ளவிழ்தார் வென்றிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர். (௬)

புறத்திறை-எ-து. நோக்கருங் குறும்பி னூழையும் வாயிலும்
போக்கறவளைஇப் புறத்திறுத்தன்று. வ-று.

7. உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோன்
முந்தமருளேற்றார் முரண்முருங்கத் - தந்தமரி

ஞேற்றிஞ னுய்ந்தாய்ந் துறுவலி யோரரணஞ்
சுற்றினூர் போகாமற் சூழ்ந்து. (எ)

ஊர்கொலை - எ-து. விரைபரிகடவி வில்லுடை மறவர்
குரையழ னடப்பக் குறும்பெறிந் தன்று. வ-று.

8. இகலே துணையா வெரிதவழச் சீறிப்
புகலே யரிதென்னூர் புக்குப் - பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு. (அ)

ஆகோள் - எ-து. வென்றூர்த்து விறன் மறவர்
கன்றோடு மாதழீஇ யன்று. வ-று.

9. கொடுவரி கூடிக் குழூஉக் கொண்டனைத்தா
னெடுவரை நீள்வேய் நரலு - நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிண நிரை வேலார் நிலை. (க)

பூசன்மாற்று - எ-து. கணம்பிறங்கக் கைக்கொண்டார்
பிணம் பிறங்கப் பெயர்திட் டன்று. வ-று.

10. சூழ்ந்தநிரைபெய ரச்சுத் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணிய - தாழ்ந்த
குலவுக் கொடிஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள். (கo)

சுரத்துய்த்தல் - எ-து. அருஞ்சுரத்து மகன்கானத்தும்
வருந்தாம னிரையுய்த் தன்று. வ-று.

11. புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான் - றன்மேற
கடுவனா நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவனா நீழ னிரை. (கக)

தலைத்தோற்றம் - எ-து. உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந் தன்று. வ-று.

12. மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு
மையணற் காளை மகிழ்துடி - கையணல்
வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனுடை
வுய்த்தன் றுவகை யொருங்கு. (கஉ)

தந்துநிறை - எ-து. வார்வலந்த துடிவிம்ம
வூர்புக நிரையுய்த் தன்று. வ-று.

13. தண்டா விருப்பின டன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று - கண்டா
லணிநிரை வாண்முறுவ லம்மா வெயிற்றி
மணிநிரை மல்கிய மன்று. (கங)

பாதீடு - எ-து. கவர்கணைச் சுற்றங் கவர்ந்த கணநிரை
யவரவர் வினைவயி னறிந்தீந் தன்று. வ-று.

14. ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை. (கச)

உண்டாட்டு - எ-து. தொட்டிமிழுங்கழன் மறவர் மட்டுண்டு மகிழ்தூங் கின்று. வ-று.

15. இளிகொண்ட தீஞ்சொ லிளமா வெயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத்-தெளிகொண்ட
வெங்கண்மலிய விளிவதுகொல் வேற்றூர்மேற்
செங்கண் மறவர் சினம். (கரு)

கொடை - எ-து. ஈண்டியநிரையொழிவின்றி வேண்டியோர்க்கு விரும்பியீ சின்று. வ-று.

16. அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகுஞ் - செங்கட்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையாற் றந்தவளம். (கசு)

புலனறிசிறப்பு-எ-து. வெம்முனை நிலையுணர்த்தி யோர்க்குத் தம்மினு மிகச்சிறப்பீந் தன்று. வ-று.

17. இருமுறையெண்ணு திரவும் பகலுஞ்
செருமுனையுட் சென்றறிந் துவந்தார் - பெருமுறையி
னட்டுக் கனலு மயில்வேலோ யொன்றிரண்
டிட்டுக் கொடுத்த வியல்பு. (கஎ)

பிள்ளைவழக்கு - எ-து. பொய்யாது புண்மொழிந்தார்க்கு வையாது வழக்குணாத் தன்று. வ-று.

18. புல்லார் நிரைகருதி யாஞ்செல்லப் புண்ணலம்
பல்லா ரறியப் பகர்ந்தார்க்குச் - சொல்லாற்

கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுரையா னன்கு
குடஞ்சுட்டி னத்தாற் கொடு. (௧௮)

துடிநிலை - எ-து. தொடுகழன் மறவர் தொல்குடி மரபிற்
படுகண்மிழ்துடிப் பண்புரைத் தன்று. வ-று.

19. முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வ
ரெந்தைக்குத் தந்தை யிவனெனக்கு - வந்து
குடியொடு கோடா மரபினற் கின்னும்
வடியுறு தீந்தேறல் வாக்கு. (௧௯)

கொற்றவைநிலை - எ-து. ஒளியி னீங்கா விறற்படையோ
ளளியி னீங்கா வருளுரைத் தன்று. வ-று.

20. ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்
கூளி மலிபடைக் கொற்றவை - மீளி
யரண்முருங்க வாகோள் கருதி னடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும். (௨௦)

வெறியாட்டு - எ-து. வாலிழையார் வினைமுடிய
வேலனொடு வெறியா டின்று. வ-று.

21. காணிலரனுங் களிக்குங் கழன்மறவன்
பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண் - வாணுத
லின்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப
வேன்முருகற் காடும் வெறி. (௨௧)

முதலாவது வெட்சிப்படலம் முற்றிற்று.
ஆக வெண்பா - ௨௧.

## உ-வது. கரந்தைப்படலம்.

கதமில் கரந்தை கரந்தை யரவ
மதரிடைச் செலவே யரும்போர் மலைதல்
புண்ணொடு வருதல் போர்க்களத் தொழித
லாளெறி பிள்ளை பிள்ளைத் தெளிவே
பிள்ளை யாட்டொடு கையறு நிலையே
நெடுமொழி கூறல் பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியன் மலிவே மிகுகுடி நிலையென
வருங்கலை யுணர்ந்தோ ரவைபதி னொன்குங்
கரந்தையுங் கரந்தைத் துறையு மென்ப.

கரந்தை - எ-து. மலைத்தெழுந்தோர்மறஞ்சாயத்
தலைக்கொண்டு நிரைபெயர்த் தன்று. வ-று.

22. அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற் - செழுங்குடிக
டாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோட
னேரார்கைக் கொண்ட நிரை. (க)

கரந்தையரவம் - எ-து. நிறைகோடல்கேட்டுச் செய்தொழி
லொழிய, விரைவினர் குழூஉம் வகையுரைத் தன்று. வ-று.

23. காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட
வேலார் வெருவந்த தோற்றத்தார் - காலன்
கிளர்ந்தாலும் போல்வார் கிளைப்பூசல் கேட்டே
யுளர்ந்தார் நிலைபெயர்வு முண்டு. (உ)

அரிதரிடைச்செலவு -எ-து. ஆற்ருெழியக் கூற்றெனச் சினைஇப், போற்ருர் போகிய நெறியே சென்று. வ-று.

24. சங்குங் கருங்கோடுந் தாழ்பீலிப் பல்லியமு
மெங்கும் பறையோ டெழுந்தார்ப்ப - வெங்க
லழற்சுரந் தாம்படர்ந்தா ரான்சுவட்டின் மேலே
நிழற்கதிர் வேன் மின்ன நிரைத்து. (௩)

போர்மலைதல் - எ-து. வெட்சியாரைக் கண்ணுற்றுவளைஇ யுட்குவரத்தாக் கிளையுளர் செருப்புரிந்தன்று. வ-று.

25. புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமு மானமுந் தேசு - மொலிக்கு
மருமுனை வெஞ்சுரத்" தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து. (௪)

புண்ணெடுவருதல் - எ-து. மண்ணெடு புகழ்நிறீஇப் புண்ணெடு தான்வந் தன்று. வ-று.

26. வெங்குருதி மல்க விழுப்புணுகு தோறு
மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்க
ணினம்போக்கி நின்ரு ரிகல்வாட்டி வேந்தன்
மனம்போல வந்த மகன். (ரு)

போர்க்களத்தொழிதல் - எ-து. படைக்கோ டாவிறன் மறவரைக், கடைக்கொண்டு களத்தொழிந் தன்று. வ-று.

27. உரைப்பி னதுவியப்போ வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்ருன் - புரைப்பின்

றளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்
களப்பட்டான் றேன்றன் கரந்து. (சு)

ஆளெறிபிள்ளை - எ-து. வருவாரை யெதிர்விலக்கி
யொருதா னைக்கியா ளெறிந்தன்று, வ-று.

28. பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து
கொள்ளைகொ ளாயந்தலைக் கொண்டா - ரொள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளா
னொருத்தனியே நின்றா னுளன். (எ)

பிள்ளைத்தெளிவு - எ-து. கண்மகிழ்ந்து துடிவிம்மப்
புண்மகிழ்ந்து புகன்றா டின்று. வ-று.

29, மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்
பூவா னுறைகழியாப் போர்க்களத்து - ளோவான்
றுடியிரட்டி விம்மத் தொடுகழலார் முன்னின்
றடியிரட்டித் திட்டாடு மாட்டு. (அ)

பிள்ளையாட்டு - எ-து. கூடலர் குடர்மாலை சூட்டி
வேறிரித்து விரும்பியா டின்று. வ-று.

30. மாட்டிய பிள்ளை மறவர் நிறந் திறந்து
கூட்டிய வெஃகங் குடர்மாலை - சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விம்மூந் துடி. (கூ)

கையறுநிலை - எ-து. வெருவரு வாளமர் விளிந்தோற்கண்டு
கருவிமாக்கள் கையற வுரைத்தன்று, வ-று.

அ

31. நாப்புலவர் சொன்மாலை நண்ணார் படையுழக்கித்
தாப்புலிபோலத் தலைக்கொண்டான் - பூப்புனையு
நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்
கற்கோலோ சோர்ந்தில வெங்கண். (௧௦)

நெடுமொழிகூறல்—எ-து. மன்மேம்பட்ட மதிக்குடையோற்
குத், தன்மேம்பாடு தானெடுத் துரைத்தன்று. வ-று.

32. ஆளமர் வெள்ளம் பெருகி னது விலக்கி
வாளொடு வைகுவேன் யானாக - நாளுங்
கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்
பிழிமகிழ் வுண்பார் பிறர். (௧௧)

பிள்ளைப்பெயர்ச்சி—எ-து. போர்தாங்கிப் புள்விலங்கியோ
னைத், தார்வேந்தன் றலையளித்தன்று. வ-று.

33. பிணங்கமருட் பிள்ளை பெயர்ப்பப் பெயரா
தணங்கனார்செய் தாளெறித னோக்கி - வணங்காச்
சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே
தலையளித்தான் றண்ணடையுந் தந்து. (௧௨)

வேத்தியன்மலிவு—எ-து. தோள்வலி வயவேந்தனை
வாள்வலி மறவர்சிறப் புரைத்தன்று. வ-று.

34. அங்கையு ணெல்லி யதன்பய னுதலாற்
கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த் - தங்கிச்
செயிர்வழங்கு வாளமருட் சென்றடையார் வேல்வா
யுயிர்வழங்கும் வாழ்க்கை யுறும். (௧௩)

குடிநிலை—எ-து. மண்டிணி ஞாலத்துத் திண்மையு மறனுங் கொண்டு பிறரறியுங் குடிவரவுரைத்தன்று. வ-று.

35. பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்-கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்தகுடி. (கஎ)

இரண்டாவது கரந்தைப்படலம்முற்றிற்று.

ஆ வெண்பா - ருரு.

---

## ங-வது வஞ்சிப்படலம்.

வாடாச்செலவின் வஞ்சிவஞ்சியரவங்
கூடார்ப்பிணிக்குங் குடைநிலைவாணிலை
கொற்றவைநிலையே கொற்றவஞ்சி
குற்றமில்சிறப்பிற் கொற்றவள்ளை
பேராண்வஞ்சி மாராயவஞ்சி
நெடுமொழிவஞ்சி முதுமொழிவஞ்சி
யுழபுலவஞ்சி மழபுலவஞ்சி
கொடைவஞ்சியோடு குறிவஞ்சிய்யே
யொருதனிநிலையொடு தழிஞ்சிபாசறை
பெருவஞ்சிய்யே பெருஞ்சோற்றுநிலையொடு
நல்லிசைவஞ்சியென நாட்டினர்தொகுத்த
வெஞ்சாச்சீர்த்தி யிருபத்தொன்றும்
வஞ்சியும்வஞ்சித் துறையுமாகும்.

வஞ்சி—எ-து. வாடாவஞ்சி தலைமலைந்து
கூடார்மண் கொளக்குறித்தன்று. வ-று.

36. செங்கண் மழவிடையிற் கொண்ட சிலைமறவர்
வெங்கண் மகிழ்ந்து விழவயர - வங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ. (க)

வஞ்சியரவம்-எ-து. வள்வார் முரசொடுவயக்க ளிறுமுழங்க
வொள்வாட்டானை யுருத்தெழுந்தன்று. வ-று.

37. பவ்வம் பணைமுழங்கப் பற்றார்மண் பாழாக
வவ்விய வஞ்சி வலம்புனையச் - செவ்வே
லொளிறும் படைநடுவ ணூழித்தீ யன்ன
களிறுங் களித்ததிருங் கார். (உ)

குடைநிலை-எ-து. பெய்தாமஞ் சுரும் பிமைப்பப் பெரும்புல
வர்புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட்கொண்
டன்று. வ-று.

38. முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானை
துன்னருந் துப்பிற் றொழுதெழா - மன்ன
ருடைநா ளுலந்தனவா லோதநீர்வேலிக்
குடைநா ளிறைவன் கொள. (ங)

வாணிலை-எ-து. செற்றார்மேற் செலவமர்ந்து
கொற்றவாணாட் கொண்டன்று. வ-று.

39. அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்ன
னெறிந்தில கொள்வா ளியக்க - மறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேணார்க ணாட்டுளே
நன்பகலும் கூகை நகும். (ச)

கொற்றவைநிலை - எ - து. நீடோளான் வென்றிகொள்கென
நிறைமண்டை வலனுயரிக், கூடாரைப் புறங்காணுங் கொற்
றவை நிலையுரைத்தன்று. வ-று.

40. அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி
நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் - கணம்புகலக்
கையிரீஇ மண்டை கணமோடி காவலற்கு
மொய்யிரியத் தான்முந்துறும். (ரு)

இதுவுமது - மைந்துடையா டவர்செய்தொழில்கூறனு
மந்தமில் புலவரது வெனமொழிப. வ-று.

41. தமருட் டலையா தருர்தாங்கி நிற்ற
லெமருள்யா மின்னமென் றெண்ண - லமரின்
முடுகழலின் முந்துறுதன் முல்லைத்தார் வேந்தன்
றொடுகழன் மைந்தர் தொழில். (சு)

கொற்றவஞ்சி-எ-து. வையகம் வணங்கவா ளோச்சினனென
ச், செய்கழல்வேந்தன் சீர்மிகுத்தன்று. வ-று.

42. அழலடைந்த மன்றத் தலந்தயரா நின்றார்
நிழலடைந்தே னின்னையென் றேத்திக் - கழலடையச்
செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக்
கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ. (எ)

கொற்றவள்ளை - எ-து-மன்னவன் புகழ்கிளந்
தொன்னார் நாடழிபிரங்கின்று. வ-று.

43. தாழாரமார்பினன் றாமரைக்கண் சேந்தனவாற்
பாழாய்ப் பரிய விளிவதுகொல் - யாழாய்ப்

புடைத்தே னிமிர்கண்ணிப் பூங்கட் புதல்வர்
நடைத்தே ரொலிகறங்கு நாடு. (அ)

பேராண்வஞ்சி - எ-து-கேளல்லார் முனைகெடுத்த
மீளியாளர்க்கு மிகவுய்த் தன்று. வ-று.

44. பலிபெறு நன்னகரும் பள்ளி யிடனு
மொலிகெழு நான்மறையோ ரில்லு - நலிவொரீஇப்
புல்லா ரிரியப் பொருதார் முனைகெடுத்த
வில்லார்க் கருள்சுரந்தான் வேந்து. (க)

இதுவுமது - அருந்திறை யளப்ப வாறியசினத்தொடு
பெரும்பூண் மன்னவன் பெயர்தலு மதுவே. வ-று.

45. கூடிமுரசிரங்கக் கொய்யுளை மா முன் னுகளப்
பாடி பெயர்த்திட்டான் பல்வேலான் - கோடி
நிதியந் திறையளந்தார் நேரார் நின்கீழ்
முதியமென் றுறி முரண். (கo)

மாராயவஞ்சி - எ-து-மறவேந்தனிற் சிறப்பெய்திய
விறல்வேலோர்நிலையுரைத்தன்று. வ-று.

46. நேராரம் பூண்ட நெடுந்தகை நேர்கழலான்
சேரார் முனைநோக்கிக் கண்சிவப்பப் - போரார்
நறவே கமழ்தெரிய லண்ணறொறிந்த
மறவே விலைமுகந்த மார்பு. (கக)

நெடுமொழிவஞ்சி - எ-து-ஒன்னுதார்படைகெழுமித்
தன்னாண்மையெடுத்துரைத்தன்று. வ-று.

47. இன்னரொன வேண்டா வென்றோ டெதிர்சீறி
முன்னர் வருக முரண்கனலு - மன்னர்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண். (கஉ)

முதுமொழிவஞ்சி - எ-து-தொன்மரபின் வாட்குடியின்
முன்னோனது நிலைகிளந்தன்று. வ-று.

48. குளிறு முரசங்குணில்பாயக் கூடா
ரொளிறுவாள் வெள்ள முழக்கிக் - களிறெறிந்து
புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்
தண்ணடை நல்க றகும். (கங)

உழிபுலவஞ்சி - எ-து-நேராதார் வளநாட்டைக்
கூரெரிகொளீஇயன்று. வ-று.

49. அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி
மயிலன்னார் மன்றம் படரக் - குயிலகவ
வாடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட்
டோடெரியுள் வைகின வூர். (கச)

மழபுலவஞ்சி - எ-து-கூடார்முனைகொள்ளைசாற்றி
வீடறக்கவர்ந்த வினைமொழிந்தன்று. வ-று.

50. களமர் கதிர்மணி காலேகஞ் செம்பொன்
வளமனை பாழாக வாரிக் - கொளன்மலிந்து
கண்ணார் சிலையார் கவர்ந்தார் கழல்வேந்த
னண்ணார் கிளையலற நாடு. (கரு)

கொடைவஞ்சி - எ-து-நீடவுங்குழகவு நிவப்பவுந்தூக்கிப் பாடியபுலவர்க்குப் பரிசினீட்டின்று. வ-று.

51. சுற்றிய சுற்ற முடன்மயங்கித் தம்வயி
றெற்றி மடவா ரிரிந்தோட - முற்றிக்
குரிசி லடையானைக் கொண்டகூட் டெல்லாம்
பரிசின் முகந்தன பாண். (௧௬)

குறுவஞ்சி - எ-து-மடுத்தெழுந்த மறவேந்தற்குக் கொடுத்தளித்துக் குடியோம்பின்று. வ-று.

52. தாட்டாழ் தடக்கைத் தனிமதிவெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி - மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரைபோலுங்
கொலையானை பாய்மா கொடுத்து. (௧௭)

இதுவுமது - விட்டான்கட்டூரது வகைகூறினுமத்துறைக் குரித்தாகும். வ-று.

53. அவிழ்மலர்க் கோதைய ராட வொருபா
லிமிழ்முழவம் யாழோ டியம்பக் - கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்ததிரு
மாய்கழலான் கட்டூ ரகத்து. (௧௮)

ஒருதனிநிலை - எ-து-பொருபடையுட் கற்சிறைபோன் றொருவன்றாங்கிய நிலையுரைத்தன்று. வ-று.

54. வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற
வாடன் முதியாள் வயிற்றிடங் - கூடார்

பெரும்படைவெள்ள நெரிதரவும் பேரா
விரும்புலி சேர்ந்த விடம். (௧௯)

தழிஞ்சி - எ-து-அழிபவர்புறக்கொடையயில்வாளோச்சாக்
கழிதறுகண்மைகாதலித்துரைத்தன்று. வ-று.

55. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை தீண்டாத் தறுகண்ணன் - வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைத
லெண்ணியபின் போக்குமோ வெஃகு. (௨௦)

பாசறை - எ-து - மதிக்குடைக்கீழ்வழிமொழிந்து மன்னரெல்
லாம்வலன்றறப்பவும், பதிப்பெயரான்மறவேந்தன்பாசறை
யிருந்தன்று. வ-று.

56. கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்
பெரும்புனல் வாய் திறந்த பின்னுஞ் - சுரும்பின்
றொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறையு ளான். (௨௧)

பெருவஞ்சி - எ-து-முன்னடையார் வளநாட்டைப்
பின்னருமுடன்றெரிகொளீஇயன்று. வ-று.

57. பீடிலா மன்னர் நடுங்கப் பெரும்புகை
யூடிலாய் வானத் தொளிமறைப்ப - நாடெலாம்
பின்னும் பிறங்கழல் வேய்ந்தனவே பெய்கழற்கான்
மன்னன் கனல மறம். (௨௨)

பெருஞ்சோற்றுநிலை - எ-து - திருந்தார்தெம்முனைதெறுகுவ
ரெனப், பெருஞ்சோறுடவர்பெறமுறைவகுத்தன்று. வ-று.

58. இயவர்புகழ வெறிமுரச மார்ப்பக்
குயவரி வேங்கை யனைய - வயவர்
பெறுமுறையாற் பிண்டங்கோ ளேவினன் பேரு
ரிறுமுறையா லெண்ணி யிறை. (௨௩)

நல்லிசைவஞ்சி - எ-து-ஒன்னுதார்முனைகெடவிறுத்த
வென்வேலாடவன்விறன்மிகுத்தன்று. வ-று.

59. மடங்கலிற்சீறி மலைந்தெழுந் தார் மண்மே
லிடங்கெடச் சென்றிறுத்த பின்னு - நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையாற்கு வேந்தர்மேற்
செல்லப் பெருகுஞ் சினம். (௨௪)

இதுவுமது - இறுத்தபினழிபிரங்கன்
மறுத்துரைப்பினுமத்துறையாகும். வ-று.

60. குரையழன் மண்டிய கோடுயர் மாடஞ்
சுரையொடு பீரஞ்சுமந்த - நிரைதிண்டேர்ப்
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு. (௨௫)

மூன்றாவது வஞ்சிப்படலம் முற்றிற்று.

ஆக வெண்பா - ௬௦.

---

## ௪-வது. காஞ்சிப்படலம்.

காஞ்சிகாஞ்சி யெதிர்வேதழிஞ்சி
பெரும்படைவழக்கொடு பெருங்காஞ்சியே
வாள்செலவென்று குடையது செலவே
வஞ்சினக்காஞ்சி பூக்கோணிலையே

புகழ்தலைக்காஞ்சி தலைமாராயந்
தலையொடுமுடிதன் மறக்காஞ்சியயே
மாற்றரும்பேய்நிலை பேய்க்காஞ்சியயே
தொட்டகாஞ்சி தொடாக்காஞ்சியயே
மன்னைக்காஞ்சி கட்காஞ்சியயே
யாஞ்சிக்காஞ்சி மகட்பாற்காஞ்சி
முனைகடிமுன்னிருப் புளப்படத்தொகைஇ
யெண்ணியவகையா னிருபத்திரண்டுங்
கண்ணியகாஞ்சித் துறையெனமொழிப.

காஞ்சி - எ-து-வெஞ்சினவேந்தன் விடுதரவேந்தன்
காஞ்சிசூடிக் கடிமனைகருதின்று. வ-று.

61. அருவரை பாய்ந்திறு தூ மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச் - செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில். (க)

காஞ்சியெதிர்வு - எ-து. மேல்வரு படைவர மிகவு மாற்று
வேல்வலாடவர் விறன்மிகுத்தன்று. வ-று.

62. மன்மேல் வருமென நோக்கான் வலர்மார்பின்
வெந்வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்பத் - தன்வேல்
பிடிக்கலு மாற்றுப் பெருந்தகை யேவத்
துடிக்கண் புலையன் றெருடும். (உ)

தழிஞ்சி - எ-து. பரந்தெழுதரு படைத்தானை
வரம்பிகவா மைச் சுரங்காத் தன்று. வ-று.

63. குலாவுஞ் சிலையார் குறும்பு கொளவெஃகி
யுலாவு முழப்பொழிக வேந்தன் - கலாவு
மினவேங்கை யன்ன விகல் வெய்யோர் காவல்
புனவேய் நரலும் புழை. (௩)

படைவழக்கு - எ-து. முத்தவிர்பூண் மற வேந்த
ஞெத்தவர்க்குப் படை வழங்கின்று. வ-று.

64. ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றுலிப்ப
வையிலை யெஃக மனைவபலவு - மொய்யிடை
யாட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான்
வாட்குடி வன்க ணவர்க்கு. (௪)

இதுவுமது - கொடுத்தபின் கழன்மறவ
ரொடுத்துரைப்பினு மத்துறையாகும். வ-று.

65. துன்னருந் துப்பிற் றொடுகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னம ரொள்வாளென் கைத்தந்தான் - மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து. (௫)

பெருங்காஞ்சி-எ-து. தாங்குதிறன் மறவர்தத்த மாற்றல்வீங்
குபெரும்படையின், வெளிப்படுத்தன்று. வ-று.

66. வில்லார் குறும்பிடைவேறுவே றார்த்தெழுந்த
கல்லா மறவர் கணைமாரி - யொல்லா
வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லா
மிருவி வரைபோன்ற வின்று. (௬)

வாள்செலவு - எ-து. அருமுனையா னறைகூவினபின் செருமுனை மேல்வாள் சென்றன்று. வ-று.

67. உணங்கு புலவறு வொன்னார் குரம்பை
றுணங்கரில் வெம்முனை நோக்கி - யணங்கிய
குந்த மலியும் புரவியான் கூடார்தார்
வந்தபின் செல்கென்றான் வாள். (எ)

குடைசெலவு - எ-து. முதுகுடி மறவர் முன்னுறச் சூழக் கொதியழல் வேலான் குடை சென்றன்று. வ-று.

68. தெம்முனை தேயத் திறல்விளங்கு தேர்த்தானை
வெம்முனை வென்றி விறல் வெய்யோன் - றம்முனை
நாட்டிப் பொறிசெறித்து நண்ணார்மேற் செல்கென்று
கூட்டிநாட் கொண்டான் குடை. (அ)

வஞ்சினக்காஞ்சி - எ-து. வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப, வஞ்சினங் கூறிய வகைமொழிந்தன்று. வ-று.

69. இன்று பகலோ னிறவாமு னொன்னாரை
வென்று களங்கொளா வேலுயர்ப்பி - னென்று
மரணவியப் பாயு மடையார்மு னிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து. (கூ)

பூக்கொணிலை - எ-து. காரொதிரிய கடற்றானை போரொதிரிய பூக்கொண்டன்று. வ-று.

70. பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றுவதுகொல் குன்றார் - கருதி

மறத்திறத்தின் மாறு மரவருங் கொண்டார்
புறத்திறுத்த வேந்திரியப் பூ. (௬0)

தலைக்காஞ்சி - எ-து. மைந்துயர் மறங்கடந்தான்
பைந்தலைச் சிறப்புரைத் தன்று. வ-று.

71. விட்டிடிலென் வேந்தன் விலையிடிலெ னிவ்வுலகி
னிட்டுரையி னெய்துவ தெய்திற்று - லொட்டாதார்
போர்தாங்கி யின்னும் புலவா ளுறைகழியாத்
தார்தாங்கி வீழ்ந்தான் றலை. (௬௧)

தலைமாராயம் - எ-து. தலைகொடுவந்தா னுண்மலியச்
சிலையுடைவேந்தன் சிறப்பீந் தன்று. வ-று.

72. உவன்றலை யென்னு முறழ்வின்றி யொன்று
ரிவன்றலையென் றேத்த வியலு - மவன்றலை
தந்தார்க்கு நல்கல் வியப்போ கிளர்ந்தேத்தி
வந்தார்க்கு வந்தியும் வாழ்வு. (௬௨)

தலையொடுமுடிதல் - எ-து. மண்டமருண் மாறு மைந்திற்கொ
ண்டான்றலையொடு, கோல்வளை முடிந்தன்று. வ-று.

73. கொலையானுக் கூற்றே கொடிது கொழுநன்
றலையானு டையலாள் கண்டே - முலையான்
முயங்கினுள் வாண்முகமுஞ் சேர்த்தினு ளாங்கே
யுயங்கினு ளோங்கிற் றுயிர். (௬௩)

மறக்காஞ்சி - எ-து. இலைப்பொலிதா ரிகல் வேந்தன்
மலைப்பொழிய மறங்கடாயின்று. வ-று.

74. கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடியு மீராப்
பருந்தோ டெருவை படர - வருந்திறல்
வேறுய மன்னர் வியப்பக் கடாயினுன்
மாறு மறவன் மறம். (கச)

இதுவுமது - எ-து. மண்கெழுமறவன் மாறுநிலைநோனுன்
புண்கிழித்து முடியினுமத் துறையாகும். வ-று.

75. நகையம ராய நடுங்க நடுங்கான்
றுகையம ரோட்டிய துப்பிற் - பகைவர்மு
னுங்கிச் சினவுத ஞேஞு னுதிவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண். (கரு)

பேய்நிலை - எ-து. செருவே லான்றிறநோக்கிப்
பிரிவின்றிப் பேயோம் பின்று. வ-று.

76. ஆயு மடுதிறலார்க் கன்பிலா ரில்போலுந்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் - பேயுங்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தா
னுளம்புகல வோம்ப லுறும். (கசு)

பேய்க்காஞ்சி - எ-து. பிணம் பிறங்கிய களத்து வீழ்ந்தார்க்
கணங்காற்ற வச்சுறீஇ யன்று. வ-று.

77. கொட்கு நிமிருங் குறுகுங் குடர்சூடிப்
பெட்ப நகும்பெயரும் பேய்மக - ளுட்கப்
புனலங் குருதிப் புலால் வாய்க் கிடந்து
கனல விழிப்பவர்க் கண்டு (கஎ)

தொட்டகாஞ்சி - எ-து. வியன்மனை விடலை புண்காப்பத் து
யன்முலைப் பேழ்வாய்ப் பேய் தொட்டன்று வ-று.

78. கொன்றுருத்த கூர்வே லவற்குறுகிக் கூரிரிருள்வாய்
நின்றுருத்து நோக்கி நெருப்புமிழாச் - சென்றொருத்தி
யொட்டார் படையிடந்த வாருப்பு ணேந்தகலந்
தொட்டாள் பெருகத் துயில். (கஅ)

தொடாக்காஞ்சி - எ-து. அடலஞ்சா நெடுந்தகைபுண்
டொடலஞ்சித் துடித்துநீங் கின்று. வ-று.

79. ஐயவிசிந்தி நறைபுகைத் தாய்மலர்தூய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப்
பூப்பெய் தெரிய னெடுந்தகைபுண் யாங்காப்பப்
பேய்ப்பெண் பெயரும் வரும். (க௯)

மன்னைக்காஞ்சி - எ-து. வியலிடமருள விண்படர்ந்தோ
னியல்பேந்தி யழிபிரங் கின்று. வ-று.

80. போர்க்குப் புனைமன் புரையோர்க்குத் தானுவம
னூர்க்கு முலகிற்கு மோருயிர்மன் - யார்க்கு
மறந்திறந்த வாயி லடைத்ததா லன்னை
னிறந்திறந்த நீளிலை வேல். (உ0)

கட்காஞ்சி - எ-து. நறமலியு நறுந்தாரோன்
மறமைந்தர்க்கு மட்டீந் தன்று. வ-று.

81. ஒன்னு முனையோர்க் கொழிக வினித்துயின்
மன்னன் மறவா மகிழ்தூங்கா - முன்னே

படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும். (உக)

ஆஞ்சிக்காஞ்சி-எ-து. காதற்கணவ னொடு கனை யெரிமூழ்கு
மாதர்மெல்லியன் மலிபுரைத்தன்று. வ-று.

82. தாங்கிய கேளொடு தானு மெரிபுரீஇப்
பூங்குழை யாயம் புலர்கென்னு - நீங்கா
விலாழிப் பரித்தானை யேதிலார் சீறூர்ப்
புலாழித் தலைக்கொண்ட புண். (உஉ)

இதுவுமது - எ-து. மன்னுயிர்நீத்த வேலின் மனையோ
ளின்னுயிர் நீப்பினு மத்துறையாகும். வ-று.

83. கவ்வைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ - னவ்வேலே
யம்பிற் பிறழுந் தடங்கணவன் காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று. (உ௩)

மகட்பாற்காஞ்சி - எ-து. ஏந்திழை யாட்டரு கென்னும்
வேந்தனொடு வேறுநின் றன்று. வ-று.

84. அளியகழல் வேந்த ரம்மா வரிவை
யெளியளென் றெள்ளி யுரைப்பிற் - குளியாவோ
பண்போற் கிளவியிப் பல்வளையாள் வாண்முகத்த
கண்போற் பகழி கடிது. (உ௪)

முனைகடிமுன்னிருப்பு - எ-து. மன்னர்யானையு மறங்காற்றி
முன்னிருந்து முனைகடிந் தன்று. வ-று.

85. கடிகமழ்வேரிக் கடைதொறுஞ் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித் - துடிமகிழ
வார்த்திட் டமரு ளுடையாரை யம்முனையிற்
பேர்த்திட்டான் பெய்கழலி னான். (உரு)

நான்காவது காஞ்சிப்படலம் முற்றிற்று.

ஆக வெண்பா—அரு.

## ரு-வது. நொச்சிப்படலம்.

நுவலருங் காப்பி னொச்சி யேனை
மறனுடைப் பாசி யூர்ச் செருவென்று
செருவிடை வீழ்ந்த திண்பரி மறனே
யெயிலதுபோரே யெயிறனையழித்த
லழிபடை தாங்கன் மகண்மறுத்து மொழிதலென
வெச்சமின்றி யெண்ணிய வொன்பது
நொச்சித் திணையது வகையென மொழிப.

நொச்சி - எ-து. ஏப்புழை ஞாயிலேந்து புகழரணங்
காப்போர்சூடிய பூப்புகழ்ந் தன்று. வ-று.

86. ஆடரவம் பூண்டா னழலுணச் சீறிய
கூடரணங் காப்போர் குழாம்புரையச் - சூடினு
ருச்சி மதிவழங்கு மோங்கு மதில்காப்பா
னொச்சி நுதிவே லவர். (க)

மறனுடைப்பாசி - எ-து. மறப்படை மறவேந்தர்
துறக்கத்துச் செலவுரைத் தன்று. வ-று.

87. பாயினார் மாயும் வகையாற் பலகாப்பு
மேயினு ரேய விகன்மறவ - ராயினு

றொன்றி யவரற வூர்ப்புலத்துத் தார்தாங்கி
வென்றி யமரர் விருந்து. (உ)

ஊர்ச்செரு - எ-து. அருமிளை யொடுகிடங் கழியாமைச்
செருமலைந்த சிறப்புரைத் தன்று. வ-று.

88. வளையும் வயிரு மொலிப்பவாள் வீசி
யிளையுங் கிடங்குஞ் சிதையத் - தளைபரிந்த
நோனார் படையிரிய நொச்சி விறன்மறவ
ராஞ ரமர்விலக்கி யார்ப்பு. (ங)

செருவிடைவீழ்தல் - எ-து. ஆழ்ந்து படுகிடங்கி னருமிளை
காத்து, வீழ்ந்தவேலோர் விறன்மிகுத்தன்று. வ-று.

89. ஈண்டரில் சூழ்ந்த விளையு மெரிமலர்க்
காண்டகு நீள்கிடங்குங் காப்பாராய் - வேண்டார்
மடங்க லனைய மறவேலோர் தத்த
முடம்பொடு காவ லுயிர். (ச)

குதிரைமறம் - எ-து. ஏமாண்ட நெடும்புரிசை
வாமானது வகையுரைத் தன்று. வ-று.

90. தாங்கன்மின் றாங்கன்மின் றானை விறன்மறவி
ரோங்கன் மதிலி னுருதனிமா - ஞாங்கர்
மயிரணியப் பொங்கி மழைபோன்று மாற்று
ருயிருணிய வோடி வரும். (ரு)

எயிற்போர் - எ-து. அயிற்படையி னரண்காக்கு
மெயிற்படைஞ் ரிகன் மிகுத்தன்று. வ-று.

91. மிகத்தாய செங்குருதி மேவரு மார்பி
னுகத்தா முயங்கியக் கண்ணு - மகத்தார்
புறத்திடைப் போதந் தடல்புரிந்தார் பொங்கி
மறத்திடை மானமேற் கொண்டு. (சு)

எயிறனையழித்தல் - எ-து. துணிவுடைய தொடுகழலா
னணிபுரிசை யழிபுரைத்தன்று. வ-று.

92. அகத்தன வார்கழ லோன்று ளரணின்
புறத்தன போரொழிற் றிண்டோ - ளுறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற துணை வளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான். (எ)

அழிபடைதாங்கல் - எ-து. இழிபுடன் றிகல்பெருக
வழிபடை யரண்காத் தன்று. வ-று.

93. புரிசை பலகடந்து பற்று ரொதிர்ந்தா
ரெரிசெ யிகலரணங் கொண்டார் - புரிசை
யகத்தடி யுய்யாமை யஞ்சுடர்வா ளோச்சி
மிகத்தடிந்தார் மேனின் றவர். (அ)

மகண்மறுத்துமொழிதல்-எ-து. வெம்முரணோன்மகள்வேண்ட
வம்மதிலோர் மறுத்துரைத்தன்று. வ - று.

94. ஒள்வாண் மறவ ருருத்தெழுந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக் - கொள்வான்
மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற் கால். (கூ)

ஐந்தாவது நொச்சிப்படலம் முற்றிற்று.

ஆ வெண்பா-கூசு.

## கூ-வது. உழிஞைப்படலம்.

உழிஞையோங்கிய குடைநாட்கோளே
வாணாட்கோளே முரசவுழிஞை
கொற்றவுழிஞையோ டரசவுழிஞை
கந்தழியென்று முற்றுழிஞையே
காந்தள்புறத்திறை யாரெயிலுழிஞை
யருந்தொழிலுழிஞை குற்றுழிஞையொடு
கோட்புறத் துழிஞை பாசிநிலையே
யேணிநிலையே யிலங்கெயிற்பாசி
முதுவுழிஞையே முந்தகத்துழிஞை
முற்றுமுதிர்வே யானைகைக்கோளே
வேற்றுப்படைவரவே யுழுதுவித்திடுதல்
வாண்மண்ணுநிலையே மண்ணுமங்கலமே
மகட்பாலிகலே திறைகொண்டு பெயர்த
லடிப்படவிருத்த றொகைநிலையுளப்பட
விழுமென்சீர்த்தி யிருபத்தொன்பது
முழிஞையென்மனா ருணர்ந்திசினோரே.

உழிஞை - எ-து. முடிமிசை யுழிஞை சூடியொன்னார்
கொடிநுடங்கா ரெயில்கொளக் கருதின்று. வ-று.

95. உழிஞை முடிபுனைந் தொன்னுப்போர் மன்னர்
விழுமதில் வெல்களிறு பாயக் - கழிமகிழ்
வெய்தாரு மெய்தி யிசைநுவலுஞ் சீர்த்தியனே
கொய்தார மார்பினெங் கோ. (க)

குடைநாட்கோள் - எ-து. செற்றடையார் மதில்கருதிக்
கொற்ற வேந்தன் குடைநாட் கொண்டன்று. வ-று.

96. நெய்யணிக செவ்வே னெடுந்தேர் நிலைபுகுக
கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக - வையகத்து
முற்றக் கடியரண மெல்லா முரணவிந்த
கொற்றக் குடைநாட் கொள. (உ)

வாணாட்கோள் - எ-து. கலந்தடையார் மதில் கருதி
வலந்தரு வாணாட்கொண் டன்று. வ-று.

97. வாணாட் கொளலும் வழிமொழித்து வந்தடையாப்
பேணார் பிறைதொடும் பேமதிற் - பூணா
ரணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்
பிணிகொள்பே யாடும் பெயர்த்து. (௩)

முரசவுழிஞை-எ-து. பொன்புனை யுழிஞை சூடிமறியார்ந்து
திண்பிணி முரச நிலையுரைத் தன்று. வ-று.

98. கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி
யுதிரா மதிலு முளகொ-லதிருமாற்
பூக்கண் மலிதார்ப் புகழ்வெய்யோன் கோயிலுண்
மாக்கண் முரச மழை. (௪)

கொற்றவுழிஞை - எ-து. அடையாதா ரரண்கொள்ளிய
படையொடு பரந்தெழுந் தன்று. வ-று.

99. வெள்வாட் கருங்கழற்கால் வெஞ்சுடர்வேற் றண்ணளியான்
கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தா - னள்ளாதா
ரஞ்சவரும் வாயி லருமிளைக் குண்டகழி
மஞ்சிவரு ஞாயின் மதில். (ரு)

அரசவுழிஞை - எ-து. தொழில்காவன் மலிந்தியலும்
பொழில் காவலன் புகழ்விளம்பின்று. வ-று.

100. ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி
யாக்க மவன்க ணகலாவால்-வீக்க
நகப்படா வென்றி நலமிகு தாரற்
ககப்படா வில்லை யரண். (கூ)

கந்தழி - எ-து. மாவுடைத்தார் மணிவண்ணன்
சோவுடைத்த மற நுவலின்று. வ-று.

101. அன்றெறிந் தானு மிவனு லரண்வலித்
தின்றிவன் மாறு யெதிர்வார்யா - ரொன்று
மடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்
சுடராழி நின்றெறியச் சோ. (எ)

முற்றுழிஞை - எ-து. ஆடியலவிர் சடையான்
சூடியபூச் சிறப்புரைத் தன்று. வ - று.

102. மயங்காத தார்ப்பெருமை மற்றறிவார் யாரே
யியங்கரண மூன்று மெரித்தான் - றயங்கிணர்ப்
பூக்கொ ளிதழிப் புரிசெஞ் சடையானு
மாக்கொ ளுழிஞை மலைந்து. (அ)

காந்தள் - எ-து. கருங்கடலுண் மாதடிந்தான்
செழுங்காந்தட் சிறப்புரைத்தன்று. வ-று.

103. குருகு பெயரிய குன்றெறிந் தானு
முருகெழு காந்தண் மலைந்தான் - பொருகழற்

கார்கருதி வார்முரச மார்க்குங் கடற்றானைப்
போர்கருதி யார்மலையார்பூ. (க)

புறத்திறை - எ-து. மறத்துறைவலிந்து மண்டிமாற்றார்
விறற்கொடி மதிலின் புறத்திறுத்தன்று. வ - று.

104. புல்லார் புகலொடு போக்கொழியப் பொங்கினனுய்ப்
பல்லார் மருளப் படைபரப்பி - யொல்லார்
நிறத்திறுத்த வாட்டானை நேரார் மதிலின்
புறத்திறுத்தான் பூங்கழலி னன். (க0)

ஆரெயி லுழிஞை - எ-து. வாண்மறவர்வணங்காதார்
நீண்மதிலி னிலையுரைத்தன்று. வ - று.

105. மயிற்கணத் தன்னார் மகிழ்தேற லூட்டக்
கயிற்கழலார் கண்கனல் பூப்ப - வெயிற்கண்ணார்
வீயப்போர் செய்தாலும் வென்றி யரிதரோ
மாயப்போர் மன்னன் மதில். (கக)

தொழிலுழிஞை-எ-து. வென்றியொடு புகழ்விளக்கு மெனத்
தொன்றுவந்த தோன்மிகுத்தன்று. வ-று.

106. நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
யின்றுநாம் வைக லிழிவாகும் - வென்றொளிரும்
பாண்டி நிரைதோற் பணியார் பகையரணம்
வேண்டி வெளிதென்றான் வேந்து. (கஉ)

குற்றுழிஞை - எ-து. கருதார் மதிற்குமரிமே
லொருதானாகி யிகன்மிகுத்தன்று. வ-று.

107. குளிறுமுரசினன் கொண்டா னரணங்
களிறுங் கதவிறப் பாய்ந்த - வொளிறு
மயிற்றுப் படைந்த வணியெழு வெல்லா
மெயிற்றுப்படையா லிடந்து. (கஙு)

இதுவுமது - வலைஞரல வயிரார்ப்ப
மிளைகடத்தலுமத்துறையாகும். வ-று.

108. அந்தரந் தோயு மமையோங் கருமிளை
மைந்தர் மறிய மறங்கடந்து - பைந்தார்
விரைமார்பில் வின்னரல வெங்கணை தூவார்
வரைமார்பில் வைகின வாள். (கச)

இதுவுமது - பாடருந் தோற்படைமறவ
ராடலோடடையினு மத்துறையாகும். - வ-று.

109. நிரைபொறி வாயி னெடுமதிற் சூளி
வரைபுகு புள்ளின மான-விரைபடைந்தார்
வேலேந்து தானை விறலோன் விறன்மறவர்
தோலேந்தி யாட ருடர்ந்து. (கரு)

கோட்புறத் துழிஞை - எ-து. விண்டோயுமிளைகடந்து
குண்டகழிப்புறத் திறுத்தன்று. வ-று.

110. கோள்வாய் முதலை குண்டகழி நீராக
வாள்வாய் மறவேந்தன் வந்திறுத்தா-னீள்வாயி
லோங்க லரணத் தொளிவளையார் வெய்துயிர்ப்ப
வாங்கொ லரிய வமர். (கசு)

பாசிநிலை - எ து. அடங்காதார் மிடல்சாயக்
கிடங்கிடைப் போர்மலைந்தன்று. - வ-று.

111. நாவாயுந் தோணியு மேல்கொண்டு நள்ளாதா
ரோவார் விலங்கி யுடலவும் - பூவா
ரகழி பரந்தொழுகு மங்குருதிச் சேற்றுப்
பகழிவாய் வீழ்ந்தார் பலர். (௧எ)

ஏணிநிலை-எ-து. தொடுகழன் மறவர் துன்னித் துன்று
நீடுசூட்டிஞ்சி யேணிசாத்தின்று. - வ-று.

112. கற்பொறியும் பாம்புங் கனலுங் கடிகுரங்கும்
விற்பொறியும் வேலும் விலக்கவும் - பொற்புடைப்
பாணி நடைப்புரவிப் பல்களிற்றார் சாத்தினா
ரேணி பலவு மெயில். (௧அ)

எயிற்பாசி - எ-து. உடல்சினத்தார்கடியரண
மிடல்சாய மேலிவர்ந்தன்று. வ-று.

113. சுடுமணெடுமதில் சுற்றிப் பிரியார்
கடுமுரணெஃகங் கழிய - வடுமுரா
ணறினா ரன்றி யரவு முடும்புபோ
லேறினா ரேணி பலர். (௧௧)

முதுவுழிஞை - எ-து. வேய்பிணங்கிய மிளையரணம்
பாய்புள்ளிற் பரந்திழிந்தன்று. வ-று.

114. கோடியர் வெற்பி னிலஞ்சண் டிளைகருதித்
தோடுகொள் புள்ளின் றொகையேய்ப்பக் - கூடார்

முரணகத்துப் பாற முழவுத் தோண் மள்ள
ரரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து. (உ௦)

இதுவுமது - செருமதிலோர் சிறப்புரைத்தலு
மருமுரணனைத் துறையாகும். வ-று.

115. அறியார் வயவ ரகத்திழிந்த பின்னு
நெறியார் நெடுமதிலு ணேரார் - மறியான்
கிளியொடு நேராங் கிளவியார் வாட்கட்
களியுறு காமங் கலந்து. (உக)

அகத்துழிஞை -எ-து. முரணவியச்சினந் திறந்தோ
ரரணகத் தோரை யமர்வென்றன்று. வ-று.

116. செங்கண் மறவர் சினஞ்சொரிவாள் சென்றியங்க
வங்கண் விசும்பி னணிதிகழுந் - திங்கண்
முகத்தா ரலற முகிலுரிஞ்சுஞ் சூளி
யகத்தாரை வென்முரமர். (உஉ)

முற்றுமுதிர்வு - எ-து அகத்தோன் காலையதிர் முரசியம்பப்
புறத்தோன் வெஞ்சினப்பொலிவுரைத்தன்று. வ-று.

117. காலை முரச மதிலியம்பக் கண்கனன்று
வேலைவிறல் வெய்யோ னோக்குதலு - மாலை
யடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார்
தொடுகடலார் மூழை துடுப்பு. (உ௩)

யானைகைக்கோள் - எ-து. மாறுகொண்டார் மதிலழிய
வேறுந்தோட்டியு மெறிந்து கொண்டன்று. வ-று.

118. ஏவ லிகன்மறவர் வீய விகல்கடந்து
காவலும் யானையுங் கைக்கொண்டான் - மாவலான்
வம்புடை யொள்வாண் மறவர் தொழுதேத்த
வம்புடை ஞாயி லரண். (உச)

வேற்றுப்படைவரவு - எ-து. மொய்திகழ் வேலோன் முற்று விட்டகலப், பெய்தார்மார்பிற் பிறன்வரவுரைத்தன்று. வ-று

119. உவனின் றுறுதுயர முய்யாமை நோக்கி
யவனென் றுலகேத்து மாண்மை - யிவனன்றி
மற்றியார் செய்வார் மழைதுஞ்சு நீளரண்
முற்றியார் முற்று விட. (உரு)

உழுதுவித்திடுதல் - எ-து. எண்ணார்பல் லெயில்கழுதை யே ருழு, துண்ணுவரகொடு கொள்வித் தின்று. வ-று.

120. எழுதெழின் மாடத் திடமெல்லா நூறிக்
கழுதையேர் கையொளிர்வேல் கோலா - வுழுதபின்
வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற்
கள்விரவு தாரான் கதம். (உசு)

வாண்மண்ணுநிலை - எ-து. புண்ணியநீரிற் புரையோரேத்த மண்ணிய வாளின் மறங்கிளந் தன்று. வ-று.

121. திர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
கூர்த்தவாண் மண்ணிக் கொடித்தேரான் - பேர்த்து
மிடியார் பணைதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்
புடையா ரறையப் புகழ். (உஎ)

மண்ணுமங்கலம் - எ-து. வணங்காதார்மதிற் குமரியொடு
மணங்கூடிய மலிவுரைத் தன்று. வ-று.

122. எங்கண் மலர வெயிற்குமரி கூடிய
மங்கல நாள்யா மகிழ்தூங்கக் - கொங்கலர்தார்ச்
செய்சுடர்ப்பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே
மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி. (உஅ)

மகட்பாலிகல் - எ-து. மயிற்சாயன் மகள்வேண்டிய
கயிற்கழலோ னிலையுரைத் தன்று. வ-று.

123. அந்தழை யல்குலு மாடமை மென்றோளும்
பைந்தளிர் மேனியும் பாராட்டித் - தந்தை
புறமதில் வைகும் புலம்பே தருமே
மறமதின் மன்னன் மகள். (உகூ)

திறைகொண்டுபெயர்தல் - எ-து. அடுதிறலரணத் தரசுழி
மொழியப், படுதிறை கொண்டு பதிப்பெயர்ந் தன்று. வ-று

124. கோடும் வயிரு மிசைப்பக் குழுமிளை
யூடெரி வேய வுடன்றுலாய்ப் - பாடி
யுயர்ந்தோங் கரணகத் தொன்னார் பணியப்
பெயர்ந்தான் பெருந்தகையி னான். (௩0)

அடிப்படவிருத்தல் - எ-து. பேணுதார் மறங்கால
வாணைகொண் டடிப்பட விருந்தன்று. வ-று.

125. ஒன்றி யவர்நா டொருவழிக் கூக்கேட்ப
வென்றி வினையா விழுமதிலோ - ரொன்றும்

பருந்தார் செருமலையப் பாடிபெயரா
திருந்தா னிகன்மறவ ரோறு. (கக)

தொகைநிலை - எ-து. எம்மதிலி னிகல்வேந்தரு
மம்மதிலி னடியடைந்தன்று. வ-று.

126. காவல் பெயரிய ஞாலத் தடையடைந்
தேவ லெதிரா திகல்புரிந்த - காவலர்
வின்னின்ற தானை விறல்வெய்யோற் கம்மதிலின்
முன்னின் றவிந்தார் முரண். (௩௨)

ஆறுவது உழிஞைப்படலம் முற்றிற்று.
ஆ வெண்பா-௧௨௬.

## எ-வது. தும்பைப்படலம்.

துன்னருங்கடும்போர்த் தும்பையரவந்
தன்னிகரில்லாத் தானைமறமே
யானைமறத்தொடு குதிரைமறமே
தார்நிலைதேர்மறம் பாணதுபாட்டே
யிருவருந்தபுநிலை யெருமைமறமே
யேமவெருமை நூழிலென்று
நூழிலாட்டே முன்றேர்க்குரவை
பின்றேர்க்குரவை பேய்க்குரவைய்யே
களிற்றுடனிலையே யொள்வாளமலை
தானைநிலையே. வெருவருநிலையே
சிருங்காரநிலையே யுவகைக்கலுழ்ச்சி
தன்னைவேட்ட லொகைநிலையுளப்பட

நன்பொருடெரிந்தோர் நாலிருமூன்றும்
வண்பூந்தும்பை வகையெனமொழிப.

தும்பை - எ-து. செங்களத்து மறங்கருதிப்
பைந்தும்பைதலைமலைந் தன்று. வ-று.

127. கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான்
சோர்குருதி சூழா நிலநனைப்பப் - போர்கருதித்
துப்புடைத் தும்பை மலைந் தான் றுகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து. (க)

தும்பையரவம் - எ-து. பொன்புனைந்த கழலடியோன்
றன்படையைத் தலையளித் தன்று. வ-று.

128. வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண்ணடையுங்
கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான் - பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தலைபனிப்பப்
பன்மணிப் பூணான் படைக்கு. (உ)

தானைமறம் - எ-து. தாம்படை தலைக்கொள்ளாமை
யோம்படுத் துயர்வுகூறின்று. வ - று.

129. கழுதார் பறந்தலைக் கண்ணுற்றுத் தம்மு
னிழுதார்வேற் றானை யிகலிற் - பழுதாஞ்
செயிர்காவல் பூண்டொழுகுஞ் செங்கோலார் செல்வ
முயிர்காவ லென்னுமுறை. (ங)

இதுவுமது - பூம்பொழிற் புறங்காவலை
யோம்படுத்தற்கு முரித்தெனமொழிப. வ - று.

130. வயிர்மேல் வளைநரல வைவேலும் வாளுஞ்
செயிர்மேற் கனல்விழிப்பச் சீறி - யுயிர்மேற்
பலகழியு மேனும் பரிமான்றேர் மன்னர்க்
குலகழியு மோர்த்துச் செயின். (ச)

இதுவுமது - வேற்றானைமறங்கூறி மாற்றாரதழிபிரங்கலு
மாற்றினுணரின்த்துறையாகும். வ-று.

131. மின்னார் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை
யொன்னார் நடுங்க வுலாகிமிரி - னென்னாங்கொ
லாழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்
பாழித்தோண் மன்னர் படை. (ரு)

யானைமறம் - எ-து-எழுமரவக்கடற்றானையான்
மழகளிற்றின் மறங்கிளந்தன்று. வ-று.

132. அடக்கருந் தானை யலங்குதார் மன்னர்
விடக்கு முயிரு முணிய - கடற்படையுட்
பேயு மெருவையுங் கூற்றுந்தன் பின்படரக்
காயுங் கழலான் களிறு. (சு)

குதிரைமறம் - எ-து-எறிபடையானிகலமருட்
செறிபடைமான்திறங்கிளந்தன்று. வ-று.

133. குந்தூங் கொடுவிற் குருதிவேல் கூடாதார்
வந்த வகையறியா வாளமருள் - வெந்திற
லார்கழன் மன்ன னலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்தி வரும். (எ)

தார்நிலை - எ-து. முன்னெழுதருபடை தாங்குவனென்ன மன்னவற்கு மறங்கிளந்தன்று. வறு.

134. உறுசுடர் வாளோ டொருகால் விலக்கிற்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டா - யெறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்தே நின்னோடு
பாங்கலா மன்னர் படை. (அ)

இதுவுமது - ஒருகுடைமன்னனைப் பல்குடைநெருங்கச்
செருவிடைத்தமியன் றாங்கற்குமுரித்தே. வ-று.

135. காலான்மயங்கிக் கதிர்மறைத்த கார்முகில்போல்
வேலான்கை வேல்விட வீழ்ந்தனவே - தோலா
விலைபுனை தண்டா ரிறைவன்மேல் வந்த
மலைபுரை யானை மறிந்து. (கூ)

தேர்மறம் - எ-து. முறிமலர்த்தார் வயவேந்தன்
செறிமணித்தேர்ச் சிறப்புரைத்தன்று. வ-று.

136. செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ள
மருமுர ணாழி தொடர - வருமரோ
கட்டார் கமழ்தெரியற் காவலன் காமர்தே
ரொட்டார் புறத்தின்மே லூர்ந்து. (கo)

பாண்பாட்டு-எ-து. வெண்கோட்டகளிறெறிந்துசெங்களத்து
வீழ்ந்தார்க்குக்கைவல்யாழ்ப்பாணர்கடனிறுத்தன்று. வ-று.

137. தளரிய றாய் புதல்வர் தாமுண ராமைக்
களரிக் கனன் முழங்க மூட்டி - விளரிப்பண்

கண்ணினார் பாணர் களிறெறிந்து வீழ்ந்தார்க்கு
விண்ணினார் செய்தார் விருந்து. (கக)

இருவருந்தபுநிலை - எ-து. பொருபடைகளத்தவிய விருவேந்தருமிகலவிந்தன்று. வ-று.

138. காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி
வேந்த ரிருவரும் விண்படர - வேந்து
பொருபடை மின்னப் புறங்கொடாப் பொங்கி
யிருபடையு நீங்கா விகல். (கஉ)

எருமைமறம் - எ-து. வெயர்பொடிப் பச்சினங்கடைஇப் பெயர்படைக்குப் பின்னின்றன்று. வ-று.

139. கடுங்கண் மறவர் கனல்விழியாச் சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்று - னடுங்கமரு
ளாள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாள்வெள்ளந் தன்மேல் வர. (கங)

ஏமவெருமை - எ-து. குடைமயங்கிய வாளமருட் படைமயங்கப் பாழிகொண்டன்று. வ-று.

140. மருப்புத் தோளாக மதர்விடையிற் சீறிச்
செருப்புகன்று செங்கண் மறவ - னெருப்பிமையாக்
கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி
மெய்க் கொண்டான் பின்னரு மீட்டு. (கச)

ஞாழில் - எ-து. கழல்வேந்தர் படைவிலங்கி யழல்வேறிரித்தாட் டயர்ந்தன்று. வ-று.

141. ஆடலமர்ந்தா னமர் வெய்யோன் வீழ்குடர்
சூடன் மலிந்த சுழல்கட்பேய் - மீடன்
மறந்தவேன் ஞாட்பின் மலைந்தவர் மார்பந்
திறந்தவேல் கையிற் றிரித்து. (கரு)

தூழிலாட்டு - எ-து. களங்கழுமியபடையிரிய
வுளங்கழிந்தவேல்பறித்தோச்சின்று. வ-று.

142. மொய்யகத்து மன்னர் முரணினி யென்னுங்கோல்
கையகத்துக் கொண்டான் கழல் விடலை - வெய்ய
விடுசுடர் சிந்தி விளையகலம் போழ்ந்த
படுசுட ரெஃகம் பறித்து. (கசு)

முன்றேர்க்குரவை - எ-து. எழுவுறழ் திணிதோள் வேந்தன்
வெஃறேர், முழுவலி வயவர் முன்னாடின்று. வ-று.

143. ஆறு வயவர்முன் னாட வமர்க்களத்து
வானோர்மின் னாக வழிநுடங்கு - சோனைக்
கழுமணிப் பைம்பூண் கழல்வெய்யோ னூருங்
குழுமணித் திண்டேர்க் கொடி. (கஎ)

பின்றேர்க்குரவை-எ-து. கருங்கழன் மறவரொடு வெள்வளை
விறலியர், பெருந்தகை தேரின் பின்னாடின்று. வ-று.

144. கிளையாய்ந்து பண்ணிய கேள்வி யாழ்ப்பாணும்
வளையா வயவரும் பின்னாகக் - கொளையாய்ந்
தசைவிளங்கு பாடலோ டாட வருமே
திசைவிளங்கு தானையான் றேர். (கஅ)

பேய்க்குரவை - எ-து. மன்னனூரு மறமிகு மணித்தேர்ப்
பின்னு முன்னும் பேயாடின்று. வ-று.

145. முன்னரும் பின்னரு மூரிக் கடற்றானை
மன்ன னெடுந்தேர் மறனேத்தி - யொன்னார்
நிணங்கொள்பேழ் வாய நிழல்போ னுடங்கிக்
கணங்கொள்பே யாடுங் களித்து. (கக)

களிற்றுடனிலை - எ-து. ஒளிற்றெஃகம்பட வீழ்ந்த
களிற்றின் கீழ்க்கண் படுத்தன்று. வ-று.

146. இறுவரை வீழ வியக்கற் றவிர்ந்த
தறுகட் டகையரிமாப் போன்றான் - சிறுகட்
பெருங்கைக் களிறெறிந்து பின்னதன்கீழ்ப் பட்ட
கருங்கழற் செவ்வே லவன். (உ0)

ஒள்வாளமலை - எ-து. வலிகெழுதோள்வாள்வயவ
ரொலிகழலா னுடனாடின்று. வ-று.

147. வாளைபிறழுங் கயங்கடுப்ப வந்தடையா
ராளமர் வென்றி யடுகளத்துத் - தோள்பெயராக்
காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினார்
வேந்தொடு வெள்வாள் விதிர்த்து. (உக)

தானைநிலை - எ-து. இருபடையு மறம்பழிச்சப்
பொருளகத்துப் பொலிவெய்தின்று. வ-று.

148. நேரார் படையி னிலைமை நெடுந்தகை
யோரானுறைகழியா னொள்வாளுந் - தேரார்க்கும்

வெம்பரிமா வூர்ந்தார்க்கும் வெல்களிற்றின் மேலார்க்குங்
கம்பமா நின்றான் களத்து. (உஉ)

வெருவருநிலை-எ-து. விலங்கலமருள்வியலகலம் வில்லுதை
த்தகணைகிழிப்ப, நிலந்தீண்டா வகைப்பொலிந்த நெடுந்தகை
நிலையுரைத்தன்று. வ-று.

149. வெங்கண் முரசதிரும் வேலமருள் வில்லுதைப்ப
வெங்கு மருமத் திடைகுளிப்பச் - செங்கட்
புலவா னெடுந்தகை பூம்பொழி லாகங்
கலவாமற் காத்த கணை. (உ௩)

சிருங்காரநிலை - எ-து. பகைபுகழ்க்கிடந்தானை
முகைமுறுவலார் முயக்கமர்ந்தன்று. வ-று.

150. எங்கணவ னெங்கணவ னென்பா ரிகல்வாடத்
தங்கணவன் றார்தம் முலைமுகப்ப - வெங்கணைசேர்
புண்ணுடை மார்பம் பொருகளத்துப் புல்லினார்
றண்ணிடைப் பேரல்கு லார். (உ௪)

உவகைக்கலுழ்ச்சி - எ-து. வாள்வாய்த்தவடு வாழ்யாக்கைக்
கேள்கண்டு கலுழ்ந்துவந்தன்று. வ - று.

151. வெந்தொழிற் கூற்றமு நாணின்று வெங்களத்து
வந்த மறவர்கை வாடிமிப்பப் - பைந்தொடி
யாடரிமா வன்னான் கிடப்ப வகத்துவகை
யோடரிக்கண் ணீரா யுக. (உ௫)

தன்னைவேட்டல் - எ-து. தம்மிறைவன் விசும்படைந்தென
வெம்முரணா னுயிர்வேட்டன்று. வ - று.

152. வான மிறைவன் படர்ந்தென வாடுடுப்பா
மான நெய்யாக மறம்விறகாத் - தேனிமிருங்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளம
ரொள்ளழலுள் வேட்டா னுயிர். (உசு)

இதுவுமது - காய்கதிர் நெடுவேற் கணவனைக்காணிய
வாயிழை சேறலு மத்துறையாகும. வ - று.

153. கற்பின் விழுமிய தில்லைக் கடையிறந்
திற்பிறப்பு நாணு மிடையொழிய - நற்போ
ரணங்கிய வெங்களத் தாருயிரைக் காண்பான்
வணங்கிடை தானேவரும். (உஎ)

தொகைநிலை - எ-து. அழிவின்றிப் புகழ்நிறீஇ
யொழிவின்று களத்தொழிந்தன்று. வ - று.

154. மண்டமர்த் திண்டோன் மறங்கடைஇ மண்புலம்பக்
கண்டிரள் வேன்மன்னர் களம்பட்டார் - பெண்டிர்
கடிதெழு செந்தீக் கழுமினு ரின்னுங்
கொடிதேகா ணார்ந்தின் றகூற்று. (உஅ)

ஏழாவது தும்பைப்படலம் முற்றிற்று.

ஆ வெண்பா-கருச.

## அ-வது. வாகைப்படலம்.

ஓர்சால்வாகை வாகையரவ
மரசவாகை முரசவாகை
மறக்களவழியொடு களவேள்வியே
முன்றேர்க்குரவை பின்றேர்க்குரவை

பார்ப்பனவாகை வாணிகவாகை
வேளாண்வாகை பொருநவாகையே
யறிவன்வாகை தாபதவாகை
கூதிர்ப்பாசறை வாடைப்பாசறை
யரசமுல்லை பார்ப்பனமுல்லை
யவையமுல்லை கணிவன்முல்லை
மூதின்முல்லை யேறாண்முல்லை
வல்லாண்முல்லை காவன்முல்லை
பேராண்முல்லை மறமுல்லையே
குடைமுல்லையொடு கண்படைநிலையே
யவிப்பலியென்று சால்புமுல்லை
கிணைநிலையேனைப் பொருளொடுபுகற
லருளொடுநீங்க லுளப்படத்தொகைஇ
மூன்றுதலையிட்ட மூவிரண்டும்
வான்றோய்வாகைத் திணையதுவகையே.

வாகை - எ-து. இலைபுனைவாகை சூடியிகன்மலைந்
தலைகடற்றானைய ரசட்டார்த்தன்று. வ-று.

155. சூடினான்வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினார் வெல்புகழ் பல்கவிஞர் - கூடா
ருடல்வே லழுவத் தொளிதிகழும் பைம்பூ
ணடல்வேந்த னட்டார்த் தரசு. (௧)

வாகையரவம் - எ-து. வெண்கண்ணியுங் கருங்கழலுஞ்
செங்கச்சுந்தகை புனைந்தன்று. வ-று.

156. அணைய வமரு ளயில்போழ் விழுப்பு
ணிணைய வினிக்கவலை யில்லைப் - புனைக

வழலோ டிமைக்கு மணங்குடைவாண் மைந்தர்
கழலோடு பூங்கண்ணி கச்சு. (உ)

அரசவாகை - எ-து. பகலன்னவாய்மொழி
யிகல்வேந்த னியல்புரைத் தன்று. வ-று.

157. காவ லமைந்தான் கடலுலகங் காவலா
லோவ லறியா துயிர்க்குவகை - மேவருஞ்சீ
ரைந்தொழி லுன்மறை மூத்தீ யிருபிறப்பு
வெந்திறற் றண்ணளியெம் வேந்து. (௩)

முரசவாகை - எ-து. ஒலிகழலானகனகருட்
பலிபெறுமுரசின் பண்புரைத் தன்று. வ-று.

158. மதியேர் நெடுங்குடை மன்னர் பணிந்து
புதிய புகழ்மாலை வேய - நிதியம்
வழங்குந் தடக்கையான் வான்றோய் நகருண்
முழங்கு மதிரு முரசு. (௪)

மறக்களவழி - எ-து. முழவுறழ் திணிதோளானை
யுழவனாக வுரைமலிந் தன்று. வ-று.

159. அஞ்சவரு தானை யமரொன்னு நீள்வயலுள்
வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்குஞ் - செஞ்சுடர்வேற்
பைங்கட் பணைத்தாட் பகடுழவ னல்கலா
னெங்கட் கடையா விடர். (௫)

களவேள்வி - எ-து. அடுதிறலணங்கார
விடுதிறலான் களம்வேட் டன்று. வ-று.

160. பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக்
கொடித்தானை மன்னன் கொடுத்தான் - முடித்தலைத்
தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக
மூளையஞ் சோற்றை முகந்து. (சு)

முன்றேர்க்குரவை - எ-து. வென்றேந்திய விறற்படையோ
ன்றேர் முன்பேய்க் கணமா டின்று. வ-று.

161. உலவாளஞ் செய்தா னுழிவாழ்கென்று
புலவாய புன்றலைப்பே யாடுங் - கலவா
வரசதிர நூறி யடுகளம் வேட்டான்
முரசதிர வென்றதேர் முன். (எ)

பின்றேர்க்குரவை - எ-து. பெய்கழலான் றேரின்பின்
மொய்வளை விறலியர் வயவரொடாடின்று. வ-று.

162. வஞ்சமிலாக் கோலானை வாழ்த்தி வயவரு
மஞ்சொல் விறலியரு மாடுபவே - வெஞ்சமரிற்
குன்றோர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போற்
பின்றேர்க் குரவை பிணைந்து. (அ)

பார்ப்பனவாகை - எ-து. கேள்வியாற் சிறப்பெய்தியான்
வேள்வியான் விறன்மிகுத் தன்று. வ-று.

163. ஓதங் கரைதவழ்நீர் வேலியுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கு - மேதஞ்
சுடுசுடர் தாழுகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து. (க)

வாணிகவாகை - எ-து. செறுதொழிலிற் சேணீங்கியா
னறுதொழிலு மெடுத்துரைத்தன்று. வ-று.

164. உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து - முழுதுணர
வோதி யழல்வழிபட் டோம்பாத வீகையா
றாதி வணிகர்க் கரசு. (க0)

வேளாண்வாகை - எ-து. மேன்மூவருமனம்புகல
வாய்மையான் வழிமொழிந் தன்று. வ-று.

165. மூவரு நெஞ்சமர முற்றி யவரவ
ரேவ லெதிர்கொண்டு மீண்டமையா - னேவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலு
ளுழுவா னுலகிற் குயிர். (கக)

பொருள்வாகை-எ-து. புகழொடு பெருமை நோக்கியாரையு
மிகழ்தலோம்பென வெடுத்துரைத்தன்று. வ-று.

166. வெள்ளம் போற்றானை வியந்து விரவாரை
யெள்ளி யுணர்த லியல்பன்று - தெள்ளியா
ராறுமேலாறியபி னன்றித்தங் கைக்கொளார்
நீறுமேற் பூத்த நெருப்பு. (கஉ)

அறிவன்வாகை - எ-து. புகழ்நுவல முக்காலமு
நிகழ்பறிபவ னியல்புரைத் தன்று. வ-று.

167. இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போ
லம்மூன்று முற்ற வறிதலாற் - றம்மி

னுறழா மயங்கி யுறழினு மென்றும்
பிறழா பெரியார்வாய்ச் சொல். (௧௩)

தாபதவாகை - எ-து. தாபதமுனிவர் தவத்தொடு முயங்கி யோவுதலறியா வொழுக்குரைத் தன்று. வ-று.

168. நீர்பல்கான்மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி - யூரடையாக்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி. (௧௪)

கூதிர்ப்பாசறை - எ-து. கூற்றனையான்வியன்கட்டூர்க் கூதிர் வான்றளிவழங்க வாற்றாமை நனிபெருகவு மயில்வேலோ னளிதுறந்தன்று. வ-று.

169. கவலை மறுகிற் கடுங்கண் மறவ
ருவலைசெய் கூரை யொடுங்கத் - துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாண் முயக்கு. (௧௫)

வாடைப்பாசறை - எ-து. வெந்திறலான் வியன்பாசறை வேல் வயவர் விதிர்ப்பெய்த வந்துலாய்த் துயர்செய்யும் வாடை யதுமலிவுரைத்தன்று. வ-று.

170. வாடை நலிய வடிக்கணா டோணினை
யோடை மழகளிற்றா னுள்ளான்கொல் - கோடன்
முகையோ டலமர முற்றெரிபோற் பொங்கிப்
பகையொடு பாசறையு ளான். (௧௬)

அரசமுல்லை- எ-து. செருமுனையுடற்றுஞ்செஞ்சுடர்நெடுவே லிருநிலங் காவலனியல்புரைத் தன்று. வ - று.

171. செயிர்க்க ணிகழாது செங்கோ லுயரி
மயிர்க்கண் முரச முழங்க - வுயிர்க்கெல்லா
நாவ லகலிடத்து ஞாயி றனையனாய்க்
காவலன் சேறல் கடன். (௧எ)

பார்ப்பனமுல்லை - எ-து. சான்மலியுநறுந் தெரியற்கழல் வே ந்தரிகலவிக்கு நான்மறையோ னலம்பெருகு நடுவுநிலையுரை த்தன்று. வ - று.

172. ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
நல்லிசை முச்செந்தீ நான்மறையோன் - செல்லவும்
வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
யென்றன்றி மீண்டதிலர். (௧அ)

அவையமுல்லை - எ-து. நவைநீங்கநடுவுகூறு மவைமாந்த ரியல்புரைத்தன்று. வ - று.

173. தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித்
தொடைவிடை யூழிவை தோலாத் - தொடைவேட்
டழிபடலாற்று லறிமுறையேன் றெட்டின்
வழிபடர்தல் வல்லதவை. (௧௧)

கணிவன்முல்லை - எ-து. துணிபுணருந் தொல்கேள்விக் கணிவனது புகழ்கிளந்தன்று. வ - று.

174. புரையின்றித் தன்யாக்கை போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங்கறியத் - திரிவின்றி

விண்ணிவ் வுலகம் விளக்கும் விளவெல்லாங்
கண்ணி யுரைப்பான் கணி. (உ0)

மூதின்முல்லை - எ-து. அடல்வேலாடவர்க் கன்றியுமவ்வின்
மடவரன் மகளிர்க்கு மறமிகுத்தன்று. வ - று.

175. வந்தபடை நோனுள் வாயின் முலைபறித்து
வெந்திற லெஃகு மிறைக்கொளீஇ - முந்தை
முதல்வர்கற் றன்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு. (உக)

ஏறாண்முல்லை - எ-து. மாறின்றி மறங்கனலு
மேறாண் குடியெடுத் துரைத்தன்று - வ - று.

176. கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா னென்னையர் - பின்னின்று
கைபோய்க் கணையுதைப்பக் காவலன்மே லோடி
யெய்போற் கிடந்தானென் னேறு. (உஉ)

வல்லாண்முல்லை - எ-து. இல்லும்பதியு மியல்புங்கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று. வ - று.

177. வின்முன் கணைதெரியும் வேட்டைச் சிறுசிறார்
முன்முன் மூயலுகளு முன்றிற்றே - மன்முன்
வரைமார்பின் வேன்மூழ்க வாளமுவர் தாங்கி
யுரைமாலை சூடினார். (உ௩)

காவன்முல்லை - எ-து. தவழ்திரைமுழங்குந் தண்கடல்வேலிக்
கமழ்தார் மன்னவன் காவன்மிகுத்தன்று. வ - று.

178. பெரும்பூட் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்
கருங்கழல் வெண்குடையான் காவல் - விரும்பா
தொருநாண் மடியி னுலகின்மே னில்லா
திருநால் வகையா ரியல்பு. (௨௪)

இதுவுமது - தக்காங்கு பிறர்கூறினு மத்துறைக்குரித்தாகும். வ - று.

179. ஊறின் றுவகையுள் வைக வுயிரோம்பி
யாறிலொன் றூ தளித்துண்டு - மாறின்றி
வான்காவல் கொண்டான் வழிநின்று வைகலுந்
தான்காவல் கோட றகும். (௨௫)

பேராண்முல்லை - எ-று. உளம்புக லமறவேந்தன் களங்கொண்ட சிறப்புரைத்தன்று - வ - று.

180. ஏந்துவாட் டானை யிரிய வுறைகழித்துப்
போந்துவாண் மின்னும் பொருசமத்து - வேந்த
ரிருங்களி யானை யினமிரிந் தோடக்
கருங்கழலான் கொண்ட களம். (௨௬)

மறமுல்லை - எ-று. வெள்வாள்வேந்தன் வேண்டிய தீயவுங் கொள்ளாமறவன் கொதிப்புரைத்தன்று. வ - று.

181. வின்னவி றோளானும் வேண்டிய கொள்கென்னுங்
கன்னவி றிண்டோட் கழலானு - மன்னன்மு
னென்றான் கனல்விழியா வொள்வாள் வலனேந்தி
நின்றா னெடிய மொழிந்து. (௨௭)

குடைமுல்லை - எ-து. மொய்தாங்கிய முழுவலித்தோட்
கொய்தாரான் குடைபுகழ்ந் தன்று. வ-று.

182. வேயுள் விசும்பு விடங்குகதிர் வட்டந்
தாய புகழாந் தனிக்குடைக்குத் - தோய
மெதிர்வழங்கு கொண்மூ விடைபோழ்ந்த சுற்றுக்
கதிர்வழங்கு மாமலை காம்பு. (உ௮)

கண்படைநிலை - எ-து. மண்கொண்ட மறவேந்தன்
கண்படை நிலைமலிந் தன்று. வ-று.

183. கொங்கலர்தார் மன்னருங் கூட்டளப்பக் கூற்றணங்கும்
வெங்கதிர்வேற் றண்டெரியல் வேந்தர்க்குப்-பொங்கு
புனலாடை யாளும் புனைகுடைக்கீழ் வைகக்
கனலா துயிலேற்ற கண். (உக)

அவிப்பலி - எ-து. வெள்வாளமருட்செஞ்சோறல்ல
துள்ளாமைந்த ருயிர்ப்பலி கொடுத்தன்று. வ-று.

184. சிறந்த திருவெனச் செஞ்சோறு வாய்ப்ப
மறந்தரு வாளம ரொன்னும் - பிறங்கழலு
ளாருயிரொன்னு மவிவேட்டா ராங்கஃதால்
வீரிய ரெய்தற்பால் வீடு. (௩o)

சால்புமுல்லை - எ-து. வான்றோயுமலையன்ன
சான்றோர்தஞ் சால்புரைத்தன்று. வ-று.

185. உறையார் விசும்பி னுவாமதி போல
நிறையா நிலவுத லன்றிக் - குறையாத

வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறுமோ
சங்கம்போல் வாய்மையார் சால்பு. (ருக)

கிணைநிலை - எ-து. தண்பணைவய லுழவனைத்
தெண்கிணைவன் றிருந்துபுகழ் கிளந்தன்று. வ-று.

186. பகடுவாழ் கென்று பனிவய லூ ளாமை
யகடுபோ லங்கட்ட டாரித் - துகடுடைத்துக்
குன்றுபோற் போர்விற் குருசில் வளம்பாட
வின்றுபோ மெங்கட் கிடர். (ருஉ)

பொருளொடுபுகறல் - எ-து. வையகத்து விழைவறுத்து
மெய்யாய பொருணயந் தன்று. வ-று.

187. ஆமினி மூப்பு மகன்ற திளமையுந்
தாமினி நோயுந் தலைவரும் - யாமினி
மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த
வையைந்து மாய்வ தறிவு. (ருரு)

அருளொடுநீங்கல் - எ-து. ஒலிகடல்சூழ் வையகத்து
நலிவுகண்டு நயப்பவிந் தன்று. வ-று.

188. கயக்கிய நோய்வாய்க் கையிகந்து நம்மை
யியக்கிய யாக்கையி ருமுன் - மயக்கிய
பட்படா வைகும் பயன்ஞால நீள்வலை
யுட்படாம் போத லறம். (ருச)

எட்டாவது வாகைப்படலம் முற்றிற்று.

ஆ வெண்பா - கஅஅ.

## ௯ - வது. பாடாண்படலம்.

பாடாண்பாட்டே வாயினிலையே
கடவுள்வாழ்த்தொடு பூவைநிலையே
பரிசிற்றுறையே யியன்மொழிவாழ்த்தே
கண்படைநிலையே துயிலெடைநிலையே
மங்கலநிலையொடு விளக்குநிலையே
கபிலைகண்ணிய புண்ணியநிலையே
வேள்விநிலையொடு வெள்ளிநிலையே
நாடுவாழ்த்தொடு கிணைநிலைகளவழிவாழ்த்தே
வீற்றினிருந்த பெருமங்கலமே
குடுமிகளைந்தபுகழ் சாற்றுநிலையே
மணமங்கலமே பொலிவுமங்கலமே
நாண்மங்கலமே பரிசினிலையே
பரிசில்விடையே வாள்வினைவேள்வி
பாணாற்றுப்படையே கூத்தராற்றுப்படையே
பொருநராற்றுப்படையொடு விறலியாற்றுப்படையே
வாயுறைவாழ்த்தே செவியறிவுறூஉக்
குடைமங்கலமொடு வாண்மங்கலமே
மண்ணுமங்கலமே யோம்படையேனைப்
புறநிலைவாழ்த்து முளப்படத்தொகைஇ
யமரர்கண்முடியு மறுவகையாகிய
கொடிநிலைகந்தழி வள்ளிகுணஞ்சால்
புலவரையவர்வயிற் புகழ்ந்தாற்றுப்படுத்தல்
புகழ்ந்தனர்பரவல் பழிச்சினர்ப்பணித
னிகழ்ந்தகாமப் பகுதியுட்டோன்றிய
கைக்கிளைவகையும் பெருந்திணைவகையு

நற்றுனிநவின்ற பாடாண்பாட்டுங்
கடவுட்பக்கத்து மேனோர்பக்கத்து
மடவரன்மகளிர் மகிழ்ந்தபக்கமு
மாதர்மகிழ்ந்த குழவியுமூரின்
கண்ணேதோன்றிய காமப்பகுதியோ
டாங்கவாறெண் பகுதிப்பொருளும்
பாங்குறவுரைப்பது பாடாண்பாட்டே.

பாடாண்பாட்டு - எ-து. ஒளியுமாற்றலு மோம்பா வீகையு மளியுமென்றிவை யாய்ந்துரைத்தன்று. வ-று.

189. மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
யன்ன நடையினார்க் காரமுதந் - தன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப் பைந்தா
ரொரிசினவேற் றானையெங் கோ. (௧)

வாயினிலை-எ-து. புரவல னெடுங்கடை குறுகிய வென்னிலை கரவின் றுரையெனக் காவலற் குரைத்தன்று. வ-று.

190. நாட்டிய வாய்மொழி நாப்புலவர் நல்லிசை
யீட்டிய சொல்லா னிவனென்று - காட்டிய
காயலோங் கெஃகிமைக்குங் கண்ணார் கொடிமதில்
வாயிலோய் வாயி லிசை. (௨)

கடவுள்வாழ்த்து - எ - து. காவல்கண்ணிய கழலோன் கை தொழு மூவரி லொருவனை யெடுத்துரைத் தன்று. வ-று.

191. வைய மகனை யடிப்படுத்தாய் வையகத்தா
ருய்ய வுருவம் வெளிப்படுத்தாய் - வெய்ய

வடுந்திற லாழி யரவணையா யென்று
நெடுந்தகை நின்னையே யாம். (௩)

பூவைநிலை - எ-து. கறவை காவல னிறமொடு பொரீஇப்
புறவலர்பூவைப் பூப்புகழ்ந்தன்று. வ-று.

192. பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோ
யாவை விழுமிய யாமுணரோ - மேவார்
மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை
நிறத்தொடு நேர்கருத லான். (௪)

பரிசிற்றுறை - எ-து. மண்ணகங் காவன் மன்னன் முன்ன
ரொண்ணியபரிசி லிதுவெனவுரைத் தன்று. வ-று.

193. வரிசை கருதாது வான்போற் றடக்கைக்
குரிசினீ நல்கயாங் கொள்ளும் - பரிசி
லடுகளை மார்ப வமரோட்டித் தந்த
படுகளி நால்வாய்ப் பகடு. (௫)

இயன்மொழிவாழ்த்து - எ-து. இன்னோரின்னவை கொடுத்
தனர்நீயு மன்னோர்போல வவையெமக் கீயென, வென்னோ
ருமறிய வெடுத்துரைத்தன்று. வ-று.

194. முல்லைக்குத்தேரு மயிலுக்குப் போர்வையு
மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத் - தொல்லை
யிரவாம லீந்த விறைவர்போ னீயுங்
கரவாம லீகை கடன் (௬)

இதுவுமது - மயலறுசீர்த்தி மான்றேர்மன்னவ
னியல்பே மொழியினுமத்துறையாகும். வ-று.

195. ஒள்வா ளமரு ளுயிரோம்பான் ருனியக்
கொள்வார் நடுவட் கொடையோம்பான் - வெள்வாள்
கழியாமே மன்னர் கதங்காற்றும் வேலா
னெழியாமே யோம்பு முலகு. (எ)

கண்படைநிலை-எ-து. நெடுந்தேர்த்தானை நீறுபட நடக்குங் கடுந்தேர் மன்னவன் கண்படை மலிந்தன்று. வ-று.

196. மேலா ரிறையமருண் மின்னூர் சினஞ்சொரியும்
வேலான் விறன்முனை வென்றடக்கிக் - கோலாற்
கொடிய வுலகிற் குறுகாமே யெங்கோன்
கடிய துயிலேற்ற கண். (அ)

துயிலெடைநிலை - எ-து. அடுதிறன் மன்னனை யருளிய வெழுகெனத் தொடுகழன் மன்னனைத் துயிலெடுப்பின்று. வ-று.

197. அளந்த திறையா ரகலிடத்து மன்னர்
வளந்தரு வேலோய் வணங்கக் - களந்தயங்கக்
பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்க ணேற்ற றுயில். (கூ)

மங்கலநிலை-எ-து. கங்குற்கணை துயி லெழுந்தோன் முன்னர் மங்கலங்கூறிய மலிவுரைத் தன்று. வ-று.

198. விண்வேண்டின் வேருதன் மங்கலம் வேந்தற்கு
மண்வேண்டிற் கைகூப்பன் மங்கலம் - பெண்வேண்டிற்
றுன்னன் மடவார்க்கு மங்கலந் தோலாப்போர்
மன்னன் மலைபுரையு மார்பு. (கo)

இதுவுமது - மன்னிய சிறப்பின் மங்கலமரபிற்
றுன்னினனென்றலு மத்துறையாகும் - வ-று.

199. தீண்டியுங் கண்டும் பயிற்றியுந் தன்செவியால்
வேண்டியுங் கங்குல் விடியலு - மீண்டிய
மங்கல மாய நுகர்ந்தான் மறமன்னர்
வெங்களத்து வேலுயர்த்த வேந்து. (கக)

விளக்குநிலை - எ-து. அளப்பருங் கடற்றுனையான்
விளக்கு நிலைவிரித் துரைத்தன்று. வ-று.

200. வளித்துரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி
யொளிசிறந் தோங்கி வரலா - லளிசிறந்து
நன்னெறியே காட்டு நலந்தெரிகோ லாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு. (கஉ)

இதுவுமது - அடரவிர்பைம் பூண்வேந்தன் றன்னைச்
சுடரொடு மொழியினுமத் துறையாகும். வ-று.

201. வெய்யோன் கதிர்விரிய விண்மே லொளியெல்லாம்
பையாந் தொடுங்கிப் பறைந்தாங்கு - வையகத்துக்
கூத்தவை யேத்துங் கொடித்தேரான் கூடியபின்
வேத்தவையுட் பையாக்கும் வேந்து. (கங)

கபிலைகண்ணியபுண்ணியநிலை-எ-து. அண்ணாுன்மறையந்த
ணாளர்க்குக் கண்ணிய கபிலை நிலையுரைத்தன்று. வ-று.

202. பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
குருக்கட் கபிலை கொடுத்தான் - செருக்கோ

டிடிமுரசத் தானை யிகலிரிய வெங்கோன்
கடிமுரசங் காலைச் செய (௧௪)

வேள்விநிலை - எ-து. அந்தமில் புகழா னமரரு மகிழச்
செந்தீவேட்ட சிறப்புரைத் தன்று. வ-று.

203. கேள்வி மறையோர் கிளைமகிழ்த லென்வியப்பாம்
வேள்வி விறன்வேந்தன் றன்வேட்ப - நீள்விசும்பி
னீர்ந்தா ரிமையோரு மெய்தி யழல் வாயா
லார்ந்தார் முறையா லவி. (௧௫)

வெள்ளிநிலை - எ-து. துயர்தீரப் புயறருமென
வுயர்வெள்ளி நிலையுரைத் தன்று. வ-று.

204. சூழ்கதிர் வான்விளங்கும் வெள்ளி சுடர்விரியத்
தாழ்புயல் வெள்ளந் தருமரோ - சூழ்புரவித்
தேர்விற்றார் தாங்கித் திகழ்ந்திலங்கு வேலாய்நின்
மார்பிற்றார் கோலி மழை. (௧௬)

நாடுவாழ்த்து - எ-து. தாட்டாழ் தடக்கையா
ளுட்டதுவள முரைத்தன்று. வ-று.

205. எண்ணினிட ரெட்டு மொழித்துப் பழனநெற்
கண்ணின் மலரக் கருநீலம் - விண்ணின்
வகைத்தாய் வளனொடு வைகின்ற வென்வே
னகைத்தாரான் றன்விரும்பு நாடு. (௧எ)

கிணைநிலை - எ-து. திருக்கிளருமகன் கோயி
லரிக்கிணைவன் வளமுரைத்தன்று. வ-று.

206. வெள்ளிமுளைத்த விடியல் வயலாமை
யள்ளகட் டன்ன வரிக்கிணை - வள்ளியோன்
முன்கடை தட்டிப் பகடுவாழ் கென்னுமு
னென்கடை நீங்கிற்றிடர். (கஅ)

களவழிவாழ்த்து - எ-து. செங்களத்துச் செழுஞ்செல்வம்
வெண்டுறையாழ்ப் பாணர்விளம்பின்று. வ-று.

207. ஈண்டியெருவை யிறகுளரும் வெங்களத்து
வேண்டியாங் கொண்ட விறல்வேழம் - வேண்டாள்
வளைகள் வயிரியம்பும் வாட்டானை வேந்தே
விளைகட் பகர்வாள் விலை. (கக)

வீற்றினிதிருந்தபெருமங்கலம் - எ-து, கூற்றிருந்தகொலைவே
லான், வீற்றிருந்த விறன்மிகுத்தன்று. வ-று.

208. அழலவிர் பைங்க ணரிமா னமளி
நிழலவிர் பூண்மன்னர் நின்றேத்தக் - கழல்புனைந்து
வீமலிதார் மன்னனுய் வீற்றிருந்தான் வீங்கொலிநீர்ப்
பூமலி நாவற் பொழிற்கு. (உ0)

குடுமி களைந்த புகழ்சாற்றுநிலை - எ-து. நெடுமதிலெறிந்து
நிரைத்தார்மன்னன், குடுமிகளைந்த மலிவுரைத்தன்று. வ-று.

209. பூந்தாமரையிற் பொடித்துப் புகல்விசும்பின்
வேந்தனை வென்றான் விறன்முருக - னேந்து
நெடுமதில் கொண்டு நிலமிசையோ ரேத்தக்
குடுமி களைந்தானெங் கோ. (உக)

மணமங்கலம் - எ-து. இகலடுதோளெறிவேன் மன்னன்
மகளிரொடு மணந்தமங்கலங் கூறின்று. வ-று.

210, அணக்கருந் தாணையா னல்லியந்தார் தோய்ந்தோண்
மணக்கோல மங்கலம்யாம் பாட - வணக்கருஞ்சீ
ராரெயின் மன்னன் மடமக ளம்பணைத்தோட்
கூரெயிற்றுச் செவ்வாய்க் கொடி. (உஉ)

பொலிவுமங்கல மென்பது - வேல்வேந்த னுண்மகிழப்
பாலகன் பிறப்பப் பலர்புகழ்ந்தன்று. வ-று.

211. கருங்கழல் வெண்குடைக் காவலற்குச் செவ்வாய்ப்
பெருங்கட் புதல்வன் பிறப்பப் - பெரும்பெயர்
விண்ணோர் மலிந்தார் வியலிடத்தா ரோத்திறு
ரெண்ணு ரவிந்தா ரிகல். (உங)

நாண்மங்கலம் - எ-து. அறந்தருகோலருள் வெய்யோன்
பிறந்தநாட் சிறப்புரைத்தன்று. வ-று.

212. கரும்பகடுஞ் செம்பொன்னும் வெள்ளணிநாட் பெற்றார்
விரும்பி மகிழ்தல் வியப்போ - சுரும்பிமிர்தார்
வெம்முரண் வேந்தரும் வெள்வளையார் தோள்விழைந்து
தம்மதி ருந்திறப்பர் தாழ். (உச)

பரிசினிலை - எ-து. புரவலன் மகிழ்தூங்க
விரவலன் கடைகூட்டின்று. வ-று.

213. வெல்புரவிபூண்ட விளங்குமணித்திண்டேர்
நல்கிய பின்னு நனிநீடப் - பல்போர்

விலங்குங் கடற்றானை வேற்றார் முனைபோற்
கலங்கு மளித்தென் கடும்பு. (உரு)

பரிசில் விடை - எ-து. வேந்தனுண் மகிழ வெல்புக ழறைந்
தோர்க், கீந்தபரிசிலின் புறவிடுத்தன்று. வ-று.

214. படைநவின்ற பல்களிறும் பண்ணமைந்த தேரு
நடைநவின்ற பாய்மாவு நல்கிக் - கடையிறந்து
முன்வந்த மன்னர் முடிவணங்குஞ் சேவடியாற்
பின்வந்தான் பேரருளி னான். (உசு)

ஆள்வினை வேள்வி - எ-து. வினைமுற்றிய கனைகழலோன்
மனைவேள்வி மலிவுரைத்தன்று - வ-று.

215. நின்ற புகழொடு நீடுவாழ் கிவ்வுலகி
லொன்ற வுயிர்களிப்ப வோம்பலான் - வென்றமருள்
வாள்வினை நீங்கி வருக விருந்தென்னு
மாள்வினை வேள்வி யவன். (உஎ)

பாணாற்றுப்படை - எ-து. சேணோங்கிய வரையதரிற்
பாணனையாற்றுப் படுத்தன்று. வ-று.

216. இன்றொடை நல்லிசை யாழ்ப்பாண வெம்மைப்போற்
கன்றுடை வேழத்த கான்கடந்து - சென்றடையிற்
காமரு சாயலாள் கேள்வன் கயமலராந்
தாமரை சென்னிதரும். (உஅ)

கூத்தராற்றுப்படை - எ-து. ஏத்திச்சென்ற விரவலன்
கூத்தரை யாற்றுப்படுத்தன்று. வ-று.

217. கொலைவிற் புருவத்துக் கொம்பன்னார் கூத்தின்
றலைவ தவிராதுசேறி - சிலைகுலாங்
காரினைவென்ற கவிகையான் கைவளம்
வாரினை கொண்டு வரற்கு. (உக)

பொருந ராற்றுப்படை - எ-து. பெருநல்லா னுழையிராகெ
னப், பொருநனை யாற்றுப்படுத் தன்று. வ-று.

218. தெருவி னலமருந் தெண்கட்ட டாரிப்
பொருவில் பொருநநீ செல்லிற் - செருவி
னடுந்தடக்கை நோன்று ளமர்வெய்யோ னீயு
நெடுந்தடக்கை யானை நிரை. (௩0)

விறலியாற்றுப் படை - எ-து. திறல்வேந்தன் புகழ்பாடும்
விறலியை யாற்றுப்படுத் தன்று. வ-று.

219. சில்வளைக்கைச் செவ்வாய் விறலி செருப்படையான்
பல்புகழ் பாடிப் பெயர்தியே - னல்லவையோ
ரோத்த விழையணிந் தின்னேவருதியாற்
பூத்த கொடிப்போற் பொலிந்து. (௩க)

வாயுறைவாழ்த்து - எ-து, பிற்பயக்கு மெஞ்சொல்லென்
முற்படர்ந்த மொழிமிகுத்தன்று. வ-று.

220. எஞ்சொல் லெதிர்கொண் டிகழான் வழிநிற்பிற்
குஞ்சர வெல்படையான் கொள்ளானோ - வெஞ்சு
மிகலிட னின்றி யெறிமுந்நீர் சூழ்ந்த
வகலிட மங்கை யகத்து, (௩உ)

செவியறிவுறூஉ - எ-து. மறந்திரிவில்லா மன்பெருஞ்சூழ்ச்சி யறந்தெரி கோலாற் கறியவுரைத்தன்று. வ-று.

221. அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே - முந்தை
வழிநின்று பின்னை வழங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை. (௩௧)

குடைமங்கலம் - எ-து. நாற்றிசையும் புகழ்பெருக வீற்றிருந்தான் குடைபுகழ்ந்தன்று. வ-று.

222. தன்னிழலோ ரெல்லார்க்குந் தண்கதிராந் தற்சேரா
வெந்நிழலா ரெல்லார்க்கும் வெங்கதிரா - மின்னிழல்வேன்
மூவா விழுப்புகழ் முல்லைத்தார்ச் செம்பியன்
கோவா யுயர்த்தகுடை. (௩௨)

வாண்மங்கலம் - எ-து. கயக்கருங்கடற்றானை வயக்களிற்றான் வாட்புகழ்ந் தன்று. வ-று.

223. கொங்கவி ழைம்பான் மடவார் வியன்கோயின்
மங்கலங் கூற மறங்கனலுஞ் - செங்கோ
னிலந்தரியச்செல்லு நிரைதண்டார்ச் சேரன்
வலந்தரிய வேந்திய வாள் (௩௫)

மண்ணுமங்கலம் - எ-து. எண்ணருஞ் சீர்த்தியை யிறைவனெய்திய, மண்ணுமங்கலம் மறுவின்று கிளந்தன்று. வ-று.

224. கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண்
மங்கலங் கூற மலிவெய்திக் - கங்கையாள்

பூம்புன லாகந் தழீஇயினன் போரடுதோள்
வேம்பார் தெரிய லெம் வேந்து. (௩௫)

ஓம்படை - எ-து. இன்னதுசெய்த லியல்பெனவிறைவன்
முன்னின்றறிவன் மொழிதொடர்ந் தன்று. வ-று.

225. ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலா
மாழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றுறகற்றி
யேழ்கடிந் தின்புற் றிரு. (௩௭)

புறநிலைவாழ்த்து - எ-து.வழிபடுதெய்வநிற்புறங்காப்ப
வழிவழிசிறக்கென வாய்மொழிந்தன்று. வ-று.

226. கொடிபடு முத்தலைவேற் கூற்றக் கணிச்சிக்
கடிபடு கொன்றையான் காப்ப - நெடிதுலகிற்
பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற
மாமலைபோன் மன்னுக நீ. (௩௮)

கொடிநிலை - எ-து மூவர்குடியுளு மொன்றொடுபொரீஇ
மேவருமன்னவன் கொடிபுகழ்ந்தன்று. வ-று.

227. பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
பாம்புண் பறவைக் கொடிபோல - வோங்குக
பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
கொல்யானை மன்னன் கொடி. (௩௯)

கந்தழி - எ-து.சூழுநேமியான் சோவெறிந்த.
வீழாச்சிர்விறன் மிகுத்தன்று. வ-று.

228. மாயவன் மாய மதுவான் மணிநிரையு
ளாயனு வெண்ண லவனருளான் - காயக்
கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்
சுழலழலுள் வைகின்று சோ. (௪0)

வள்ளி - எ-து-பூண்முலையார்மனநெக
வேலனொடுவெறியாடின்று. வ-று.

229. வேண்டுதியா னீயும் விழைவோ விழுமிதே
யீண்டியம் விம்ம வினவளையா ர் - பூண்டயங்கச்
சூலமோ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு
வேலனோ டாடும் வெறி. (௪௧)

புலவராற்றுப்படை-எ-து.இருங்களவானத் திமையோருழை
ப், பெரும்புலவனையாற்றுப் படுத்தன்று. வ-று.

230. வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்லி
னெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட்
கிருளீயு ஞாலத் திடரெல்லா நீங்க
வருளீயு மாழிய வன். (௪௨)

புகழ்ந்தனர்பரவல் - எ-து-இன்னதொன்றெய்துதுமிருநிலத்
தியாமெனத், துன்னருங்கடவுடொழுகழுதெழுதன்று.வ-று

231. சூடிய வான்பிறையோய் சூழ்சுடலை நீரரங்கத்
தாடி யசையா வடியிண்டும் - பாடி
யுரவுநீர் ஞாலத் துயப்போக வென்று
பரவுதும் பல்காற் பணிந்து. (௪௩)

பழிச்சினர்ப்பணிதல் — எ-து.வயங்கிய புகழ்வானவனைப் பயன் கருதிப் பழிச்சினர்ப் பணிந்தன்று. வ-று.

232. ஆட லமைந்தா னடியடைந்தா ரொன்பெரு
ரோடரி யுண்க ணுமையொருபாற் - கூடிய
சீர்சா லகலத்தைச் செங்க ணழலுகந்
தாராய்த் தழுவப் பெறும். (உச)

கைக்கிளை - எ-து. தண்டாக்காதற் றளிரிய றலைவன் வண்டார்விரும்பிய வகையுரைத்தன்று. வ-று.

233. மங்குன் மனங்கவர மான்மாலை நின்றேற்குப்
பொங்குமருவிப் புனலுடன் - கங்குல்
வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித்
தருவான்கொன் மார்பணிந்த தார். (உரு)

பெருந்திணை - எ-து. பெய்கழற் பெருந்தகை பேணுமுயக்கி வர்ந்து மல்கிருட்செல்வாள் வகையுரைத் தன்று. வ-று.

234. வயங்குளைமான் றென்னன் வரையகலந் தோய
வியங்காவிருளிடைச் செல்வேன் - மயங்காமை
யோடரிக் கண்ணு யுறைகழிவாண் மின்னின்றுன்
மாட மறுகின் மழை. (உசு)

புலவிப் பொருளாகத் தோன்றியபாடாண்பாட்டு. எ-து. வில்லேர்நுதலி விறலோன் மார்பம் புல்லேம்யாமெனப் புலந்துரைத்தன்று. வ-று.

235. மலைபடுசாந்த மலர்மார்ப யாநின்
பலர்படிசெல்வம் படியேம் - புலர்விடியல்

வண்டி னங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகரிற்
கண்டனங் காண்டற் கினிது. (௪௭)

கடவுண்மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்தபக்கம் - எ-று.
இமையாநாட்டத் திலங்கிழைமகளி
ரமையாக்காதலமரரை மகிழ்ந்தன்று. வ-று.

236. நல்கெனி னாமிசையா ளோமென்னுஞ் சேவடிமே
லொல்கெனி னுச்சியா ளோமென்னு - மல்கிரு
ளாட லமர்ந்தாற் கரிதா லுமையாளே
யூட லுணர்த்துவ தோ ராறு. (௪௮)

கடவுண்மாட்டு மானுடப் பெண்டிர் நயந்தபக்கம். எ-று.
முக்கணான்முயக்கம்வேட்ட
மக்கட்பெண்டிர் மலிவுரைத்தன்று. வ-று.

237. அரிகொண்ட கண்சிவப்ப வல்லினென் னாகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி - வரிவண்டு
பண்ணலங் கூட்டுண்ணும் பனிமலர்ப்பா சூரொன்
னுண்ணலங் கூட்டுண்டா னூர். (௪௯)

குழவிக்கட் டோன்றிய காமப்பகுதி. எ-று.
இளமைந்தர் நலம்வேட்ட
வளமங்கையர் வகையுரைத் தன்று. வ-று.

238. வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா
வரிக்கண்ணி யஞ்சி யலற - வெரிக்கதிர்வேற்
செங்கோல னுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினு
மெங்கோலந் தீண்ட லினி. (௫௦)

ஊரின்கட்டோன்றியகாமப்பகுதி. எ-து.
நீங்காக்காதன் மைந்தரு மகளிரும்
பாங்குறக் கூடும் பதியுரைத் தன்று. வ-று.

239. ஊடிய வூடலகல வுளநெகிழ்ந்து
வாடியமென்றோள் வளையொலிப்பக் - கூடியபின்
யாமநீ டாகென்ன யாழ்மொழியார் கைதொழூஉ
மேமநீர்க் கச்சியெம் மூர். (ருக)

ஒன்பதாவது பாடாண்படலம் முற்றிற்று.

ஆ வெண்பா - உருக.

---

## கo - வது. பொதுவியற்படலம்.

சீர்சால்போந்தை வேம்போடாரே
யுன்னநிலையே யேழகநிலையே
கழனிலையேனைக் கற்காண்டல்லே
கற்கோணிலையே கன்னீர்ப்படுத்தல்
கன்னடுதல்லே கன்முறைபழிச்ச
லிற்கொண்டுபுகுத லெனப்பன்னிரண்டும்
பொதுவியற்பால வென்மனார்புலவர்.

அவற்றுள்போந்தை - எ-து. கலவாமன்னர் கண்ணுறுஞாட்
பிற், புலவேல் வானவன் பூப்புகழ்ந் தன்று. வ-று.

240. குடையலர் காந்தட்டன் கொல்லிச் சுனைவாய்த்
தொடையவிழ் தண்குவளை சூடான் - புடைதிகழுந்
தேரதிரப் பொங்குந் திருந்துவேல் வானவன்
போரொதிற் போந்தையாம் பூ. (க)

வேம்பு - எ-து. விரும்பாரமரிடை வெல்போர்வழுதி
சுரும்பார் முடிமிசைப் பூப்புகழ்ந்தன்று. வ-று.

241. தொடியணிதோ ளாடவர் தும்பை புனையக்
கொடியணித்தேர்க் கூட்டணங்கும் போழ்தின் - முடியணியுஞ்
சாத்தல்சால் செங்கோற் கடுமா னெடுவழுதி
யேத்தல்சால் வேம்பி னிணர். (உ)

ஆர் - எ-து. விறற்படைமறவர் வெஞ்சமங்காணின்
மறப்போர்ச் செம்பியன் மலைபூவுரைத்தன்று. வ-று.

242. கொல்களி றூர்வர் கொலைமலி வாண்மறவர்
வெல்கழல் வீக்குவர் வேலிளையர் - மல்குங்
கலங்க லொலிபுனற் காவிரி நாட
னலங்க லமரழுவத் தார். (௩)

உன்னநிலை-எ-து. துன்னருஞ்சிறப்பிற் றொடுகழன்மன்னனை
யுன்னஞ்சேர்த்தியுறுபுகழ்மலைந்தன்று. வ-று.

243. துன்னருந் தானைத் தொடுகழலான் றுப்பெதிர்ந்து
முன்னர் வணங்கார் முரண்முருங்க - மன்னரு
மீடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுநின்
கோடெலா முன்னங் குழை. (௪)

ஏழகநிலை - எ-து. ஏழகமூரினுமின்னனென்றவன்
றாழ்விலூக்கமொடு தகைபுகழ்ந்தன்று. வ-று.

244. எம்மனை யாமகிழ வேழக மேற்கொளினுந்
தம்மதி றாழ்வீழ்த் திருக்குமே - தெம்முனையுண்

மாறுெடு தோன்றி மறலுங்கா லேழகத்
தாறுெடு நேரா மரசு. (ரு)

இதுவுமது - ஏந்துபுகழுலகினிளமைநோக்கான்
வேந்துநிற்றலுமேழகநிலையே. வ-று.

245. வேண்டார் பெரியர் விறல்வேலோன் றுணிளையன்
பூண்டான் பொழில்காவ லென்றுரையா - லீண்டு
மருளன்மின் கோள்கருது மால்வரை யாளிக்
குருளையுங் கொல்களிற்றின் கோடு. (சு)

கழனிலை - எ-து. அடுமுரணகற்றுமாளுஞுஞாட்பிற்
கடுமுரண்வயவன் கழல்புனைந்தன்று. வ-று.

246. வாளமரின் முன்விலக்கி வான்படர்வார் யார்கொலோ
கேளல்லார் நீக்கிய கிண்கிணிக்காற் - காளை
கலங்கழல் வாயிற் கடுத்தீற்றி யற்முற்
பொலங்கழல் கான்மேற் புனைவு. (எ)

கற்காண்டல் - எ-து. ஆறுவென்றியமரில் வீழ்ந்தாற்குக்
கானநீளிடைக் கற்கண்டன்று. வ-று.

247. மிகையணங்கு மெய்ந்நிறீஇ மீளி மறவர்
புகையணங்கப் பூமாரி சிந்திப் - பகையணங்கும்
வீளைக் கடுங்கணையான் வேருகி விண்படர்ந்த
காளைக்குக் கண்டமைத்தார் கல். (அ)

கற்கோணிலை - எ-து. மண்மருளத்துடிகறங்க
விண்மேயாற்குக் கற்கொண்டன்று. வ-று.

248. பூவொடு நீர்தூவிப் பொங்க விரைபுகைத்து
நாவுடை நன்மணி நன்கியம்ப - மேவா
ரழன்மறங் காற்றி யவிந்தாற்கென் றேத்திக்
கழன்மறவர் கைக்கொண்டார் கல். (க)

கன்னீர்ப்படுத்தல் - எ-து. வண்டுசூழ் தாமம்புடையனவாகக் கண்டுகொண்டகன்னீர்ப்படுத்தன்று. வ-று.

249. காடு கனலக் கனலோன் சினஞ்சொரியக்
கூடிய வெம்மை குளிர்கொள்ளப் - பாடி
நயத்தக்க பண்ணி நறுவிரைகொண் டாட்டிக்
கயத்தகத் துய்த்திட்டார் கல். (கo)

இதுவுமது - ஓங்கியகல்லுய்த் தொழுக்க
லாங்கெண்ணினுமத்துறையாகும். வ-று.

250. கணார்ந் துவப்பக் கடுங்கண் மறவர்
பிணார்ந்து பேய்வழங்கு ஞாட்பி - னிணார்
விழுக்கினல் வேய்ந்த விறல்வேலோர் கல்லை
யொழுக்கினு ரொன்றொருவர் முன். (கக)

கன்னடுதல் - எ-து. அவன்பெயர்கன்மிசைப்பொறித்துக் கவின்பெறக்கன்னாட்டின்று. வ-று.

251. மாலை துயல மணியெறிந்து மட்டுகுத்துப
பீலி யணிந்து பெயர்பொறித்து - வேலமரு
ளாண்டக நின்ற வமர்வெய்யோற் காகென்று
காண்டக நாட்டினார் கல். (கஉ)

கன்முறைபழிச்சல் - எ-து. நிழலவிரொழின்மணிப்பூட் கழல்வெய்யோன்கல்வாழ்த்தின்று. வ-று.

252. அடும்புகழ் பாடி யழுதழுது நோனு
விடும்பையுள் வைகிற் றிருந்த - குடும்பொடு
கைவண் குரிசிற்கற் கைதொழூஉச் செல்பாண
டெய்வமாய் நின்றான் றிசைக்கு. (கங)

இற்கொண்டுபுகுதல்-எ-து. வேத்தமருள்விளிந்தோன் கல்லெ
ன, வேத்தினரதுவன்றியிற்கொண்டுபுக்கன்று. வ-று.

253. வாட்புகா வூட்டி வடிமணி நின்றியம்பக்
கோட்புலி யன்ன குரிசிற்க - லாட்கடிந்து
விற்கொண்ட வென்றி விறன்மறவ ரொல்லாரு
மிற்கொண்டு புக்கா ரியைந்து. (கச)

---

முதுபாலையே சுரநடை யேனைத்
தபுதாரநிலையே தாபத நிலையே
தலைப்பெயர் நிலையே பூசன்மயக்கே
மாலைநிலையே மூதா னந்த
மானந்தம்மே யானந்தப் பையுள்
கையறு நிலையுளப் படப்பதி னொன்று
மையறு சிறப்பிற் பொதுவியற் பால.

அவற்றுள், முதுபாலை - எ-து. காம்புயர்கடத்திடைக்கணவ
னையிழந்த பூங்கொடிமடந்தை புலம்புறாத்தன்று, வ-று.

254. நீர்மலி கண்ணோடு நின்றே நிலையிரங்காய்
தார்மலி மார்பன் றகையகலஞ் - சூர்மகளே
வெள்ளில் விளைவுதிரும் வேயோங்கு வெஞ்சுரத்துக்
கொள்ளணீ கோடல் கொடிது. (க)

சுரநடை - எ-து. மூதரினிவந்த முதுகழை யாரிடைக்
காதலியிழந்த கணவனிலை யுரைத்தன்று. வ-று.

255. உரவெரி வேய்ந்த வுருப்பவிர் கானுள்
வரவெதிரின் வைவேல்வாய் வீழ்வாய் - கரவினாற்
பேதையைப் பெண்ணியலைப் பெய்வளையை யென்மார்பிற்
கோதையைக் கொண்டளித்த கூற்று. (உ)

தபுதாரநிலை - எ-து. புனையிழையிழந்தபிற்புலம்பொடுவைகி
மனையகத்துறையு மைந்தனிலை யுரைத்தன்று. வ-று.

256. பைந்தொடி மேலுலகை மெய்தப் படருழந்த
மைந்தன் குரிசின் மழைவள்ள - லெந்தை
தபுதாரந் தாழ்ந்த தனிநிலைமை கேளாச்
செவிடா யொழிகென் செவி. (௩)

தாபதநிலை - எ-து. குருந்தலர்கண்ணிக் கொழுநன்மாய்ந்தெ
னக், கருந்தடங்கண்ணிகைம்மைகூறின்று. வ-று.

257. கலந்தவனைக் கூற்றங் கரப்பக் கழியா
தலந்தினையு மவ்விளைத் தோளி - புலந்தவன்
றோடு பொங்கி நிலநசைஇத் தான்மிசையுங்
காரடகின் மேல்வைத்தாள் கை. (௪)

தலைப்பெய்நிலை - எ-து. இன்கதிர் முறுவற் பாலகனென்னுந் தன்கடனிறுத்ததாய்தபு நிலையுரைத்தன்று. வ-று.

258. இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே
தடம்பெருங்கட் பாலக னென்னுங்-கடன்கழித்து
முள்ளெயிற்றுப் பேதையாள் புக்காண் முரணவியா
வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய். (ரு)

பூசன்மயக்கு - எ-து. பல்விதழ் மழைக்கட்பாலகன் மாய்ந் தெனப் புல்லியபெருங்கிளை பூசல்கூறின்று. வ-று.

259. அலர்முலை யஞ்சொ லவளொழிய வவ்விற்
குலமுதலைக் கொண்டொளித்த லன்றி - நிலமுறப்
புல்லிய பல்கிளைப் பூசல் பரியுமோ
கொல்லிய வந்தொழியாக் கூற்று. (கூ)

இதுவுமது - வேந்தன் மாய்ந்தென வியலிடம் புலம்பினு மாய்ந்த புலவரதுவெனமொழிப. வ-று.

260. எண்ணி னிகல்புரிந்தா ரெய்தாத தில்போலுங்
கண்ணொளி வேலான் கரந்தபி - னண்ணல்
புகழொடு பூசன் மயங்கிற்றுப் பொங்கு
மகழ்கடல் வேலி யகம். (எ)

மாலைநிலை - எ-து. கதிர்வேற்கணவனொடு கனையெரி மூழ்கு மதியேர் நுதலி மாலைநின் றன்று. வ-று.

261. சோலை மயிலன்னா டன்கணவன் சொல்லியசொன்
மாலைநிலையா மனங்கடைஇக் - காலைப்

புகையழல் வேலான் புணர்ப்பாகி நின்ற
ளகையழ லீமத் தகத்து. (அ)

மூதானந்தம் - எ-து. கயலேர் கண்ணி கணவனொடு முடிய
வியனெறிச்செல்வோர் வியந்துரைத் தன்று. வ-று.

262. ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கிருயி ரென்ப ரிடைதெரியார் - போரில்
விடனேந்தும் வேலாற்கும் வெள்வளையி னாட்கு
முடனே யுலந்த துயிர். (கூ)

இதுவுமது - கொடியான் கூர்ங்கணை குளிப்பத்தன்றொழின்
முடியான விதலு மூதானந்தம். வ-று.

263. முந்தத்தான் மாவொடு புக்கு முனையமருட்
சிந்தத்தார் வந்தார் செருவிலக்கிக் - குந்தத்தாற்
செல்கணை மாற்றிக் குரிசில் சிறைநின்றான்
கொல்கணைவாய் வீழ்தல் கொடிது. (கo)

ஆநந்தமென்பது - ஆடமைத்தோளி விருச்சியஞ் சோகியும்
வேறுபடவஞ்சி விதுப்புற்றன்று. வ-று.

264. வேந்தார்ப்ப வெஞ்சமத்து வேலழுவந் தாங்கினான்
சாந்தா ரகலத்துச் சால்வடுப்புண் - டாந்தணியா
மன்னுத சோகி மயங்கின வாய்ப்புள்ளு
மென்னுங்கொல் பேதை யினி. (கக)

இதுவுமது - தவப்பெரிய வெஞ்சமங் குறுகி
யவற்கிரங்கினுமத்துறையாகும். வ-று.

265. இன்னாத சோகி யிசையா விரிச்சியு
மன்று வலமரு மென் றுருயிரு - மென்னுங்கோ
ளுருக்கார் மறமன்னர் தோலாத் தடிகறங்கப்
புக்கான் விடலையும் போர்க்கு. (கஉ)

ஆநந்தப்பையுள் - எ-து. விழுமங்கூர் வேய்த்தோளரிவை கொழுநன் வீயக் குழைந்து மயங்கின்று. வ-று.

266. புகழொழிய வையகத்துப் பூங்கழற் காளை
திகழொளி மாவிசும்பு சேர - விகழ்வார்முன்
கண்டே கழிகாத லில்லையாற் கைசோர்ந்
துண்டே யளித்தென் னுயிர். (கரு)

கையறுநிலை - எ-து. செய்கழன்மன்னன் மாய்ந்தெனச்சேர்ந்தோர், கையறவுரைத்துக் கைசோர்ந்தன்று. வ-று.

267. தாயன்னான் றார்விலக்கி வீழத் தளர்வொடு
நீயென்னாய் நின்றாயென் னெஞ்சளியை - யீயென்றார்க்
கில்லென்ற றேற்று விகல்வெய்யோன் விண்படரப்
புல்லென்ற நாப்புலவர் போன்று. (கசு)

இதுவுமது - கழிந்தோன்றன்புகழ் காதலித்துரைப்பினு மொழிந்தனர்புலவ ரத்துறையென்ன. வ-று.

268. நின்று நிலமிசையோ ரேத்த நெடுவிசும்பிற்
சென்று கழிந்தான் செருவெய்யோ - னென்று
மழலுங் கதிர்வே லவன்புகழ் பாடி
யுழலு முலகத் துயிர். (கரு)

---

மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி
பெருங்காஞ் சிய்யே பொருண்மொழிக் காஞ்சி
புலவரோத்தும் புத்தேணாட்டொடு
முதுகாஞ்சிய்யே காடுவாழ்த் துளப்பட
மையறுசீர்த்தி வருமிரு மூன்றும்
பொய்தீர் காட்சிப் பொதுவியற் பால.

இவற்றுள், முதுமொழிக்காஞ்சி- எ-து. பலர்புகழ்புலவர் பன்னினதெரியு, முலகியல்பொருண்முடிவுணரக்கூறின்று.வ-று

269. ஆற்றி னுணரி னருளறமா மாற்றார்க்குப்
போற்றார் வழங்கிற் பொருள் பொருளா - மாற்றிப்
புகலா தொழுகும் புரிவளையார் மென்றோ
ளகலா தளித்தொழுக லன்பு. (க)

பெருங்காஞ்சி - எ-து. மலையோங்கியமாநிலத்து நிலையாமைநெறியுரைத்தன்று. வ-று.

270. ஆயா தறிவயர்ந் தல்லாந் தகவிடத்து
மாயா நிதிய மனைச்செறீஇ - யீயா
திறுகப் பொதியன்மி னின்றோடு நாளைக்
குறுக வருமரோ கூற்று. (உ)

பொருண்மொழிக்காஞ்சி - எ-து. எரிந்திலங்குஞ்சடைமுடிமுனிவர், புரிந்துகண்டபொருண்மொழிந்தன்று. வ-று.

271. ஆய பெருமை யவிர்சடையா ராய்ந்துணர்ந்த
பாய நெறிமேற் படர்ந்தொடுங்கித் - தீய
விருளொடு வைகா திடம்படு ஞாலத்
தருளொடு வைகி யகல். (ங)

புலவரோத்தும்புத்தேளுடு - எ-து. நுழைபுலம்படர்ந்த நோய
றுகாட்சி, விழைபுலங்கடந்தோர் வீடுரைத்தன்று. வ-று.

272. பொய்யில் புலவர் புரிந்துறைய மேலுலக
மையமொன் றின்றி யறிந்துரைப்பின் - வெய்ய
பகலின் றிரவின்று பற்றினது றற்றின்
றிகலின் றிளிவரவு மின்று. (ச)

முதுகாஞ்சி - எ-து. தலைவரும்பொருளைத் தக்காங்குணர்த்தி
நிலையாமைநெறிப்படவுரைத்தன்று. வ-று.

273. இளமை நிலைதளர மூப்போ டிறைஞ்சி
யுளமை யுணரா தொடுங்கி - வளமை
வியப்போவ வில்லா வியலிடத்து வெஃகா
துயப்போக லெண்ண லுறும். (ரு)

காடுவாழ்த்து - எ-து. பல்லவர்க்கிரங்கும் பாடிமிழ்நெய்தல்
கல்லென் றொலிக்குங் காடுவாழ்த்தின்று. வ-று.

274. முன்புறந் தான்காணு மிவ்வுலகை யிவ்வுலகிற்
றன்புறங் கண்டறிவார் தாமில்லை - யன்பி
னழுதார்க ணீர்விடுத்த வாருடிக் கூகை
கழுதார் நதிவழங்குங் காடு. (சா)

---

சீர்சான் முல்லையொடு கார்முல்லையென்று
தேர்முல்லையொடு நாண்முல்லையென்று
வில்லாண்முல்லையொடு பகட்டுமுல்லையென்று
பாண்முல்லையொடு கற்புமுல்லையென்றுங்
கிருநான்முல்லையும் பொதுவியற்பால.

இவற்றுள், முல்லை - எ-து. தடவரைமார்பன் றன்னமர்காதன் மடவரற் புணர்ந்த மகிழ்ச்சி நிலையுரைத்தன்று. வ-று.

275. ஊதையுளர வொசிந்து மணங்கமழுங்
கோதைபோன் முல்லைக் கொடிமருங்குற் - பேதை
குவைஇ யிணைந்த குவிமுலை யாகங்
கவைஇக் கவலையிலம். (க)

கார்முல்லை - எ-து. அருந்திறற்கட் ரேவர் வாராமுன் கருங்கடன் முகந்துகார்வந்தன்று. வ-று.

276. புனையும் பொலம்படைப் பொங்குளைமா றிண்டேர்
துணையுந் துணைபடைத் தன்னூர் - முனையு
ளடன்முகந்த தானை யவர்வாரா முன்னங்
கடன்முகந்து வந்தன்றுகார். (உ)

தேர்முல்லை - எ-து. உருத்தெழு மன்னரொன்னார்தந்நிலை திருத்திய காதலர் தேர்வரவுரைத்தன்று. வ-று.

277. தீர்ந்து வணங்கித் திறையளப்பத் தெம்முனையு
ளூர்ந்துநங் கேள்வ ருழைவந்தார் - சார்ந்து
பரிகோட்ட மின்றிப் பதவார்ந் துகளுந்
திரிகோட்ட மாவிரியத் தேர். (ங)

நாண்முல்லை - எ-து. செறுநர்நாணச் சேயிழையரிவை வறுமனைவைகித் தற்காத்தன்று. வ-று.

278. சொய்தார மார்பிற் கொழுநன் றணந்தபின்
பெய்வளை யாட்குப் பிறிதில்லை - வெய்ய

வளிமறையு மின்றி வழக்கொழியா வாயி
னளிமனைக்கு நற்றுணைநாண். (ச)

இல்லான் முல்லை - எ-து. கழும்பியகாதற் கணவனைப்பழிச்சி
யிழுமென் சீர்த்தியின் மலிவுரைத்தன்று. வ-று.

279. கல்லெனீர் வேலிக் கணவன் கழல்வாழ்த்தி
யொல்லும் வகையால் விருந்தோம்பிச் - செல்லுந்த
மிற்செல்வ மன்றி யிரந்தவர்க்கீ கல்லாப்
புற்செல்வம் பூவா புகழ். (ரு)

பகட்டுமுல்லை-எ-து. வயன்மிகுசிறப்பின் வருத்தமுந்தோன்மை
யும், வியன்மனைக்கிழவனைப்பகட்டொடுபொரீஇயன்று. வ-று.

280. உய்த்தல் பொறுத்த லொலிவின் ஞெலிவயலு
ளெய்த்த லறியாதிடை யின்றி - வைத்த
படுநுகம் பூண்ட பகட்டொடு மானு
நெடுமொழி யெங்கணவ னோ். (சு)

பான்முல்லை - எ-து. அரிவாயண்க ணாயிழைப்புணர்ந்தோன்
பரிவகலுள்ளமொடு பால்வாழ்த்தின்று. வ-று.

281. திங்கள் விளங்குந் திகழ்ந்திலங்கு பேரொளி
யங்கண் விசும்பி னகத்துறைக - செங்கட்
குயிலனைய தேமொழிக் கூரெயிற்றுச் செவ்வாய்
பயில்வளையை நல்கிய பால். (எ)

கற்புமுல்லை - எ-து. பொன்றிகழ்சுணங்கிற் பூங்கணரிவை
நன்றறிகொழுநனை மிகுத்தன்று. வ-று.

282. நெய்கொ ணிணந்து நிறைய வமைத்திட்ட
குய்கொ ளடிசில் பிறர்துகர்க - வைகலு
மங்குழைக் கீரை யடகு மிசையினு
மெங்கணவ னல்க லினிது. (அ)

இதுவுமது - மேவருங்கணவன் றணப்பத் தன்வயிற்
காவல் கூறினுமத் துறையாகும். வ-று.

283. மௌவல் விரியு மணங்கமழ் மான்மாலைத்
தையன் முதுகுரம்பைத் தான்றமியள் - செவ்வ
னிறைகாக்கு மிவ்வுலகி னிற்பிறந்த நல்லா
ணிறைகாப்ப வைகு நிறை. (கூ)

இதுவுமது - திருவளர் நன்னகரடைந்த கொழுநன்
பெருவளனேத்தினுமத்துறையாகும். வ-று.

284. ஊழிதோ றூழி தொழப்பட் டுலைவின்றி
யாழிநீர் வையத் தகமலிய - வாழி
கருவரை மார்பினெங் காதல னல்க
வருவிருந் தோம்பு வளம். (௧0)

பத்தாவது பொதுவியற்படலம் முற்றிற்று.
ஆ௨ வெண்பா - உ௮ச.

## ௧௧-வது. கைக்கிளைப்படலம்.

### ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை.

காட்சியையந் துணிவேயுட்கோள்
பயந்தோர்ப்பழிச்ச னலம்பாராட்ட
னயப்புற்றிரங்கல் புணராவிரக்கம்

வெளிப்படவிரத்த லெனவிவ்வொன்பது
மாண்பாற்கூற்றுக் கைக்கிளையாகும்.

காட்சி - எ-து. சுரும்பிவர் பூம்பொழிற் சுடர்வேற் காளை
கருந்தடங்கண்ணியைக் கண்டுநயந்தன்று. வ-று.

285. கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா
வரும்பிவர் மென்முலை தொத்தாப் - பெரும்பணைத்தோட்
பெண்டகைப் பொலிந்த பூங்கொடி
கண்டேங் காண்டலுங் களித்தவெங் கண்ணே. (க)

ஐயம் - எ-து. கன்னவிறோளான் கண்டபின் னவளை
யின்னளென் றுணரானையமுற்றன்று. வ-று.

286. தாமரைமேல் வைகிய தையல்கொ ருழ்தளிரிற்
காமருவும் வானோர்கள் காதலிகொ - றேமொழி
மையம ருண்கண் மடந்தைக
ணைய மொழியா தாழுமென் னெஞ்சே. (உ)

துணிவு - எ-து. மாநிலத்தியலு மாதராமெனத்
தூமலர்க்கோதையைத் துணிந்துரைத்தன்று. வ-று.

287. திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு - மரிபரந்த
போகித ழுண்கணு மிமைக்கு
மாகுமற்றிவ ளகலிடத் தணங்கே. (ங)

உட்கோள் - எ-து. இணரார்கோதையென்னெஞ்சத்திருந்து
முணராளென்னையென வுட்கொண்டன்று. வ-று.

288. கவ்வைபெருகக் கரந்தென் மனத்திருந்துஞ்
செவ்வாய்ப் பெருந்தோட் டிருநுதலா - ளவ்வாயி
லஞ்சொன் மாரிபெய் தவியா
னெஞ்சம்பொத்தி நிறைசுடு நெருப்பே. (ச)

பயந்தோர்ப்பழிச்சல் - எ-து. இவட்பயந் தெடுத்தோர்வாழி
யர்நெடிதெனவவட்பயந்தோரையானுதுபுகழ்ந்தன்று.வ-று.

289. கல்லருவி யாடிக் கருங்களிறு காரதிரு
மல்லலஞ் சாரன் மயிலன்ன - சில்வளைப்
பலபொலி கூந்தலைப் பயந்தோர்
நிலவரை மலிய நீடுவா ழியரோ. (ரு)

நலம்பாராட்டல் - எ-து. அழிபட ரெவ்வங் கூரவாயிழை
பழிதீர் நன்னலம் பாராட்டின்று. வ-று.

290. அம்மென் கிளவி கிளிபயிற்ற வாயிழை
கொம்மை வருமுலை கோங்கரும்ப - விம்மலை
நறும்பூஞ் சார லாங்கட்
குறுஞ்சுனை மலர்ந்தன தடம்பெருங் கண்ணே. (சு)

நயப்புற்றிரங்கல் - எ-து. கொய்தழையல்குல் கூட்டம்வே
ண்டி யெய்துதலருமையி னிறப்பப் புகழ்ந்தன்று. வ-று.

291. பெருமட நோக்கிற் சிறுநுதற் செவ்வாய்க்
கருமழைக்கண் வெண்முறுவற் பேதை - திருமுலை
புல்லும் பொறியி லேனுழை
நில்லாதோடுமென் னிறையி னெஞ்சே. (எ)

புணராவிரக்கம் - எ-து. உணராவெவ்வம் பெருகவொளியி ழைப், புணராவிரக்கமொடு புலம்புதரவை யின்று வ-று.

292. இணரார் நறுங்கோதை யெல்வளையாள் கூட்டம்
புணராமற் பூச றரவு - முணராது
தண்டா விழுப்படர் நலியவு
முண்டாலென் னுயிரோம்புதற் கரிதே. (அ)

வெளிப்படவிரத்தல் - எ - து. அந்தழையல்கு லணிநலம்பு ணரா, வெந்துயர்புணர வெளிப்படவிரந்தன்று. வ-று.

293. உரவொலி முந்நீ ருலாய்நிமிர்ந் தன்ன
கரவரு காமங் கனல - விரவெதிர்
முள்ளெயி றிலங்கு முகிழ்நகை
வெள்வளை நல்காள் விடுமென் னுயிரோ. (கூ)

ஆண்பாற்கூற்றுக் கைக்கிளை முற்றிற்று.

ஆ வெண்பா - உகககூ.

## பெண்பாற்கூற்றுக் கைக்கிளை.

காண்டனயத்த லுட்கோண்மெலிதல்
மெலிவோடுவைகல் காண்டல்வலித்தல்
பகன்முனிவுரைத்த லிரவுநீடுபருவரல்
கனவினரற்ற னெஞ்சொடுமெலிதல்
பெண்பாற்கூற்றுக் கைக்கிளையாகும்.

காண்டல் - எ-து. தேம்பாய்தெரியல்விடலையைத் திருநுதற் காம்பேர்தோளி கண்டு சோர்ந்தன்று. வ-று.

294. கடைநின்று காம நலியக் கலங்கி
யிடைநின்ற வூரலர் தூற்றப் - புடைநின்ற
வெற்கண் டிலனக் நெடுந்தகை
தற்கண்டனேன்யான் கண்டவாறே. (க)

நயத்தல் - எ-து. கன்னவிறிணிதோட்காளை யைக்கண்ட
நன்னுதலரிவை நயப்புரைத்தன்று. வ-று.

295. கன்னவிறோளானைக் காண்டலுங் கார்க்குவளை
யன்னவென்கண்ணுக் கமுதமா - மென்னை
மலைமலிந் தன்ன மார்ப
முலைமலிந்தூழூழ் முயங்குங்காலே (உ)

உட்கோள் - எ-து. வண்டமர் குஞ்சி மைந்தனை நயந்த
வொண்டொடி யரிவையுட்கொண்டன்று. வ-று.

296. உள்ளமுருக வொளிவளையுங் கைநில்லா
கள்ளவிழ் தாரானுங் கைக்கணையா - னெள்ளிச்
சிறுபுன் மாலை தலைவரி
னுறுதுயரவலத் துயலோவரிதே. (ங)

மெலிதல் - எ-து. ஒன்ரூர்கூறு முறுபழிநாணி
மென்றோளரிவை மெலிவொடு வைகின்று. வ-று.

297. குரும்பை வரிமுலைமேற் கோல நெடுங்க
ணரும்பிய வெண்முத் தருப்பக் - கரும்பிடைத்தோட்
காதல்செய் காமங் கனற்ற
வேதிலாளற் கிழந்தனே னெழிலே. (௪)

மெலிவொடுவைகல் - எ-து. மணிவளைநெகிழ மாணலந்தொலைய, வணியிழைமெலிவினுற்றல்கூறின்று. வ-று.

298. பிறைபுரை வாணுதல் பீரரும்ப மென்றோ
ளிறைபுனை யெல்வளை யேக - நிறைபுணையா
யாம நெடுங்கட னீந்துவேன்
காம வொள்ளெரி கனன்றகஞ் சுடுமே. (ரு)

காண்டல்வலித்தல் - எ - து. மைவரைநாடனைமடந்தைபின்னரும், கைவளைசோரக்காண்டல்வலித்தன்று. வ-று.

299. வேட்டவை யெய்தி விழைவொழிதல் பொய்போலு
மீட்டு மிடைமணிப் பூணுனைக் - காட்டென்று
மாமை பொன்னிறம் பசப்பத்
தூமலர் நெடுங்கண் டுயிறுறந் தனவே. (சு)

பகன்முனிவுரைத்தல்-எ-து. புரிவளைநெகிழப்புலம்பொடுநின்றாள், பருவர லுள்ளமொடுபகன்முனிவுரைத்தன்று. வ-று.

300. தன்கணளியவாய்நின்றேற்குத் தார்விடலை
வன்க ணனல்கா னெனவாடு - மென்க
ணிடரினும் பெரிதா லெவ்வம்
படரினும்பெரிதாற் பாவியிப்பகலே. (எ)

இரவுநீடுபருவரல் - எ-து. புலம்பொடுவைகும்பூங்குழைகங்குற், கலங்கினேன் பெரிதெனக் கசிந்துரைத்தன்று. வ-று.

301. பெண்மே னலிவுபிழையென்னுய் பேதுறீஇ
விண்மே லியங்கு மதிவிலக்கி - மண்மே

னினக்கே செய்பகை யெவன்கொ
லெனக்கே நெடியை வாழிய விரவே. (அ)

கனவினரற்றல் - எ-து. ஒண்டொடி மடந்தை யுருகெழுகங்
குற், கண்டவன் கரப்பக்கனவினரற்றின்று. வ-று.

302. அயர்வொடு நின்றே னரும்படர் நோய்திர
நயவரும் பள்ளிமே னல்கிக் - கயவா
னவிடைத் தமியேன் வைகக்
கனவிடைத்தோன்றிக் கரத்தனீகொடிதே. (க)

இதுவுமது - பெய்வளைய்வனொடு பேணியகங்கு
லுய்குவன் வரினெனை வுரைப்பினுமதுவே. வ-று.

303. தோடவிழ் தார் யானுந் தொடர வவனுமென்
பாடகச் சீறடியின் மேற்பணிய - நாடகமா
வைகிய கங்கு றலைவரி
னுய்குவேனுலகத் தளியேன் யானே. (கo)

நெஞ்சொடுமெலிதல் - எ-து. அஞ்சொல்வஞ்சியல்லிருட்செ
லீஇய, நெஞ்சொடுபுகன்ற நிலையுரைத்தன்று. வ-று.

304. மல்லாடுதோளா னளியவாய் மாலிருட்கட்
செல்லாமொழிக செலவென்பாய் - நில்லாய்
புனையிழை யிழந்த பூச
னினையினு நினைதியோ வாழிநெஞ்சே. (கக)

இதுவுமது - வரிவளை நெகிழ்த்தோன் முன்செலவலித்தே
னரிவையரறிகென வுரைப்பினு மதுவே. வ-று.

மெலிவொடுவைகல் - எ-து. மணிவளைநெகிழ மாணலந்தொலைய, வணியிழைமெலிவிஞற்றல்கூறின்று. வ-று.

298. பிறைபுரை வாணுதல் பீரரும்ப மென்றோ
ளிறைபுனை யெல்வளை யேக - நிறைபுணையா
யாம நெடுங்கட னீந்துவேன்
காம வொள்ளெரி கனன்றகஞ் சுடுமே. (ரு)

காண்டல்வலித்தல் - எ - து. மைவரைநாடனைமடந்தைபின்னருங், கைவளைசோரக்காண்டல்வலித்தன்று. வ-று.

299. வேட்டவை யெய்தி விழைவொழிதல் பொய்போலு
மீட்டு மிடைமணிப் பூணுனைக் - காட்டென்று
மாமை பொன்னிறம் பசப்பத்
தூமலர் நெடுங்கண் டுயிறுறந் தனவே. (சு)

பகன்முனிவுரைத்தல்-எ-து. புரிவளைநெகிழப்புலம்பொடுநின்ருள், பருவர லுள்ளமொடுபகன்முனிவுரைத்தன்று. வ-று.

300. தன்கணளியவாய்நின்றேற்குத் தார்விடலை
வன்க ணனல்கா னெனவாடு - மென்க
ணிடரினும் பெரிதா லெவ்வம்
படரினும்பெரிதாற் பாவியிப்பகலே. (எ)

இரவுநீடுபருவரல் - எ-து. புலம்பொடுவைகும்பூங்குழைகங்குற், கலங்கினேன் பெரிதெனக் கசிந்துரைத்தன்று. வ-று.

301. பெண்மே னலிவு பிழையென்னுய் பேதுறீஇ
விண்மே லியங்கு மதிவிலக்கி - மண்மே

னினக்கே செய்பகை யெவன்கொ
லெனக்கே நெடியை வாழிய விரவே. (அ)

கனவினரற்றல் - எ-து. ஒண்டொடி மடந்தை யுருகெழுகங்குற், கண்டவன் கரப்பக்கனவினரற்றின்று. வ-று.

302. அயர்வொடு நின்றே னரும்படர் நோய்தீர
நயவரும் பள்ளிமே னல்கிக் - கயவா
நனவிடைத் தமியேன் வைகக்
கனவிடைத்தோன்றிக் கரத்தனீகொடிதே. (கூ)

இதுவுமது - பெய்வளைய்வனொடு பேணியகங்கு
லுய்குவன் வரினென வுரைப்பினுமதுவே. வ-று.

303. தோடவிழ் தார் யானுந் தொடர வவனுமென்
பாடகச் சீறடியின் மேற்பணிய - நாடகமா
வைகிய கங்கு றலைவரி
னுய்குவேனுலகத் தளியேன் யானே. (கய)

நெஞ்சொடுமெலிதல் - எ-து. அஞ்சொல்வஞ்சியல்லிருட்சேவீஇய, நெஞ்சொடுபுகன்ற நிலையுரைத்தன்று. வ-று.

304. மல்லாடுதோளா னளியவாய் மாலிருட்கட்
செல்லாமொழிக செலவென்பாய் - நில்லாய்
புனையிழை யிழந்த பூச
னினையினு நினைதியோ வாழிநெஞ்சே. (கக)

இதுவுமது - வரிவளை நெகிழ்த்தோன் முன்செலவலித்தே
னரிவையரறிகென வுரைப்பினு மதுவே. வ-று.

305. நல்வளை யேக நலந்தொலைவு காட்டிய
செல்லல் வலித்தேனச் செம்மன்முன் - யில்லாத
வம்ப வுரையொடு மயங்கிய
வம்பற் பெண்டிரு மறைகவெம் மலரோ. (கஉ)

பெண்பாற்கூற்றுக் கைக்கிளை முற்றிற்று.

ஆ வெண்பா - நஉ0டு.

---

## கஉ-வது. பெருந்திணைப்படலம்.

### பெண்பாற்கூற்றுப் பெருந்திணை.

வேட்கைமுந் துறுதல் பின்னிலைமுயறல்
பிரிவிடையாற்றல் வரவெதிர்ந்திருத்தல்
வாராமைக்கழித லிரவுத்தலைச்சேற
லில்லவைநகுதல் புலவியுட்புலம்பல்
பொழுதுகண்டிரங்கல் பரத்தையையேசல்
கண்டுகண்சிவத்தல் காதலிற்களித்தல்
கொண்டகம்புகுதல் கூட்டத்துக்குழைத
லூடலுணெகிழ்த லுரைகேட்டுநயத்தல்
பாடகச்சீறடி பணிந்தபினிரங்கல்
பள்ளிமிசைத்தொடர்தல் செல்கெனவிடுத்தலெனை
வொன்பதிற்றிரட்டியோ டொன்றுமுளப்படப்
பெண்பாற்கூற்றுப் பெருந்திணைப்பால.

வேட்கைமுந்துறுதல் - எ-து. கையொளிர் வேலவன்கடவக்
காமம், மொய்வளைத்தோளி முந்துறமொழிந்தன்று. வ-று.

306, எழுதெழின் மார்ப மெனக்குரித் தாகென்
றழுதழுத் வைகலு மாற்றேன் - றொழுதிரப்பல்
வல்லிய மன்ன வயவேலோய் வாழ்கென
வல்லியந்தார் நல்க லறம். (க)

பின்னிலைமுயறல் - எ-து. முன்னிழந்த நலனசைஇப்
பின்னிலைமலிந்தன்று. வ-று.

307. மற்கொண்ட திண்டோண் மறவே னெடுந்தகை
தற்கண்டு மாமைத் தகையிழந்த - வெற்காணப்
பெய்களி யானைப் பிணொருத்திற் கண்டியான்
கைதொழுதேன் றன்கண் டிலன். (உ)

பிரிவிடையாற்றல் - எ-து. இறைவனெகிழ்வின்றுதிரங்கிப்
பிறைநுதன் மடந்தை பிரிவிடையாற்றின்று. வ-று.

308. ஓடுக கோல்வளையு மூரு மலரறைக
தோடவிழ் தாழை துறைகமழ்க - கோடுடைய
பூங்கானற் சேர்ப்பன் புலம்புகொண் மான்மாலை
நீங்கானென் னெஞ்சத்து ணின்று. (ங)

வரவெதிர்ந்திருத்தல் - எ-து. முகைபுரைமுறுவன்முள்ளெயி
ற்றரிவை, வகைபுனைவளமனைவரவெதிர்ந்திருந்தன்று. வ-று.

309. காம நெடுங்கட னீந்துங் காற் கைபுனைந்த
பூமலி சேக்கைப் புணைவேண்டி - நீமலிந்து
செல்லாய் சிலம்பன் வருதற்குச் சிந்தியா
யெல்லாக நெஞ்ச மெதிர். (ச)

வாராமைக் கழிதல் - எ-து நெடுவேய்த் தொளி நிமித்தம்வே றுபட, வடிவேலண்ணல் வாராமைக் கழிந்தன்று. வ-று.

310. நுடங்கருவி யார்த்திழியு நோக்கருஞ் சார
லிடங்கழி மான்மாலை யெல்லைத் - தடம்பெருங்கண்
டாரா ரமார்பன் றமியே னுயிர் தளர
வாரான்கொ லாடும் வலம். (ரு)

இரவுத்தலைச் சேறல் - எ-து. காண்டல் வேட்கையொடு கனை யிருணடுநாண், மாண்டசாயன் மனையிறந்தன்று. வ-று.

311. பனையா யறைமுழங்கும் பாயருவி நாடன்
பிணையார மார்பம் பிணையத் - துணையாக்
கழிகாம முய்ப்பக் கனையிருட்கட் செல்வேன்
வழிகாண மின்னுகவான். (சு)

இல்லவைநகுதல் - எ-து. இல்லவை சொல்லி யிலங்கெயிற்ற ரிவை, நல்வயலூரனை நகைமிகுத் தன்று. வ-று.

312 முற்று முலையார் முயங்க விதழ்குழைந்த
நற்றாரகல நகைதரலி - னற்றார்
கலவே மெனநேர்ந்துங் காஞ்சிநல் லூர
புலவேம் புலத்த லரிது. (எ)

புலவியுட்புலம்பல் - எ-து-நல்வளைமடந்தைநற்றார்பரிந்து புல்லியாற்றாள்புலம்புற்றன்று. வ-று.

313. ஓங்கியவேலான் பணியவு மொள்ளிழை
தாங்காள் வரைமார்பிற் றார்பரிந் - தாங்கே

யடும்படர் மூழ்கி யமை மென்றோள் வாட
நெடும்பெருங்க ணீந்தின நீர். (அ)

பொழுதுகண்டிரங்கல் - எ-து-நிற்றலாற் றுணைடி துயிர்த்தல
மரும், பொற்றொடியரிவைபொழுதுகண்டிரங்கின்று. வ-று.

314 இறையே யிறந்தன வெல்வளை யுண்க
ணுறையே பொழிதலு மோவா - நிறையைப்
பருகாப் பகல்கரந்த பையுள்கூர் மாலை
யுருகா வுயங்கு முயிர். (க)

பரத்தையை யேசல் - எ-து. அணிவயலூரனோடைப்புவிழவய
ரும், பணிமொழி யரிவை பரத்தையையேசின்று. வ-று.

315. யாமுயங்கு மென்முலையால் யாணர் வயலூரன்
றேமுயங்கு பைந்தார் திளைமுயங்க - யாமுயங்க
விவ்வயர் சேரி யாவு மிமை பொருந்தாக்
கவ்வை கருதிற் கடை. (க0)

கண்டுகண் சிவத்தல் - எ-து. உறுவளைமார்ப னுள்ளினார்ந
றுந்தார், கறுவொடு மயங்கிக் கண்சிவந்தன்று. வ-று.

316. கூடிய கொண்கன் குறுகக் கொடிமார்பி
ணூடிய சந்தி ன்ணிதொடர்ந்து - வாடிய
தார்க்குவளை கண்டு தரியா திவண்முகத்த
கார்க்குவளை காலுங் கனல். (கக)

காதலிற் களித்தல் - எ-து. மைவரைநாடன் மார்பகம் பொரு
ந்திச், கைவிடலறியாக் காதலிற்களித்தன்று. வ-று.

317. காதல் பெருகிக் களிசெய்ய வக்களியாற்
கோதையுந் தாரு மிடைகுழைய - மாதர்
கலந்தாள் கலந்து கடைக்கணாற் கங்குற்
புலந்தாள் புலரியம் போது. (கஉ)

கொண்டகம்புகுதல்-எ-து. காதல்பெருகக் கணவனைக்கண்ணு ற்றுக், கோதையாற்பிணித்துக் கொண்டகம்புக்கன்று. வ-று.

318. கண்டுகளித்துக் கயலுண்க ணீர்மல்கக்
கொண் டகம் புக்காள் கொடியன்னாள் - வண்டினங்
காலை யாழ் செய்யுங் கருவரை நாடனை
மாலையான் மார்பம் பிணித்து. (கஙு)

கூட்டத்துக் குழைதல் - எ-து. பெய்தாரகலம் பிரிதலாற்றுக் கொய்தழை யல்குல் கூட்டத்துக் குழைந்தன்று. வ-று.

319. மயங்கி மகிழ்பெருக மால்வரை மார்பிற்
றயங்கு புனலூரன் றண்டார் - முயங்கியும்
பேதை புலம்பப் பிரிதியோ நீயென்னுங்
கோதைசூழ் கொம்பிற் குழைந்து. (கச)

ஊட லுணெகிழ்தல் - எ-து.நள்ளிருண் மாலை நடுங்கஞர் நலிய வொள்வளைத்தோளி யூட லுணெகிழ்ந்தன்று. வ-று.

320. தெரிவின்றி யூடத் தெரிந்துநங் கேள்வர்
பிரிவின்றி நல்கினும் பேணாய் . திரிவின்றித்
துஞ்சே மெனமொழிதி தூங்கிருண்மான் மாலை
நெஞ்சே யுடையை நிறை. (கரு)

உரைகேட்டு நயத்தல் - எ-து. தூயரொடு வைகிய சூழ்வளைத் தோளி, யுயர்வரைநாட னுரைகேட்டு நயந்தன்று. வ-று.

321. ஆழவிடுமோ வலரொடு வைகினுந்
தாழ்குரலேனற் றலைக்கொண்ட - தூழில்
விரையாற் கமழும் விறன்மலை நாட
னுரையாற் றளிர்க்கு முயிர். (கசு)

பாடகச்சீறடி பணிந்தபின் னிரங்கல் - எ-து.
கோடுயர்வெற்பன்கூப்பியகையொடு
பாடகச்சீறடி பணிந்தபினிரங்கன்று. வ-று.

322. அணிவரும் பூஞ்சிலம் பார்க்கு மடிமேன்
மணிவரை மார்பன் மயங்கிப் - பணியவும்
வற்கென்ற நெஞ்சம் வணங்காய் சிறுவரை
நிற்கென்று வாழியர் நீ. (கஎ)

பள்ளிமிசைத் தொடர்தல் - எ-து. மாயிருங் கங்குன் மாமலை நாடனைப், பாயணிவிப்பள்ளி மிசைத் தொடர்ந்தன்று. வ-று.

323. யானைதொடருங் கொடிபோல யானுன்னைத்
தானை தொடரவும் போதியோ - மானை
மயக்கரிய வுண்கண் மடந்தைதோ ளுள்ளி
யியக்கருஞ் சோலை யிரா. (கஅ)

செல்கெனவிடுத்தல்-எ-து. பாயிருட்கணவனைப் படர்ச்சிநோக்கிச், சேயிழை யரிவை செல்கென விடுத்தன்று. வ-று.

324. விலங்குநீ ரீங்கில்லை வெள்வேலோய் சென்றீ
யிலங்கிழை யெவ்வ நலியக் - கலங்கிக்

குறியுள் வருந்தாமைக் குன்றுசூழ் சோலை
நெறியுள் விரிக நிலா. (கக)

பெண்பாற்கூற்றுப்பெருந்திணை முற்றிற்று.
ஆ வெண்பா - ௩௨௪.

## இருபாற்பெருந்திணை.

சீர்செல வழுங்கல் செழுமட லூர்த
றாதிடையாட றயரவற் குரைத்தல்
கண்டுகை சோர்தல் பருவ மயங்க
லாண்பாற்கிளவி பெண்பாற்கிளவி
தேங்கமழ் கூந்தற் றெரிவை வெறியாட்
டரிவைக் கவடுணை பாண்வரவுரைத்தல்
பரிபுறச்சிறடிப் பரத்தைகூறல்
விறலிகேட்பத் தோழிகூறல்
வெள்வளைவிறலி தோழிக்குவிளம்பல்
பரத்தைவாயில் பாங்கிகண்டுரைத்தல்
பிறர்மனைத்துயின்றமை விறலிகூறல்
குற்றிசையேனைக் குறுங்கலியுளப்பட
வொத்தபண்பி னென்றுதலையிட்ட
வீரொண்கிளவியும் பெருந்திணைப்பால.

அவற்றுள், செலவழுங்கல் - எ-து. நிலவுவேனெடுந்தகைநீள்
கழையாரிடைச், செலவுமுன்வலித்துச் செலவழுங்கின்று.

325. நடுங்கி நறுநுதலா ணன்னலம் பீர்பூப்ப
வொடுங்கி யுயங்க லொழியக் - கடுங்கணை

வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்
செல்லே லொழிக செலவு. (க)

மடலூர்தல் - எ-து. ஒன்றல்ல பலபாடி
மன்றிடை மடலூர்ந்தன்று. வ-று.

726. இன்றிப் படரோடி யானுழப்ப வைங்கணையான்
வென்றிப் பதாகை யெடுத்தானு - மன்றிற்
றனிமடமா னேக்கி தகைநலம் பாராட்டிக்
குனிமடன்மா பண்ணிமேல் கொண்டு. (உ)

தூதிடையாடல் - எ-து. ஊழிமாலையுறுதுயர்நோக்கித்
தோழிநீங்காடூதிடையா டின்று. வ-று.

327. வள்வாய்ந்து பண்ணுக திண்டேர் வடிக்கண்ணா
ளோள்வாள்போன் மாலை யுயல்வேண்டுங் - கள்வாய்ந்த
தாதொடுவண்டிமிருந் தாமரைமார்ப
தூதொடு வந்தேன் றெழு. (ங)

துயரவற்குரைத்தல் - எ-து. மான்றமாலைமயிலியல்வருத்தந்
தோன்றக் கூறித் துயரவற் குரைத்தன்று. வ-று.

328. உள்ளத் தவலம் பெருக வெளிவேலோ
யெள்ளத் துணிந்த விருண்மாலை - வெள்ளத்துத்
தண்டா ரலகந் தழூஉப் புணையா நீநல்கி
னுண்டாமென் றோழிக் குயிர். (ச)

கண்டுகைசோர்தல் - எ-து. போதார்கூந்தற்பொலங்தொடிய
ரிவை, காதல் கைம்மிகக் கண்டுசோர்ந் தன்று. வ-று.

329. ஆம்ப னுடங்கு மணிவளையு மேகின
கூம்பன் மறந்த கொழுங் கயற்கண் - காம்பி
னெழில்வாய்ந்த தோளி யெவனுங்கொல் கானற்
பொழிலெல்லா மீயும் புலம்பு. (ரு)

பருவமயங்கல் - எ-து. உருவவால் வளையுயங்கத் தோழி
பருவமயங்கிப் படருழந்தன்று. வ-று.

330. பெரும்பணை மென்றோள் பிரிந்தா ரெம்புள்ளி
வரும்பருவ மன்றுகொ லாங்கொல் - சுரும்பிமிரும்
பூமலி கொன்றைப் புறவெலாம் பொன்மலரு
மாமயிலு மாலு மலை. (சு)

இதுவுமது - ஆங்கவர்கூறிய பருவமன் றெனத்
தேங்கமழ் கோதை தெளிதலு மதுவே. [வ-று.

331. பொறிமயி லாலின பொங்க ரெழிலி
சிறுதுவலை சிந்தின சிந்த - நறிய
பவர்முல்லை தோன்றிப் பரியாம லீன்ற
வவர்வருங் காலமீ தன்று. (எ)

ஆண்பாற்கிளவி - எ-து. காமுறுகாமர் தளைபரிந்தேங்கி
யேமுற்றிருந்த விறைவ னுரைத்தன்று. வ-று.

332. கயற்கூடு வாண்முகத் தாட் கண்ணிய நெஞ்ச
முயற்கூடு முன்னதாக் காணி - னுயற்கூடுங்
காணு மரபிற் கடும்பகலுங் கங்குலு
நாணுரு மேயா நகை. (அ)

பெண்பாற்கிளவி-எ-து. வெள்வளைநெகிழவு மெம்முள்ளாத கள்வனைக் காணுதிவ் வூரெனக்கிளந்தன்று. வ-று.

333. வானத் தியலு மதியகத்து வைகலுங்
கானத் தியலு முயல்காணுங் - தானத்தி
னொள்வளை யோடவு முள்ளான் மறந்துறையுங்
கள்வனைக் காணுதிவ் வூர். (க)

வெறியாட்டு - எ-து. தேங்கமழ்கோதை செம்மலனிநினைந் தாங்கற்றிலைமையா யறியாமை வேங்கையஞ்சிலம்பற்கு வெறியாடின்று. வ-று.

334. வெய்ய நெடிதுயிரா வெற்ப னளிநினையா
வைய நணிநீங்க வாடினுண் - மைய
லயன்மனைப் பெண்டிரோ டன்னைசொ லஞ்சி
வியன்மனையு ளாடும் வெறி. (கo)

பாண்வரவுரைத்தல் - எ-து. மாணிழைக்கு வயலூரன் பாண்வரவு பாங்கிமொழிந் தன்று. வ-று.

335. அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையாய் தாநொடியும்
வஞ்சந் தெரியா மருண்மாலை - யெஞ்சேரிப்
பண்ணியல் யாழொடு பாணனுர் வந்தாரா
லெண்ணிய தென்கொலோ வீங்கு. (கக)

பரத்தைகூறல் - எ-து. தேங்கமழ் சிலம்பன்று ரமக்கெளி தெனப், பாங்கவர்கேட்பப் பரத்தை மொழிந்தன்று. வ-று.

336. பலவுரைத்துக் கூத்தாடிப் பல்வய லூர
னிலவுரைக்கும் பூணவர் சேரிச் - செலவுரைத்து

வெங்கட் களியால் விறலி விழாக் கொள்ள
லெங்கட் கவன்று ரெளிது. (கஉ)

விறலிகேட்பத் தோழிகூறல் - எ-து.
பேணியபிறர்முயக் காரமுதவற்கெனப்
பாண்விறலிக்குப் பாங்கி மொழிந்தன்று. வ-று.

337. அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல் - சுரும்போ
டதிரும் புனலூரற் காரமுத மன்றே
முதிரு முலையார் முயக்கு. (கங)

விறலிதோழிக்குவிளம்பல் - எ-து.
ஆங்கவன் மூப்பவர்க் கருங்களி தருமெனப்
பாங்கிகேட்ப விறலி பகர்ந்தன்று. வ-று.

338. உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முனைத்த முறுவலார்க்கெல்லாம் - விளைத்த
பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கு புனலூரன் மூப்பு. (கச)

பரத்தைவாயில் பாங்கிகண் டுரைத்தல். எ-து.
உம்மி லரிவை யுரைத்த மொழி யொழிய
வெம்மில் வலவனுந் தேரும் வருமெனப்
பரத்தைவாயிற்குப் பாங்கிபகர்ந் தன்று. வ-று.

339. மாணலங் கொள்ளு மகிழ்நன் றனக்குமேற்
பேணலம் பெண்மை யொழிகென்பார் - காணக்

கலவ மயிலன்ன காரிகையார் சேரி
வலவ னெடுந்தேர் வரும். (கரு)

பிறர்மனைத்துயின்றமைவிறலிகூறல் - எ-து. மற்றவர்சேரியுண் மைந்தனுறைந்தமை யிற்றெனவிறலி யெடுத்துரைத்தன்று. வ-று.

340. தண்டா ரணியவாந் தையலார் சேரியுள்
வண்டார் வயலூரன் வைகினமை - யுண்டா
லறியே னடியுறை யாயிழையாற் பெற்றேன்
சிறியேன் பெரிய சிறப்பு. (கசு)

குற்றிசை - எ-து. பொற்றூரகலம் புல்லிய மகளிர்க் கற்றுங்கொழுகா தறங்கண்மா றின்று. வ-று.

341. கரிய பெருந்தடங்கண் வெள்வளைக் கையாளை
மரிய கழிகேண்மை மைந்த - தெரியின்
விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்
தெளிந்தாரிற் றீர்வது தீது. (கஎ)

குறுங்கலி - எ-து. நாறிருங்கூந்தன் மகளிரைநயப்ப வேறுபடு வேட்கை வீயக்கூ றின்று. வ-று.

342. பண்ணவாந் தீஞ்சொற் பவளத் துவர்ச்செவ்வாய்ப்
பெண்ணவாம் பேரல்குற் பெய்வளை - கண்ணவா
நன்னலம் பீர்பூப்ப நல்கார் விடுவதோ
தொன்னலமுண்டார் தொடர்பு. (கஅ)

இருபாற்பெருந்திணை முற்றிற்று.

ஆ வெண்பா - ௩௪௨.

## வென்றிப்பெருந்திணை.

பாடாண் பகுதியுட் டொல்காப்பியமுதற்
கோடாமரபிற் குணனொடுநிலைஇக்
கொடுப்போரேத்திக் கொடாஅர்ப்பழித்தலும்
விடுத்தலறியா விறல்புரிவாகையுள்
வாணிகவென்றியு மல்லவென்றியு
நீணெறியுழவ னிலனுழுவென்றியு
மிகல்புரியேறுகோழியுமெதிர்வன்
றகருடன்யானை தணப்பில்வெம் பூழொடு
சிவல்கிளிபூவை செழும்பரிதேர்யா
ழிவர்தருசூதிடை யாடல்பாடல்
பிடியென்கின்ற பெரும்பெயர்வென்றியோ
டுடையனபிறவு முளப்படத்தொகைஇ
மெய்யினர்தமிழ் வெண்பாமாலையு
ளையனரித னமர்ந்துரைத்தனவே.

கொடுப்போரேத்திக் கொடாஅர்ப் பழித்தல். எ-று.

343. சீர்மிகுநல்லிசை பாடிச் செலவயர்துங்
கார்முகி லன்னார் கடைநோக்கிப் - போர்மிக
மண்கொண்டவேன்மற மன்னரே யாயினும்
வெண்கொண்மூ வன்னாரை விட்டு. (க)

வாணிகவென்றி - வ-று.

344. காடுங் கடுந்திரை நீர்ச்சுழியுக் கண்ணஞ்சான்
சாடுங் கலனும் பலவியக்கி - நீடும்

பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்
கலிகையா னீக்கல் கடன். (உ)

மல்லவென்றி - வ-று.

345. கண்டான் மலைந்தான் கதிர்வானங் காட்டியே
கொண்டான் பதாகை மறமல்லன் - வண்டார்க்கு
மாலை துயலு மருவிய மாமலை
போலுந் திரடோள் புடைத்து. (ந)

உழவன்வென்றி - வ-று.

346. மண்பத ஞேக்கி மலிவயலும் புன்செய்யுங்
கண்பட வேர்பூட்டிக் காலத்தா - லெண்பதனுந்
தத்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு. (ச)

ஏறுகொள்வென்றி. வ-று.

347. குடைவரை யேந்திய கோவலனே கொண்டா
னடையவிழ் பூங்கோதை யஞ்சல் - விடையரவ
மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்
தின்று நமர்விட்ட வேறு. (ரு)

கோழிவென்றி. வ-று.

348. பாய்ந்து மெறிந்தும் படிந்தும் பலகாலுங்
காய்ந்தும்வாய்க் கொண்டுங் கடுஞ்சொல்லா - ராய்ந்து
திறங்கொண்டு வித்தகர் நேர்விட்ட கோழிப்
புறங்கண்டுந் தான்வருமே போர்க்கு. (சு)

தகர்வென்றி - வ-று.

349. அருகோடி நீங்கா தணைதலு மின்றித்
திரிகோட்ட மாவிரியச் சீறிப் - பொருகளம்
புக்கு மயங்கப் பொருது புரவாரயை
நக்குமா நல்ல தகர். (எ)

யானைவென்றி - வ-று.

350. கஞ்சுகம் வாய்ந்த கவளந்தன் கைக்கொள்ளுங்
குஞ்சரம் வென்ற கொலைவேழந் - துஞ்சா
தழலையும் பாய்ந்திறுத் தோடாது தான்றன்
னிழலையுந் தான் சுளிக்கு நின்று. (அ)

பூழ்வென்றி - வ-று.

351. சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுங்காற்
சொல்லும் பலவுள சொன்னபின் - வெல்லு
நலம்வர நாடி நடுங்காது நூற்கட்
புலவரா லாய்ந்தமைந்த பூழ். (கூ)

சிவல்வென்றி - வ-று.

352. ஒட்டியா ரொல்லா முணரார் புடைத்தபின்
விட்டோட வேண்டுமோ தண்ணுமை - விட்ட
சுவடேற்கு மாயிற் சுடரிழாய் சோர்ந்து
கவடேற்க வோடுங் களத்து. (க0)

கிளிவென்றி - வ-று.

353. இலகா முறைப்பதன்க ணெல்வளை நாணப்
பலநாள் பணிபதமுங் கூறிச் - சிலநாளுட்
பொங்கரி யுண்கண்ணாள் பூவைக்கு மாருகப்
பைங்கிளியைக் கற்பித்தாள் பாட்டு. (கக)

பூவைவென்றி - வ-று.

354. புரிவோடு நாவினுற் பூவை புணர்த்துப்
பெரிய வரியவை பேசும் - தெரிவளை
வெள்ளெயிற்றுச் செவ்வாய் வரியுண் கணுள்வளர்த்த
கிள்ளை கிளந்தவை கிண் டிட்டு. (கஉ)

குதிரைவென்றி - வ-று.

355. ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையுங்
கந்து மறமுங் கறங்குளைமா - முந்துற
மேல்கொண் டவைசெலீஇ வென்வேலான் மேம்பாட்டான்
வேல்கொண்ட கண்ணுளை மீட்டு, (கங)

தேர்வென்றி - வ-று.

356. ஒலிமணித் திண்டே ருடையானை வெல்லுங்
கலுமணித் திண்டேரால் காளை - கலிமாப்
பலவுடன் பூட்டிப் படிசிறந் தைந்து
செலவொடு மண்டிலஞ் சென்று. (கச)

யாழ்வென்றி - வ-று.

357. பாலை படுமலை பண்ணிய தன்கூட்டங்
கோலஞ்செய் சீறியாழ் கொண்டபின் - வேலைச்
சுவையெல்லாந் தோன்ற வெழீஇயினுள் சூழ்ந்த
வவையெல்லா மாக்கி யணங்கு. (கரு)

சூதுவென்றி. வ-று.

358. கழகத் தியலுங் கவற்றினிலையு
மளகத் திருநுதலா ளாய்ந்து - புழகத்து

பாய வகையாற் பணிதம் பலவென்ரு
ளாயு நிலையு மறிந்து. (௧௬)

ஆடல்வென்றி. வ-று.

359. கைகால் புருவங்கள் பாணி நடை தூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு - பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றுடுந்
தொடுகழன் மன்னன் றுடி. (௧௭)

பாடல்வென்றி. வ-று.

360. வண்டுறை கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக் - கண்டறிய
கிந்நரம் போலக் கிளையமைந்த தீந்தொடையா
ழந்நரம்பு மச்சுவையு மாய்ந்து. (௧௮)

பிடிவென்றி. வ-று.

361. குவளை நெடுந்தடங்கட் கூரெயிற்றுச் செவ்வா
யவளொடு மாமையொப் பான - விவளொடு
பாணியுந் தூக்கு நடையும் பெயராமைப்
பேணிப் பெயர்ந்தாள் பிடி. (௧௯)

---

வெட்சிகரந்தை வஞ்சிகாஞ்சி
யுட்குடையுழிஞை நொச்சிதும்பையென்
றித்திறமேழும் புறனெனமொழிப
வாகைபாடாண் பொதுவியற்றிணையெனப்
போகியமூன்றும் புறப்புறமாகும்.

புறப்பொருள் பெருந்திணைப்படலம் முற்றிற்று.
படலம் கஉ-க்கு கூடிய வெண்பா-௩௱௬௧.
ஐயனாரிதனார்பாடின வெண்பாமாலை முற்றுப்பெற்றது.

---

கடவுடுணை.

# யாப்பருங்கலக்காரிகை.

## மூலம்.

## முதலாவது உறுப்பியல்.

### பாயிரம்.

கந்தமடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தமடிக ளிணையடியேத்தி யெழுத்தசைசீர்
பந்தமடிதொடை பாவினங்கூறுவன் பல்லவத்தின்
சந்தமடிய வடியான் மருட்டிய தாழ்குழலே. (க)

(அவையடக்கம்.)

தேனார்கமழ் தொங்கன் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்
கானார்மலயத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்
யானாடாத்துகின்றே னென்றனக்கே நகைதருமால்
ஆனாவறிவி னவர்கட்கென்னாங்கொலென் னாதரவே. (உ)

சுருக்கமில்கேள்வித் துகடீர்புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருடானும் விழுப்பொருளாம்பனி மாலிமயப்
பொருப்பகஞ்சேர்ந்த பொல்லாக்கருங்காக்கையும் பொன்னிறமாய்
இருக்குமென்றிவ்வா றுரைக்குமன்றோவிவ் விருநிலமே. (ங)

பாயிரம் முற்றிற்று.

குறினெடிலாவி குறுகியமூவுயி ராய்தமெய்யே
மறுவறுமூவின மைதீருயிர்மெய் மதிமருட்டும்
சிறுநுதற்பேரமர்க் கட்செய்யவாயைய நுண்ணிடையாய்
அறிஞருரைத்த வளபுமசைக்குறுப் பாவனவே. (௪)

குறிலேநெடிலே குறிலிணையேணக் குறிநெடிலே
நெறியேவரினு நிரைநேர்ந்தொற்றடுப்பினு நேர்நிரையென்
றறிவேய்புரையுமென் றோளியுதாரண மாழிவெள்வேல்
வெறியேசுறுநிறம் விண்டோய்விளாமென்று வேண்டுவரே. (௫)

ஈரசைநாற்சீ ரகவற்குரியவெண் பாவினவாம்
நேரசையாலிற்ற மூவசைச்சீர் நிரையாலிறுப
வாரசைமென்முலை மாதேவகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசையேநின்றுஞ் சீராம்பொதுவொரு நாலசையே. (௬)

தேமாபுளிமா கருவிளங்கூவிளஞ் சீரகவற்
காமாங்கடைகா யடையின்வெண்பாவிற்கந் தண்கனியா
வாமான்கலையல்குன் மாதேவகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண்புரைத்த வசைச்சீர்க்குதாரண நாண்மலரே. (௭)

தண்ணிழறண்பூ நறும்பூநறுநிழ றந்துறழ்ந்தால்
எண்ணிருநாலசைச் சீர்வந்தருகு மினியவற்றுட்
கண்ணியபூவினங் காய்ச்சீரனைய கனியொடொக்கும்
ஒண்ணிழற்சீரசைச் சீரியற்சீரொக்கு மொண்டொடிக்கே. (௮)

குன்றக்குறவ னகவல்பொன்னூரம்வெண் பாட்டுவஞ்சிக்
கொன்றுமுதாரணம் பூந்தாமரையென்ப வோரசைச்சீர்

நன்றறிவாரிற் கயவரும்பாலொடு நாலசைச்சீர்க்
கன்றதென்றாரள்ளற் பள்ளத்தினோடங்கண் வானத்துமே. (௯)

தண்சீர்தனதொன்றிற் றன்றளையாந்தண வாதவஞ்சி
வண்சீர்விகற்பமும் வஞ்சிக்குரித்துவல் லோர்வகுத்த
வெண்சீர்விகற்பங் கலித்தளையாய்விடும் வெண்டளையாம்
ஒண்சீரகவ லுரிச்சீர்விகற்பமு மொண்ணுதலே. (௧௦)

திருமழையுள்ளா ரகவல்சிலைவிலங் காகும்வெள்ளை
மருளறுவஞ்சிமந் தாநிலம்வந்துமை தீர்கலியின்
தெரிவுறுபந்தநல் லாய்செல்வப்போர்க்கதக் கண்ணனென்ப
துரிமையின்கண்ணின்மை யோரசைச்சீருக் குதாரணமே. (௧௧)

குறளிருசீரடி சிந்துமுச்சீரடி நாலொருசீர்
அறைதருகாலை யளவொடுநேரடி யையொருசீர்
நிறைதருபாத நெடிலடியாநெடு மென்பணைத்தோட்
கறைகெழுவேற்கணல் லாய்மிக்கபாதங் கழிநெடிலே. (௧௨)

திரைத்தவிருது குறள்சிந்தளவடி தேம்பழுத்து
விரிக்குநெடிலடி வேனெடுங்கண்ணிவென் றான்வினையின்
இரைக்குங்கணிகொண்ட மூவடிவோடிடங் கொங்குமற்றும்
கரிக்கைக்கவான்மருப் பேர்முலைமாதர் கழிநெடிலே. (௧௩)

வெள்ளைக்கிரண்டடி வஞ்சிக்குமூன்றடி மூன்றகவற்
கெள்ளப்படாக்கலிக் கீரிரண்டாகு மிழிபுரைப்போர்
உள்ளக்கருத்தி னளவேபெருமையொண் போதலைத்த
கள்ளக்கருநெடுங் கட்சுரிமென்குழற் காரிகையே. (௧௪)

அறத்தாறிதுவென் வெள்ளைக்கிழிபக வற்கிழிபு
குறித்தாங்குணர்ப்பின் முதுக்குறைந்தாங்குறை யாக்கலியின்
இறத்தாறிதுசெல்வப் போர்ச்செங்கண்மேதிவஞ் சிச்சிறுமை
புறத்தாழ்கருமென் குழற்றிருவேயன்ன பூங்கொடியே. (கரு)

எழுவாயெழுத்தொன்றின் மோனையிறுதி யியைபிரண்டாம்
வழுவாவெழுத்தொன்றின் மாதேயெதுகை மறுதலைத்த
மொழியான்வரினு முரணடிதோறு முதன்மொழிக்கண்
அழியாதளபெடுத் தொன்றுவதாகு மளபெடையே. (கசு)

அந்தமுதலாத் தொடுப்பதந்தாதி யடிமுழுதும்
வந்தமொழியே வருவதிரட்டை வரன்முறையால்
முந்தியமோனை முதலாமுழுதுமொவ் வாதுவிட்டால்
செந்தொடைநாமம் பெறுநறுமென்குழற் றேமொழியே. (கஎ)

மாவும்புண்மோனை யியைபின்னகை வடியேயொதுகைக்
கேவின்முரணு மிருள்பரந்தீண்டள பாஅவளிய
ஓவிலந்தாதி யுலகுடனொக்கு மேயிரட்டை
பாவருஞ்செந்தொடை பூத்தவென்றுகும் பணிமொழியே. (கஅ)

இருசீர்மிசையிணை யாகும்பொழிப்பிடை யிட்டொருவாம்
இருசீரிடையிட்ட தீறிலிகூழை முதலிறுவாய்
வருசீரயலில மேல்கீழ்வகுத்தமை தீர்கதுவாய்
வருசீர்முழுவது மொன்றின்முற்றுமென்ப மற்றவையே. (ககூ)

மோனைவிகற்ப மணிமலர்மொய்த்துட னுமியையிற்
றேனையெதுகைக் கினம்பொன்னினன்ன வினிமுரணிற்

கானவிகற்பமுஞ் சீறடிப்பேர தளபெடையின்
தானவிகற்பமுந் தாஅட்டாமரையென்ப தாழ்குழலே. (உ0)

கந்தமுந்தேனுஞ் சுருக்கமுங்காதற் குறில்குறிலே
சந்தமுந்திரசை தேமாந்தண்குன்றந்தண் சீர்திருவும்
கொந்தவிழ்கோதாய் குறடிலைவெள்ளைக் கறத்தெழுவாய்
அந்தமுமாவு மிருசீருமோனையு மாமுறுப்பே. (உக)

முதலாவது உறுப்பியல் முற்றிற்று.

ஆ கலித்துறை - உக.

---

## இரண்டாவது செய்யுளியல்.

வெண்பாவகவல்க லிப்பாவளவடி வஞ்சியென்னும்
ஒண்பாவடிகுறள் சிந்தென் றளைப்ப வொலிமுறையே
திண்பாமலிசெப்பல் சீர்சாலகவல்சென் றேங்குதுள்ளல்
தண்பாவமைந்த நலமிகுதூங்க லறுநுதலே. (க)

வளம்படவென்பது வெள்ளைக்ககவற் குதாரணஞ்செங்
களம்படக்கொன்று கலிக்கரிதாயகண் ணார்கொடிபோல்
துளங்கிடைமாதே சுறமறிதொன்னலத் தின்புலம்பென்
றுளங்கொடுநாவல ரோதினர்வஞ்சிக் குதாரணமே. (உ)

ஈரடிவெண்பாக் குறள்குறட்பாவிரண் டாயிடைக்கட்
சீரியவான்றனிச் சொல்லடிமூய்ச்செப்ப லோசைகுன்று
தோரிரண்டாயு மொருவிகற்பாயும் வருவதுண்டேல்
நேரிசையாகு நெரிசுரிபூங்குழ னேரிழையே. (ங)

உருவுகண்டெள்ளா வுடையார்குறண்மட வாய்தடமண்
டரியவரைகீண் டிருகுறணேரிசை தாமரையின்

கருமமுமார்த்தவும் வஞ்சியுங்காமர் தனிச்சொன்மூன்று
நெறிநுண்கருங்குழ னேரிழையாசிட்ட நேரிசையே. (௪)

ஒன்றும்பலவும் விகற்பொடுநான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றிநடப்பினஃ தின்னிசைதுன்னு மடிபலவாய்ச்
சென்றுநிகழ்வ பஃறொடையாஞ்சிறை வண்டினங்கள்
துன்றுங்கருமென் குழற்றுடியேரிடைத் தூமொழியே. (௫)

வைகலும்வைக றுகடேர்சுடர்குட்ட மின்றுமங்கண்
எய்துமலிதேர் வளமழையின்னன வின்னிசைபோல்
வையகமெல்லாம் பல்விகற்பேற்றது சேற்றொருகால்
பையரவல்குற்பன் மாடம்பஃறொடைப் பல்விகற்பே. (௬)

நேரிசையின்னிசை போலநடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசையின்னிசைச் சிந்தியலாகு நிகரில்வெள்ளைக்
கோரசைச்சீரு மொளிசேர்பிறப்புமொண் காசுமிற்ற
சீருடைச்சிந்தடி யேமுடிவாமென்று தேறுகவே. (௭)

நற்கொற்றவாயி லறிந்தானையுநறும் பூங்குழலாய்
சொற்பெற்றநேரிசைச் சிந்தியலாஞ்சுனை யாழவம்மி
நிற்றற்குரிய நறுநீலநெய்தலு முல்லையுமென்
றெற்றப்படாதன வின்னிசைச்சிந்திற் கிலக்கியமே. (௮)

அந்தமில்பாத மளவிரண்டொத்து முடியின்வெள்ளைச்
செந்துறையாகுந் திருவேயதன்பெயர் சீர்பலவாய்
அந்தங்குறைநவுஞ் செந்துறைப்பாட்டி னிழிபுமங்கேழ்
சந்தஞ்சிதைந்த குறளுங்குறளினத் தாழிசையே. (௯)

மூன்றடியானு முடிந்தடிதோறு முடிவிடத்துத்
தான்றனிச்சொற்பெறுந் தண்டாவிருத்தம்வெண் டாழிசையே
மூன்றடியாய்வெள்ளை போன்றிறுமூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடிதாஞ்சில வந்தங்குறைந்திறும் வெண்டுறையே. (௧௦)

கொண்டன்முழங்கின வாவாவிருத்தங் குழலிசைய
வண்டினம்வெண்டுறை தாளாமுழங்கொடு தாழிசையே
நண்பிதென்றூர்கலி கொன்றைவெண்செந்துறை நீலநண்ணும்
பிண்டியறுவாவண் டார்வெறிதாழிசை பெய்வளையே. (௧௧)

கடையயற்பாதமுச் சீர்வரினேரிசை காமருசீர்
இடைபலகுன்றி னிணைக்குறளெல்லா வடியுமொத்து
நடைபெறுமாயி னிலைமண்டிலநடு வாதியந்தத்
தடைதருபாதத் தகவலடிமறி மண்டிலமே. (௧௨)

நேரிசையாகு நிலைத்தினுமென்ப திணைக்குறட்பா
நீரின்சிறிய நிலைமையதாகிலை மண்டிலப்பா
வேரலென்றுகும் விளைமலர்க்கோதை வில்லேர்நுதலாய்
கூரல்பம்பென்ப தடிமறியாகத் துணிந்தனரோ. (௧௩)

தருக்கியருழிசை மூன்றடியொப்பன நான்கடியாய்
எருத்தடிநைந்து மிடைமடக்காயு மிடையிடையே
சுருக்கடியாயுந் துறையாங்குறைவிறுல் சீரகவல்
விருத்தங்கழிநெடி லுன்கொத்திறுவது மெல்லியலே. (௧௪)

கன்றுகுணில்வா னுறத்தாழிசையாங் கனைபெருகான்
என்றதும்வண்டுளர் பூந்தாரிரங்கு குயின்முழவாக்

கொன்றூர்ந்தமைந்த வகவற்றுறைகுறை யாவிருத்தம்
பின்றாழ்குழலி விடங்கணிமூவடி வாதியவே. (கரு)

தரவொன்று தாழிசை மூன்றுதனிச்சொற் சுரிதகமாய்
நிரலொன்றி னேரிசை யொத்தாழிசைக்கலி நீர்த்திரைப்போல்
மரபொன்றுநேரடி முச்சீர்குறணடு வந்தடிப்ப
தரவொன்றுமல்குல தம்போதரங்கவொத் தாழிசையே. (கசு)

வரனெடுங்கண்பணி நேரிசையாகு மதர்த்திருண்டு
சேணுறவோடிக் குழையிடறிச்செருச் செய்யும்விழி
நாணுந்திருவு மறிவுஞ்செறிவு முடையநல்லாய்
ஏணுங்கெடலரு மாமுனியம்போ தரங்கமென்னே. (கஎ)

அசையடிமுன்ன ராகம்வந்தெல்லா வுறுப்புமுண்டேல்
வசையறுவண்ணக வொத்தாழிசைக்கலி வான்றளேதட்
டிசைதனதாகியும் வெண்பாவியைந்துமின் பான்மொழியாய்
வசையறுசிந்தடி யாலிறுமாய்விடின் வெண்கலியே. (கஅ)

நின்றுவிளங்கு மணிப்பசும்பொன்னிற மாறுறுப்பும்
ஒன்றியவண்ணக வொத்தாழிசைக்கலி யோசைகுன்றுத்
துன்றியவாளார் மழையுஞ்சுடர்த்தொடீஇ யோர்மலரும்
என்றிவைவெண்கலிப் பாவிற்கிலக்கிய மேந்திழையே. (கக)

தரவேதரவிணை தாழிசைதாமுஞ் சிலபலவாய்
மரபேயியன்று மயங்கியும்வந்தன வாங்கமைத்தோள்
அரவேரகலல்கு லம்பேர்நெடுகண்வம் பேறுகொங்கைக்
குரவேகமழ்குழ லாய்கொண்டவான்பெயர் கொச்சகமே. (உ०)

குடநிலைத் தண்செல்வப் போர்க்கதக்கண்ணன் றரவுகுன்றூ
வடிவுடையாகுந் தரவிணைமன்னும்ப ரூஉத்தடக்கை
இடமிகவாஞ்சிஃ றாழிசைதண்மதி யோர்பலவாய்
மடலவிழ்கோதை மணிகிளராகு மயங்கிசையே. (உக)

அடிவரையின்றி யளவொத்துமந்தடி நீண்டிசைப்பிற்
கடிதவில்லாக்கலித் தாழிசையாகுங் கலித்துறையே
நெடிலடிநான்காய் நிகழ்வதுநேரடி யீரிரண்டாய்
விடினதுவாகும் விருத்தந்திருந்தகு மெல்லியலே. (உஉ)

தொய்திலையாய்திலை மென்றினைவாள்வரி பூண்டபறை
எய்தியதாழிசை யானும்வென்றானுங் கலித்துறையே
மைதிகழோதி வரிநெடுங்கண்ண வளமுலையாய்
மெய்தருவேய்தலை தேம்பழுத்தென்ப விருத்தங்களே. (உ௩)

குறளடிநான்கின் மூன்றொருதாழிசை கோதில்வஞ்சித்
துறையொருவாது தனிவருமாய்விடிற் சிந்தடிநான்
கறைதருகாலை யஃதேவிருத்தந் தனிச்சொல்வந்து
மறைதலில்வாரத்தி னலிறும்வஞ்சிவஞ் சிக்கொடியே. (உச)

மடப்பிடிபேடை யிரும்பிடிவஞ்சியின் றாழிசையாம்
வடப்புனைகண்ணி னல்லாய்மைசிறந்தன வான்றுறையாம்
தடப்பெருஞ்சோலை விருத்தமதாகுந் தயங்குவஞ்சிக்
கொடித்தொடிபூந்தா மரைகொடிவால னுதாரணமே. (உரு)

பண்பார்புறநிலை பாங்குடைக்கைக்கிளை வாயுறைவாழ்த்
தொண்பாச்செவியறி வென்றிப்பொருண்மிசை யூனமில்லா

வெண்பாமுதல்வர் தகவல்பின்னாக விளையுமென்றால்
வண்பான்மொழிமட வாய்மருட்பாவென்னும் வையகமே. (உ௬)

தென்றலிடையுந் திருநுதல்வேர்வரும் பன்முறையென்
றொன்றியபாவும்பல் யானையுமென்பவொண் போதமைந்த
பொன்றிகழோதி புறநிலைக்கிளை வாயுறைவாழ்த்
தென்றிவற்றிற்குஞ் செவியறிவிற்கு மிலக்கியமே. (உ௭)

வெண்பாவளம்பட வீரடியொன்றுட னேரிசையும்
கண்பானல்போன்மயி லந்தமின்மூன்றுங் கடைதருக்கி
நண்பார்தரவொன்றசைதரவேயடி யோடுகுறள்
பண்பார்புறநிலை செய்யுளியலென்ப பாவலரே. (உ௮)

இரண்டாவது செய்யுளியல் முற்றிற்று.

ஆ. கலித்துறை - ௩௬.

---

# மூன்றாவது ஒழிபியல்.

இருந்தளையுஞ் சிதையிற்சிறிய இ உ அளபோ
டருமறிவ ரலகுபெருமையை காரணைவேல்
ஒருங்குறிலிய லொற்றளபாய்விடி னேரலகாம்
வரும்வடமூந் திகழுமுகிண்முலை வாணுதலே (௧)

விட்டிசைத்தல்லான் முதற்கட்டணிக்குறி னேரசையென்
றொட்டப்படாததற் குண்ணுதாரண மோசைகுன்று
நெட்டளபாய்விடி னேர்நேர்நிரையொடு நேரசையாம்
இட்டத்திணற்றுறில் சேரினிலக்கிய மோர்சிதைவே (உ)

மாஞ்சேர்கலியுட் புகாகலிப்பாவின் விளங்கனிவந்
தாஞ்சேரடையா வகவலகத்துமல் லாதவெல்லாந்
தாஞ்சேர்மயங்குந் தளையுமஃதேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சேர்கனிபுகிற் புல்லாதயற்றளை பூங்கொடியே. (௩)

இயற்றளைவெள்ளடி வஞ்சியின்பாத மகவலுள்ளான்
மயக்கப்படாவல்ல வஞ்சிமருங்கினெஞ் சாவகவல்
கயற்கணல்லாய்கலிப் பாதமுநண்ணுங் கலியினுள்ளான்
மூயக்கப்படுமுதற் காலிருபாவு முறைமையினே. (௪)

அருகிக்கலியோ டகவன்மருங்கினெஞ் சீரடியும்
வருதற்குரித்தென்பர் வான்றமிழ்நாவலர் மற்றொருசார்
கருதிற்கடையே கடையிணைபின்கடைக் கூழையுமென்
றிரணத்தொடைக்கு மொழிவரிடைப்புணர் வென்பதுவே. (௫)

வருக்கநெடிலினம் வந்தாலெதுகையு மோனையுமென்
றொருக்கப்பெயரா னுரைக்கப்படுமுயி ராசிடையிட்
டிருக்குமொருசா ரிரண்டடிமூன்று மெழுத்துமொன்றி
நிரக்குமெதுகையென் றுலுஞ்சிறப்பில நேரிழையே. (௬)

சுருங்கிற்றுமூன்றடி யேனைத்தரவிரு மூன்றடியே
தரங்கக்கும்வண்ணகக் குந்தரவாவது தாழிசைப்பா
சுருங்கிற்றிரண்டடி யோக்கமிரட்டிச் சுரும்பிமிரும்
தரங்கக்குழலாய் சுருங்குந்தரவினிற் றழிசையே. (௭)

பொருளோடடிமுத னிற்பதுகூனது வேபொருந்தி
இருள்சேர்விலாவஞ்சி யீற்றினுமிற்கு மினியொழிந்த

மருடீர்விகாரம் வகையுளிவாழ்த்து வசைவினைப்புப்
பொருள்கோள்குறிப்பிசையொப்புங்குறிக்கொள்பொலன்கொடியே.

எழுத்துப்பதின்மூன் றிரண்டசைசீர்முப்ப தேழ்தளையைந்
திழுக்கிலடிதொடை நாற்பத்துமூன்றைந்து பாவினமூன்
றொழுக்கியவண்ணங்க ளூறொன்பதொண்பொருள் கோளிரண்
டிழுக்கில்விகாரம் வனப்பெட்டியாப்புள் வகுத்தனவே. (௯)

சீரொடுவிட்டிசை மாஞ்சீரியற்றளை சேர்ந்தருகி
வாரடர்கொங்கை வருக்கஞ்சுருங்கிற்று வான்பொருளும்
சீரியதூங்கேர் தடுக்குச்சிறந்த வெழுத்துமன்றே
யாருமொழியியற் பாட்டின்முதனிலைப் பாகுமன்றே. (௧௦)

மூன்றாவது ஒழிபியல் முற்றிற்று.

இயல் மூன்றிற்குங்கூடிய கலித்துறை - ருக.

யாப்பருங்கலக்காரிகை முற்றுப்பெற்றது.

---

கடவுட்டுணை.

# தண்டியலங்காரம்

## மூலம்.

---

## முதலாவது பொதுவணியியல்.

சொல்லின்கிழத்தி மெல்லியலிணையடி
சிந்தைவைத்தியம்புவல் செய்யுட்கணியே. (௧)

செய்யுளென்பவை தெரிவுறவிரிப்பின்
முத்தகங்குளகந் தொகைதொடர்நிலையென
வெத்திறத்தனவு மீரிரண்டாகும். (௨)

அவற்றுள், முத்தகச்செய்யுட் டனிநின்றுமுடியும். (௩)

குளகம்பலபாட் டொருவினைகொள்ளும். (௪)

தொகைநிலைசெய்யுட் டோன்றக்கூறி
னொருவனுரைத்தவும் பல்லோர்பகர்ந்தவும்
பொருளிடங்காலந் தொழிலெனநான்கினும்
பாட்டினுமளவினுங் கூட்டியதாகும். (௫)

பொருளினுஞ்சொல்லினு மிருவகைத்தொடர்நிலை. (௬)

பெருங்காப்பியமே காப்பியமென்றாங்
கிரண்டாயியலும் பொருட்டொடர்நிலையே. (௭)

பெருங்காப்பியநிலை பேசுங்காலை
வாழ்த்துவணக்கம் வருபொருளிவற்றினொன்
றேற்புடைத்தாகி முன்வரவியன்று
நாற்பொருட்பயக்கு நடைநெறித்தாகித்
தன்னிகரில்லாத் தலைவனையுடைத்தாய்
மலைகடனாடு வளநகர்பருவ
மிருசுடர்தோற்றமென் றினையனபுனைந்து
நன்மணம்புணர்தல் பொன்முடிகவித்தல்
பூம்பொழினுகர்தல் புனல்விளையாட
றேம்பிழிமதுக்களி சிறுவரைப்பெறுதல்
புலவியிற்புலத்தல் கலவியிற்களித்தலென்
றின்னனபுனைந்த நன்னடைத்தாகி
மந்திரந்தூது செலவிகல்வென்றி
சந்தியிற்றொடர்ந்து சருக்கமிலம்பகம்
பரிச்சேதமென்னும் பான்மையின்விளங்கி
நெருங்கியசுவையும் பாவமும்விரும்பக்
கற்றோர்புனையும் பெற்றியவென்ப. (அ)

கூறியவுறுப்பிற் சிலகுறைந்தியலினும்
வேறுபாடின்றென விளம்பினர்புலவர். (௯)

அறமுதனான்கினுங் குறைபாடுடையது
காப்பியமென்று கருதப்படுமே. (க0)

அவைதாம், ஒருதிறப்பாட்டினும் பலதிறப்பாட்டினு
முரையும்பாடையும் விரவியும்வருமே. (கக)

செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே. (கஎ)

மெய்பெறுமரபின் விரித்தசெய்யுட்கு
வைதருப்பம்மே கௌடமென்றாங்
கெய்தியநெறிதா மிருவகைப்படுமே. (கஅ)

செறிவேதெளிவே சமநிலையின்ப
மொழுகிசையுதார முய்த்தலில்பொருண்மை
காந்தம்வலியே சமாதியென்றாங்
காய்ந்தவீரைங் குணனுமுயிரா
வாய்ந்தவென்ப வைதருப்பம்மே. (கசு)

கௌடமென்பது கருதியபத்தொடுங்
கூடாதியலுங் கொள்கைத்தென்ப. (கரு)

செறிவெனப்படுவது நெகிழிசையின்மை. (கசு)

தெளிவெனப்படுவது பொருள்புலப்பாடே. (கஎ)

விரவத்தொடுப்பது சமநிலையாகும். (கஅ)

சொல்லினும்பொருளினுஞ் சுவைப்படலின்பம். (கக)

ஒழுகிசையென்பது வெறுத்திசையின்மை. (உ0)

உதாரமென்ப தோதியசெய்யுளின்
குறிப்பினொருபொரு ணெறிப்படத்தோன்றல். (உக)

கருதியபொருளைத் தெரிவுறவிரித்தற்
குரியசொல்லுடைய துய்த்தலில்பொருண்மை. (உஉ)

உலகொழுக்கிறவா துயர்புகழ்காந்தம். (உங)

வலியென்பபடுவது தொகைமிகவருதல். (உச)

உரியபொருளின்றி யொப்புடைப்பொருண்மேற்
றரும்வினைபுணர்ப்பது சமாதியாகும். (உரு)

ஏற்றசெய்யுட் கியன்றவணியெல்லா
முற்றவுணர்த்தும் பெற்றியதருமையிற்
காட்டியநடைநெறி கடைப்பிடித்திவற்றொடு
கூட்டியுணர்தல் சான்றோர்க்கடனே. (உகு)

முதலாவது பொதுவணியியல் முற்றிற்று.

ஆ சூத்திரம் - உகு.

---

# இரண்டாவது பொருளணியியல்.

தன்மையுவமை யுருவகந்தீவகம்
பின்வருநிலையே முன்னவிலக்கே
வேற்றுப்பொருள்வைப்பே வேற்றுமைவிபாவனை
யொட்டேயதிசயந் தற்குறிப்பேற்ற
மேதுநுட்ப மிலேசநிரனிறை
யார்வமொழிசுவை தன்மேம்பாட்டுரை
பரியாயம்மே சமாயிதமுதாத்த
மரிதுணரவநுதி சிலேடைவிசேட
மொப்புமைக்கூட்ட மெய்ப்படுவிரோத
மாறுபடுபுகழ்நிலை புகழாப்புகழ்ச்சி
நிதரிசனம்புணர் நிலைபரிவருத்தனையே
வாழ்த்தொடுசங்கீ ரணம்பாவிகமிவை
யேற்றசெய்யுட் கணியேழைந்தே. (க)

எவ்வகைப்பொருளு மெய்வகைவிளக்குஞ்
சொன்முறைதொடுப்பது தன்மையாகும். (உ)

அதுவே, பொருள்குணஞ்சாதி தொழிலொடுபுலனும். (ங)

பண்புந்தொழிலும் பயனுமென்றிவற்றி
னொன்றும்பலவும் பொருளொடுபொருள்புணர்ந்
தொப்புமைதோன்றச் செப்பினஃதுவமை. (ச)

அதுவே, விரியேதொகையே யிதரவிதர
முறைபெறுசமுச்சய முண்மைமறுபொருள்
புகழ்தனிந்தை நியமமநியம
மையந்தெரிதரு தேற்றமின்சொ
லெய்தியவிபரீத மியம்புதல்வேட்கை
பலபொருள்விகார மோகம்பூதம்
பலவயிற்போலி யொருவயிற்போலி
கூடாவுவமை பொதுநீங்குவமை
மாலையென்னும் பாலதாகும். (ரு)

அற்புதஞ்சிலேடை யதிசயம்விரோத
மொப்புமைக்கூட்டந் தற்குறிப்பேற்ற
மிலக்கேயேதுவென வேண்டவும்படுமே. (சு)

மிகுதலுங்குறைதலுந் தாழ்தலுமுயர்தலும்
பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய. (எ)

போலமானப் புரையப்பொருவ
நேரக்கடுப்ப நிகர்ப்பநிகர

வேரவேய மலையவியைய
வேற்பவெள்ள வுறழவொப்ப
வன்னவனைய வமரவாங்க
வென்னவிகல வினையவெதிரத்
துணைதூக்குண்டார் நகைமிகுதகைவீ
றனைகேழற்றுச் செத்தொடுபிறவு
நவைதீர்பான்மை யுவமைச்சொல்லே. (௮)

உவமையும்பொருளும் வேற்றுமையொழிவித்
தொன்றன்மாட்டினஃ துருவகமாகும். (௯)

தொகையேவிரியே தொகைவிரியெனாஅ
வியைபேயியைபின்மை வியனிலையெனாஅச்
சிறப்பேவிருப்பஞ் சமாதானமெனாஅ
வுருவகமேகம னேகாங்கமெனாஅ
முற்றேயவயவ மவயவியெனாஅச்
சொற்றவைம்மூன்று மற்றதன்விரியே. (௧0)

உவமையேது வேற்றுமைவிலக்கே
யவநுதிசிலேடையென் றவற்றொடும்வருமே. (௧௧)

உருவகமுவமை யெனவிருதிறத்தவு
நிரம்பவுணர்த்தும் வரம்புதமக்கின்மையிற்
கூறியநெறியின் வேறுபடவருபவை
தேறினர்கோட றெள்ளியோர்கடனே. (௧௨)

குணந்தொழில்சாதி பொருள்குறித்தொருசொல்
லொருவயினின்றும் பலவயிற்பொருடரிற்
றீவகச்செய்யுண் மூவிடத்தியலும். (௧௩)

அதுவே, மாலைவிருத்தமொரு பொருள்சிலேடையென
நால்வகையானு நடைபெறுமென்ப. (கச)

முன்வருஞ்சொல்லும் பொருளும்பலவயிற்
பின்வருமென்னிற் பின்வருநிலையே. (கரு)

முன்னத்தின்மறுப்பினது முன்னவிலக்கே
மூவகைக்காலமு மேவியதாகும். (கசு)

பொருள்குணங்காரணங் காரியம்புணரும். (கஎ)

வன்சொல்வாழ்த்துத் தலைமையிகழ்ச்சி
துணைசெயன்முயற்சி பரவசமுபாயங்
கையறவுடன்படல் வெகுளியிரங்க
லையமென்றுங் கறிந்தனர்கொளலே. (கஅ)

வேற்றுப்பொருள்சிலேடை யேதுவென்றின்னவை
மேற்கூறியற்கையின் விளங்கித்தோன்றும். (கக)

முன்னொன்றுதொடங்கி மற்றொன்றுமுடித்தற்குப்
பின்னொருபொருளி னுலகறிப்பெற்றி
யேற்றிவைத்துரைப்பது வேற்றுப்பொருள்வைப்பே. (உ0)

முழுவதூஉஞ்சேற லொருவழிச்சேறன்
முரணிற்றோன்றல் சிலேடையின்முடித்தல்
கூடாவியற்கைக் கூடுமியற்கை
யிருமைவிபரீத மெனவதனியல்பே. (உக)

கூற்றினுங்குறிப்பினு மொப்புடையிருபொருள்
வேற்றுமைப்படவரின் வேற்றுமையதுவே. (உஉ)

அதுவே, குணம்பொருள்சாதி தொழிலொடுபுணரும். (உ௩)

உலகறிகாரண மொழித்தொன் றுரைப்புழி
வேறொருகாரண மியல்புறக்குறிப்பின்
வெளிப்படவுரைப்பது விபாவனையாகும். (உ௪)

கருதியபொருடொகுத் ததுபுலப்படுத்தற்
கொத்ததொன் றுரைப்பினஃ தொட்டெனமொழிப. (உ௫)

அதுவே, அடையும்பொருளு மயல்படமொழிதலு
மடைபொதுவாக்கி யாங்ஙனமொழிதலும்
விரவத்தொடுத்தலும் விபரீதப்படுத்தலு
மெனநால்வகையினு மியலுமென்ப. (உ௬)

மனப்படுமொருபொருள் வனப்புமிகுத்துரைப்புழி
யுலகுவரம்பிறவா நிலைமைத்தாகி
யான்றோர்வியப்பத் தோன்றுவததிசயம். (உ௭)

அதுதான், பொருள்குணந்தொழிலையந் துணிவேதிரிவெனத்
தெருளுறத்தோன்று நிலைமைத்தென்ப. (உ௮)

பெயர்பொருளல்பொரு ளெனவிருபொருளினு
மியல்பின்விளைத்திற னன்றியயலொன்று
தான்குறித்தேற்றுத றற்குறிப்பேற்றம். (உ௯)

அன்னபோலெனு மவைமுதலாகிய
சொன்னிலைவிளக்குந் தோற்றமுமுடைத்தே. (௩0)

யாதன்றிறத்தினு மிதனிதுவிளைந்ததென்
றேதுவிதந்துரைப்ப தேதுவதுதான்
காரகஞாபக மெனவிருதிறப்படும். (௩௧)

முதல்வனும்பொருளுங் கருமமுங்கருவியு
மேற்பதுநீக்கமு மெனவிவைகாரகம். (நஉ)

அவையலபிறவென் றறிவதுஞாபகம். (நந)

அபாவந்தானு மதன்பாற்படுமே. (நச)

என்றுமபாவமு மின்மையதபாவமு
மொன்றிலொன்றபாவமு முள்ளதனபாவமு
மழிவுபட்டபாவமு மெனவைந்தபாவம். (நரு)

காரக்காரியமு மொருங்குடன்றோற்றமுங்
காரியமூந்துறூஉங் காரகநிலையும்
யுத்தமுமயுத்தமு முந்தையோடியலும். (நசு)

தெரிபுவேறுகிளவாது குறிப்பினுந்தொழிலினு
மரிதுணர்வினைத்திற நுட்பமாகும். (நஎ)

குறிப்புவெளிப்படுக்குஞ் சத்துவம்பிறிதின்
மறைத்தாயாட லிலேசமாகும். (நஅ)

புகழ்வதுபோலப் பழித்திறம்புனைதலும்
பழிப்பதுபோலப் புகழ்புலப்படுத்தலு
மவையுமின்னவென் றறைகுநருளரோ. (நகூ)

நிரனிறுத்தியற்றுத னிரனிறையணியே. (சம்)

ஆர்வமொழிமிகுப்ப தார்வமொழியே. (சக)

உண்ணிகழ்தன்மை புறம்போந்துதோன்ற
வெண்வகைமெய்ப்பாட்டி னியல்வதுசுவையே. (சஉ)

அவைதாம், வீரமச்ச மிழிப்பொடுவியப்பே
காமமவல முருத்திரநகையே. (சங)

தான்றற்புகழ்வது தன்மேம்பாட்டுரை. (சச)

கருதியதுகிளவா தப்பொருடோன்றப்
பிறிதொன்றுகிளப்பது பரியாயம்மே. (சரு)

முந்துதாமுயல்வுறு தொழிற்பயன்பிறிதொன்று
தந்துகிளப்பது-சமாயிதமாகும். (சசு)

வியத்தகுசெல்வமு மேம்படுமுள்ளமு
முயற்சிபுனைந்துரைப்பது தாத்தமாகும். (சஎ)

சிறப்பினும்பொருளினுங் குணத்தினுமுண்மை
மறுத்துப்பிறிதுரைப்ப தவநுதியாகும். (சஅ)

ஒருவகைச்சொற்றொடர் பலபொருட்பெற்றி
தெரிவுதரவருவது சிலேடையாகும். (சகூ)

அதுவே, செம்மொழிபிரிமொழி யெனவிருதிறப்படும். (ருo)

ஒருவினைபலவினை முரண்வினைநியம
மனியமவிலக்கு விரோதமவிரோதமென
வெழுவகையானு மியலுமென்ப. (ருக)

குணந்தொழின்முதலிய குறைபடுதன்மையின்
மேம்படவொருபொருள் விளம்புதல்விசேடம். (ருஉ)

கருதியகுணத்தின் மிகுபொருளுடன்வைத்
தொருபொருள்வைப்ப தொப்புமைக்கூட்டம். (ருங)

புகழினும்பழிப்பினும் புலப்படுமேதுவே. (ருச)

மாறுபடுசொற்பொருண் மாறுபாட்டியற்கை
விளைவுதரவுரைப்பது விரோதமாமே. (ருரு)

கருதியபொருண்மறைத் தாங்கதுபழித்தற்கு
வேறொன்றுபுகழ்வது மாறுபடுபுகழ்நிலை. (ருசு)

பழிப்பதுபோலும் பான்மையின்மேன்மை
புலப்படமொழிவது புகழாப்புகழ்ச்சி. (ருஎ)

ஒருவழிநிகழ்வதற் கொத்ததொருபயன்
பிறிதற்குப்புகழ்மை தீமையென்றிவை
புலப்படமொழிவ தாயினிதரிசனம். (ருஅ)

வினைபண்பெனவிவை யிருபொருட்கொன்றே
புணரமொழிவது புணர்நிலையாகும். (ருகூ)

பொருள்பரிமாறுதல் பரிவருத்தனையே. (சுο)

இன்னோர்க்கின்ன தியைகவென்றுதா
முன்னியதுவிரித்தல் வாழ்த்தெனமொழிப. (சுக)

மொழியப்பட்ட வணிபலதம்முட்
டழுவவுரைப்பது சங்கீரணமே. (சுஉ)

ஒப்புமையில்ல துவமையுமுவமையிற்
செப்பியதிறமு முவமவுருவகமு
முருவகத்தடக்கலு முணர்ந்தனர்கொளலே. (சுங)

பாவிகமென்பது காப்பியப்பண்பே. (சுச)

இரண்டாவது பொருளணியியல் முற்றிற்று.

ஆ சூத்திரம்-சுο.

## மூன்ருவது சொல்லணியியல்.

எழுத்தின்கூட்ட மிடைபிறிதின்றியும்
பெயர்த்தும்வேறு பொருடரின்மடக்கே. (க)

அதுதான், ஓரடிமுதலாய் நான்கடிகாறுஞ்
சேருமென்ப தெளிந்திசினேரே. (உ)

ஆதியிடைகடை யாதியோடிடைகடை
யிடையொடுகடைமுழு தெனவெழுவகைத்தே. (௩)

ஓரடியொழித்தன தேருங்காலை
யிணைமுதல்விகற்ப மேழுநான்கு
மடைவுறுபெற்றியி னடையத்தோன்றும். (௪)

அடிமுழுதுமடக்கலு மாங்கதன்சிறப்பே. (௫)

ஓரெழுத்துமடக்கலு முரித்தெனமொழிப. (௬)

கோமூத்திரியே கூடசதுக்க
மாலைமாற்றே யெழுத்துவருத்தனை
நாகபந்தம் வினவுத்தரமே
காதைகரப்பே கரந்துறைச்செய்யுள்
சக்கரஞ்சுழிகுளஞ் சருப்பதோபத்திர
மக்கரச்சுத்தமு மவற்றின்பால. (௭)

மூன்ருவது சொல்லணியியல் முற்றிற்று.

ஆ சூத்திரம்-௯௭.

## நான்காவது அணியியல்.

பிரிபொருட்சொற்றொடர் மாறுபடுபொருண்மொழி
மொழிந்ததுமொழிதல் கவர்படுபொருண்மொழி
நிரனிறைவழுவே சொல்வழுவதிவழூஉச்
செய்யுள்வழுவே சந்திவழுவென
வெய்தியவொன்பது மிடனேகாலங்
கலையேயுலக நியாயமாகம
மலைவுள்ளுறுத்தவும் வரைந்தனர்புலவர். (க)

மேற்கோளேது வெடுத்துக்காட்டென
வாற்றுளிக்கிளக்கு மவற்றதுவழூஉநிலை
நிரம்பவுணர்த்தும் வரம்பிலவென்ப. (உ)

அவற்றுள், பிரிபொருள்சொற்றொடர் செய்யுண்முழுவது
மொருபொருள்பயவா தொரீஇத்தோன்றும். (ஙு)

களியினும்பித்தினுங் கடிவரையின்றே. (சு)

மாறுபடுபொருண்மொழி முன்மொழிந்ததற்கு
மாறுபடத்தோன்றி வருமொழித்தாகும். (ரு)

காமமுமச்சமுங் கைம்மிகினுரித்தே. (சு)

மொழிந்ததுமொழிவே கூறியதுகூறி
வேறுபட்டவொருபொருள் விளங்காதாகும். (எ)

விரைவினுஞ்சிறப்பினும் வரைவின்றதுவே. (அ)

ஒருபொருடுணிய வுணர்க்கலுற்றசொல்
லிருபொருட்கியைவது கவர்படுபொருண்மொழி. (கூ)

வழூஉப்படலில்வழி வரைவின்றதுவே. (க0)

ஒருநிரன்முன்வைத் ததன்பின்வைக்கு
நிரனிறைபிறழ்வது நிரனிறைவழூவே. (கக)

உய்த்துணர்வரும்வழி யவ்வாறுமுரித்தே. (கஉ)

சொல்வழூவென்பது சொல்லிலக்கணத்தொடு
புல்லாதாகிப் புகர்படுமொழியே. (கரு)

வழக்காராயின் வரைவின்றதுவே. (கச)

அதிவழூவென்ப தோசையறுவழி
நெறிப்படவாரா நிலைமையதென்ப (கரு)

வகையுளியுரைப்புழி வரைவின்றதுவே. (கசு)

செய்யுள்வழூவே யாப்பிலக்கணத்தோ
டெய்தலில்லா வியல்பிற்றாகும். (கஎ)

ஆரிடத்துள்ளு மவைபோல்பவற்றுளு
நேருமென்ப நெறியுணர்ந்தோரே. (கஅ)

சந்திவழூவே யெழுத்திலக்கணத்துச்
சந்தியொடுமுடியாத் தன்மைத்தாகும். (கக)

இரண்டாம்வேற்றுமைக் கெதிர்மறுத்தும்வருமே. (உ0)

இடமெனப்படுபவை மலைநாடியாறே. (உக)

காலம்பொழுதொடு பருவமென்றிரண்டே. (உஉ)

கலையெனப்படுபவை காண்டகவிரிப்பிற்
காமமும்பொருளு மேமுறத்தழுவி
மறுவறக்கிளந்த வறுபத்துநான்கே. (உரு)

உலகெனப்படுவதின் னொழுக்கின்மேற்றே. (உச)

நியாயமென்பது நெறியுறக்கிளப்பி
னளவையிற்றெளிக்கும் வினைபொருட்டிறமே. (உரு)

ஆகமமென்பன மனுமுதலாகி
யறனொடுபுணர்ந்த திறனறிநூலே. (உசு)

கூறியநெறியி னறுவகைமலைவு
நாடகவழக்கி னாட்டுதற்குரிய. (உஎ)

மெய்பெறவிரித்த செய்யுட்டிறனு
மெய்தியநெறியு மீராங்குணனு
மையெழுவகையி னறிவுறுமணியு
மடியினுஞ்சொல்லினு மெழுத்தினுமியன்று
முடியவந்த மூவகைமடக்குங்
கோமூத்திரிமுதற் குன்றுமரபி
னேமுறக்கிளந்த மிறைகவியிருபது
மிவ்வகையியற்றுதல் குற்றமிவ்வகை
யெய்தவியம்புத லியல்பெனமொழிந்த
வைவகைமுத்திறத் தாங்கவையுட்பட
மொழிந்தநெறியி னொழிந்தவுங்கோட
லான்றகாட்சி சான்றோர்கடனே. (உஅ)

நான்காவது அணியியல் முற்றிற்று.

இயல் நான்கிற்குங் கூடியசூத்திரம் கஉடு.

தண்டியலங்காரம் முற்றுப்பெற்றது.

கடவுட்டுணை.

# நேமிநாதமூலம்.

## எழுத்ததிகாரம்.

### வெண்பா.

பூவின்மேல் வந்தருளும் புங்கவன்றன் பொற்பாதம்
நாவினா னாளு நவின்றேத்தி - மேவுமுடி
யெல்லா முணர வெழுத்தி னிலக்கணத்தைச்
சொல்லா னுரைப்பன் றொகுத்து. (௧)

உண்ண முடியாத வோதநீர் வான்வாய்ப்பட்
டெண்ண வமுதான தில்லையோ - மண்ணின்மேல்
நல்லாரைச் சேர்தலா னான்சொன்ன புன்சொல்லும்
எல்லாருங் கைக்கொள்வ ரீங்கு. (௨)

ஆவி யகரமுத லாறிரண்டா மாய்தமிடை
மேவுங் ககரமுதன் மெய்களாம் - மூவாறும்
கண்ணா முறைமையாற் காட்டியமுப் பத்தொன்று
நண்ணாமுதல் வைப்பாகு நன்கு. (௩)

ஆன்றவுயி ரீராறு மைங்குறி லேழ்நெடிலாம்
ஏன்றமெய்ம் மூவாறு மெண்ணுங்கால் - ஊன்றிய
வன்மையே மென்மை யிடைமையாம் வாட்கண்ணாய்
தொன்மை முயற்சியாற் றொக்கு. (௪)

ஓங்குயிர்க ளொற்றின்மே லேறி யுயிர்மெய்யாய்
ஆங்கிரு நூற்றெருபத் தாறாகும் - பாங்குடைய
வல்லொற்று மெல்லொற்றும் வர்க்க மளபெடைகள்
சொல்லொற்றி நீட்டத் தொகும். (ரு)

தொடர்நெடிற் கீழ்வன்மை மேலுகரம் யப்பின்
படைய வருமிகர மன்றி - மடநல்லாய்
மும்மையிடத் தையௌவுங் குன்றுமுன் ஞெற்றுண்டேல்
செம்மை யுயி ரேறுஞ் செறிந்து. (சு)

குறினெடில்க ளொன்றிரண்டு மூன்றளபு காலாம்
குறுகுமவ் வாய்த முயிர்மெய் - பெறுமுயிரே
மெய்யாய்தம் இஉக் குறுக்கமரை மென்மொழியாய்
ஐயௌ வளவொன் றரை. (எ)

உந்தியிற் றோன்று முதான வளிப்பிறந்து
கந்தமலி நெஞ்சுதலை கண்டத்து - வந்தபின்
நாசிநா வண்ண மிதழெயிறு மூக்கென்ப
பேசு மெழுத்தின் பிறப்பு. (அ)

காட்டு முயிருங் கசதநப மவ்வரியும்
ஈட்டிய வவ்வரியி னெட்டெழுத்தும் - மீட்டு
ஞயவின்கண் மும்மூன்று நன்மொழிக்கு முன்னென்
றயர்விலார் கட்டுரைத்தா ராய்ந்து. (கூ)

உயிரின்க ணொன்பா னுடன்மென்மை யின்மூன்
றயர்வி லிடையினங்க ளாறு - நயனுணர்ந்து

னன்மொழிகட் கீற்றெழுத்தா மென்றுரைப்பர் ஞாலத்துச்
சொன்முடிவு கண்டோர் துணிந்து. (௧0)

ஆதி யுயிர்வவ்வி யையினௌவா மஃதன்றி
நீதியினால் யவ்வியையி னையாகும் - ஓதுமெய்
எஔவி னீட்சிபுள்ளி யெய்துஞ் சஞயமுன்
அஐயா மாதி யிடை. (௧௧)

அகரத்திற் காவு மிகரத்திற் கையும்
உகரத்திற் கௌவு மிருவிற் - ககல்வரிய
வாருமா மேயா மிகரத்திற் கோவாகிச்
சேருமுக ரத்தின் றிறம். (௧௨)

நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வருநகரம்
சார்ந்த துடலாயிற் றன்னுடல்போம் - சார்ந்ததுதான்
ஆவியேற் றன்னாவி முன்னாகும் ஐஔவாம்
மேவியஎ ஒவ்வும் விரைந்து. (௧௩)

மெய்யீ றுயிரீ றுயிர்முதன் மெய்ம்முதலாய்
எய்தும் பெயர்வினையு மிவ்வகையே - செய்தன்மைத்தால்
தோன்ற றிரிதல் கெடுதலெனத் தொழிமொழியாய்
மூன்றென்ப சந்தி முடிவு. (௧௪)

மூன்றுநான் கொன்பா னுயிர்ப்பின்னு மல்லாத
ஆன்ற வுயிர்ப்பின்னு மாவிவரின் - தோன்றும்
யகரவகர மிறுதியிடத் தோரோர்
மகரங் கெடவகர மாம். (௧௫)

குற்றுகர மாவி வரிற்சிதையுங் கூறியவல்
லொற்றுமுன் ரேன்றுதலு முண்டாகும் - முற்ரேன்று
மென்மையதன் வல்லெழுத்தாம் வேற்கண்ணுய் முற்றுகரத்
தன்மையும்போ மாவியினைச் சார்ந்து. (கசு)

குற்ரெற் றிரட்டுமுயிர் வந்தால் யரழக்கள்
கிற்கப்பின் வல்லெழுத்து நேருமேல் - ஒற்ரும்
பிணைந்த வருக்கம் பெயர்த்தியல்பு சந்தி
இணைந்தபடி யேமுடியு மேய்ந்து. (கஎ)

வாய்ந்த வுயிர்ப்பின் வருமெழுத்தின் வர்க்கத்தொற்
றேய்ந்து புகூஉ மியல்புமாம் - ஆய்ந்த
இறுதி வருமெழுத்தா மீராறு மோரோர்
மறுவில்பதங் கெட்டு வரும். (கஅ)

வன்மை வரினே ளணலன மாண் டறவாம்
மென்மை வரினே ளலணனவாம் - தங்கள்
முன்பின்ரைந் தப்பி னணவியல்பாந் தட்டறவாம்
ஒன்றழிந்து போகலு முண்டு. (கக)

மகரந்தான் வன்மை வரின்வர்க்கத் தொற்ருகும்
புகரிலா மென்மைவரிற் பொன்றும் - நிகரில்
வகரம்வந் தாற் குறுகும் வவ்வழிந்து மவ்வாம்
மகரந் த்வயவாம் வந்து. (உ0)

உரிவரி ஞுழியி னீற்றுயிர்மெய் யைந்தாம்
வருமுயிரொன் ருென்பான் மயங்கும் - தெரியத்

திரிந்தும் விகாரங்க டோர்ந்தாறு மூன்றும்
பொருந்துமிடங் கண்டு புகல். (உக)

கின்றமுதற் குற்றுயிர்தா னீளுமுத னெட்டுயிர்தான்
குன்று முயிருயிர்மெய் கூடுமேல் - ஒன்றியவெண்
பத்தினிடை யாய்தமுமாம் பன்னீண்டு நீளாது
மற்றவைபோ யீறு வரும். (உஉ)

மேய விருசொற் பொருடோன்ற வேறிருத்தி
ஆய விடைச்சொ லடைவித்தால் - தூயசீர்
ஆவிபோ மொற்றுப்போ மாங்குயிர்மெய் போமன்றி
மேவியசுட் டாங்கு மிகும். (உங)

உற்றவா கார மகரமா யோங்குகரம்
பெற்றிடுநீ யாமாவின் பின்னிறுதி - ஒற்றணையும்
சாவவக மென்புழிச் சார்ந்த விறுதியிடைப்
போவதுயிர் மெய்யென்றே போற்று. (உச)

ஐந்தாறு மாறு பதினாறு மொற்றுமிகும்
வந்தறமு மன்ன வயனலக்கள் - சந்திகளின்
அல்லா தனவு மடக்குவாய் கண்டடக்க
எல்லா முடியு மினிது. (உரு)

எண்ணும் பெயரு முறையு மியன்றதற்பின்
நண்ணிவரு மாத்திரையு நற்பிறப்பும்-கண்ணு
வடிவும் புணர்ச்சியு மாயவோ ரேழும்
கடியமருங் கூத்தலாய் காண். (உகூ)

எழுத்ததிகாரம் முற்றிற்று.

# சொல்லதிகாரம்.

## மொழியாக்கம்.

தாதார் மலர்ப்பிண்டித் தத்துவனை வந்தித்துப்
போதார் நறுந்தெரியற் போர்வேட்க - பேதாய்
விரித்துரைத்த நூல்களினும் வேண்டுவன கொண்டு
தெரித்துரைப்பன் சொல்லின் றிறம். (௧)

ஏற்ற திணையிரண்டும் பாலைந்து மேழ்வழுவும்
வேற்றுமை யெட்டுந் தொகையாறும் - மாற்றரிய
மூன்றிடமுங் காலங்கண் மூன்று மிரண்டிடத்தால்
தோன்ற வுரைப்பதாஞ் சொல். (௨)

மக்க ணரகரே வானோ ரெனும்பொருள்கள்
தொக்க வுயர்திணையாந் தூமொழியாய் - மிக்க
உயிருள் ளனவு முயிரில் லனவும்
செயிரி லஃறிணையாஞ் சென்று. (௩)

ஒருவ னொருத்திபல வொன்றும் பலவென்றும்
மருவியபா லைந்தும் வகுப்பின் - பொருவிலா
ஓங்கு திணைப்பா லொருமூன் றொழிந்தவை
பாங்கி லஃறிணைப்பா லாம். (௪)

அன்னும் அள்ளாளும் அர்ஆர்ப வீறுமாம்
முன்னை யுயர்திணைப்பான் மூன்றற்கும் - தம்வினைகொண்
டாய்ந்த துறுவும் அஆவ வீறுமாம்
ஏய்ந்த வஃறிணைப்பாற் கீங்கு. (௫)

பாலே திணையே வினவே பகர்மரபே
காலமே செப்பே கருதிடமே - போலும்
பிறழ்வுஞ் சினைமுத லொவ்வாப் பிறழ்சொல்
உறழ்வுஞ் சிதைந்த வுரை. (சு)

ஓது மெதிர்வின வுற்ற துரைத்தலும்
ஏவ லுறுவதுகூற் றிந்நான்கும் - பேதாய்
மறுத்த லுடன்படுத லன்றெனினு மன்ற
இறுத்தலே போலு மிவை. (எ)

ஐயந் திணைபாலிற் றேன்றுமே லவ்விரண்டும்
எய்தும் பொதுமொழியா லீண்டுரைக்க - மெய்தெரிந்தால்
அன்மை துணிபொருண்மேல் வைக்கவொரு பேர்ப்பொதுச்சொல்
பன்மைசிறப் பாலுரைக்க பண்பு. (அ)

குழூவடிமை வேந்தே குழவி விருந்தே
வழூவுறுப்புத் திங்கண் மகவும் - பழுதில்
உயர்திணைப் பண்போ டுயிருறுப்பு மெய்யும்
அயர்வி லஃறிணையே யாம். (கூ)

என்னு மிருதிணையு மெய்து மஃறிணையாம்
எண்ணிவியங் கொள்க விருதிணையும் - எண்ணினால்
தன்மையா மஃறிணையுஞ் சொன்னமொழி தன்னினத்தை
உன்னி முடித்தலு முண்டு. (கய)

உயர்வுமிழிவு முவப்புஞ் சிறப்பும்
மயர்வி றிணைபான் மயங்கும் - செயலார்

வழக்குத் தகுதியுமாய் வந்தொழுகுஞ் சொற்கள்
இழுக்கல்ல முன்னை யியல்பு. (௧௧)

பெண்ணொ ழொழிந்த பெயர்தொழி லாகியசொல்
உண்மை யிருதிணைமே லொத்தறிக - எண்ணி
இனத்தென் றறிந்த சினைமுதற்பேர்க் கெல்லாம்
வினைப்படுப்பி னும்மை மிகும். (௧௨)

பொதுப்பிரிபா லெண்ணொருமைக் கண்ணின்றிப் போகாப்
பொதுத்தொழிலை யொன்றாற் புகலார் - மதித்த
ஒருபொருண்மேற் பல்பெயருண் டாகு லவற்றிற்
கொருவினையே சொல்லுக வோர்ந்து. (௧௩)

ஒப்பிகந்த பல்பொருண்மேற் சொல்லு மொருசொல்லைத்
தப்பா வினையினஞ் சார்பினால் - செப்புக
சாதி முதலாஞ் சிறப்புப் பெயர்முன்னர்
ஓதா ரியற்பெயரா யுற்று. (௧௪)

இனமின்றிப் பண்புண்டாஞ் செய்யுள் வழக்கேல்
இனமுண்டாய்ப் பண்புவந் தெய்தும் - புனையிழாய்
தின்ன மடையுஞ் சினையு முதலுமாய்
வண்ணச் சினைச்சொல் வரும். (௧௫)

மொழியாக்கம் முற்றிற்று.

ஆ வெண்பா-௧௫.

---

## வேற்றுமைமரபு.

ஈரண்டுபேர் ஐயொடுகு இன்னது கண்விளியென்
றீண்டுரைப்பின் வேற்றுமை யெட்டாகும் - மூண்டவைதாம்

தோற்றும் பெயர்முன்ன ரோழுந் தொடர்ந்தியலும்
ஏற்ற பொருள்செய் யிடத்து. (௧)

பெயரொழுவாய் வேற்றுமையாம் பின்பதுதா னுறு
பயனிலையு மேற்கப் படுதல் - சயல்விழியாய்
ஈற்றி னுருபாறு மேற்றன்முக் காலமும்
தோற்றும னிற்ற றுணிவு. (௨)

ஐயெ னுருபிரண் டாவ ததுவினையும்
எய்துங் குறிப்பு மியலவரும் - தையலாய்
ஆனொடுமூன் றுவ ததுதான் வினைமுதலும்
ஏனைக் கருவியுமா மீங்கு. (௩)

ஓதுங் குகர வுருபுநான் காவதஃ
தியாதிடத்து மீபொருளை யேற்குமாம் - கோதிலா
இன்னுருபைந் தாவ திதனினித் தன்மைத்த
என்னு மொருநான் கிடத்து. (௪)

அதுவென்ப தாறு முருபா மிதனை
திதுவென் கிழமை யிரண்டெய்தும் - விதிமுறையால்
கண்ணென்ப தேழா முருபாகுங் காலநிலம்
நண்ணும் வினையிடத்து நன்கு. (௫)

வேற்றுமைமரபு முற்றிற்று.

ஆ வெண்பா - ௪௬.

---

## உருபுமயங்கியல்.

வேற்றுமை யொன்ற னுரிமைக்கண் வேறொன்று
தோற்ற வுருபு தொகவருதல் - ஏற்றபொருள்

மாறினுந் தானிற்றல் வந்தொன்றி னென்றேற்றல்
தேறவரு மெய்ந்நூற் றெளிவு. (௧)

இருசொ லிறுதி யிரண்டேழல் லாத
உருபு தொகாவொன் றுரைப்பின் - உருபுதான்
தொக்க விடத்துடனே தொக்கும் விரியுமிடத்
தொக்கவிரி சொல்லு முள. (௨)

ஒன்றன்பே ரொன்றற் குரைப்பதா மாகுபெயர்
சென்றவைதாந் தம்முதலிற் சேர்தலோ - டொன்றாத
வேறொன்றிற் சேர்த லெனவிரண்டாம் வேற்கண்ணாய்
ஈறு திரிதலுமுண் டீண்டு. (௩)

உருபுமயங்கியல் முற்றிற்று.

ஆ வெண்பா - ௬௬.

---

## விளிமரபு.

ஈறு திரிதலு மீற்றய னீடலும்
வேறு வருதலு மெய்யியல்பும் - கூறும்
இரண்டற்று மூவகைப்பேர் முன்னிலைக்க ணின்று
திரண்டுவிளி யேற்குந் திறம். (௧)

இகரமீ காரமா மையாயா மேயாம்
உகரவோ கார வுயிர்கள் - பகர்விளிகள்
அன்மை யிடத்து மளபெடைப்பேர்க் கண்ணும்
உண்மை யியல்பா யுறும். (௨)

அன்னிறுதி யாவாகு மண்மைக் ககரமாம்
இன்னு முறைப்பெயரோ லேயாகும் - முன்னியல்பாம்

ஆனுமளபெடையு மானீற்றுப் பண்புதொழில்
மான்விழி யாயாய் வரும். (௩)

ஈராகும் அர்ஆரி தன்மேனு மேகாரம்
ஓரோ விடத்துளதா மோங்களபாம் - பேர்கள்
இயல்பாம் விளியேலா வெவ்வீற்றுப் பேரும்
புயல்போலுங் கூந்தலாய் போற்று. (௪)

ஈற்றய னீடும் லளக்கடா மேகாரம்
தோற்று முறைப்பெயர்க ளென்னுங்கால் - ஆற்ற
அயனெடிதாம் பேரு மளபெடையாம் பேரும்
இயல்பாம் விளிக்கு மிடத்து. (௫)

விரவுப்பே ரெல்லாம் விளிக்குங்கா னுன்னை
மரபிற்கு மஃறிணைப்பேர் வந்தால் - மரபில்
கொளவருமே காரமுங் கூவுங்காற் சேய்மைக்
களவிறப்ப நீளு மவை. (௬)

விளிமரபு முற்றிற்று.

ஆ வெண்பா - ௫௫.

---

## பெயர்மரபு.

பெயர்ச்சொல் வினைச்சொ லிடைச்சொ லுரிச்சொல்
இயற்சொன் முதனான்கு மெய்தும் - பெயர்ச்சொல்
உயர்திணைப்பே ரஃறிணைப்பே ரொண்விரவுப் பேரொன்
றியலு மெனவுரைப்ப வீங்கு. (௧)

சுட்டே வினவொப்பே பண்பே தொகுனளர
ஒட்டுப்பே ரெண்ணியற்பே ரெண்ணிலப்பேர் - இட்டிடையாய்

கூடியற்பேர் காலங் குலந்தொழிலின் பேர்மகடூ
ஆடூ வுயர்திணைப்பே ராம். (௨)

பகரு முறைசினை பல்லோர்நம் மூர்ந்த
இகர வைகார விறுதி - இகரமிறும்
சாதிப்பெண் பேர்மாந்தர் மக்களுந் தன்மையுடன்
ஆதி யுயர்திணைப்பே ராம். (௩)

ஆதியினிற் சுட்டா முகரவை காரப்பேர்
ஓதியவெண் ணின்பே ருவமப்பேர் - தீதிலாச்
சாதிப்பேர் சார்ந்த வினைவுறுப்பின் பேர்தலத்தோர்
ஓது மஃறிணைக்கா முற்று. (௪)

இயற்பேர் சினைப்பேர் சினைமுதற்பே ரொன்று
மயக்கிலா மூன்றனையும் வைத்துக், - கயற்கணாய்
பெண்ணாணே பன்மை யொருமையொடும் பேர்த்துறழ
நண்ணும் விரவுப்பேர் நன்கு. (௫)

தந்தைதா யென்பனவுஞ் சார்ந்த முறைமையால்
வந்த மகன் மகளோ டாங்கவையும் - முந்திய
தாந்தானு நீயீயி ரென்பனவுந் தாழ்குழால்
ஆய்ந்த விரவுப்பே ராம். (௬)

பேராம் பெயர்பெயர்த்துப் பேர்த்தா மொடுவோடாம்
நீராகு நீயி ரவனென்ப - தோருங்கால்
என்னென்னை யென்றாகும் யாமுதற்பே ராமுதலாம்
அன்ன பொழுதுபோ தாம். (௭)

பாங்கார் பெயர்வினை கொண்டன்றிப் பாலுணரா
ஆங்கு விரவுப்பே ரஃறிணைப்பேர் - ஓங்கிய
கள்ளொடு வந்தா லிருதிணைக்கும் பன்மைப்பால்
ஒள்ளிழாய் தோன்றலு முண்டு. (அ)

ஆய்ந்த வுயர்திணைப்பே ராவோவாஞ் செய்யுளிடை
ஏய்ந்திகழ் காலத் தியல்வினையால் - வாய்ந்த
உயர்திணைப் பாலொருமை தோன்றலுமுண் டென்ப
இயலும் வழக்கி னிடத்து. (௯)

பெயர்மரபு முற்றிற்று.

ஆ வெண்பா - ௬௬.

## வினைமரபு.

இறப்பு நிகழ்வெதிர்வாங் காலங்க ளேற்றும்
குறிப்பு முருபேற்றல் கூடாத் - திறத்தவுமாய்
முற்றெச்ச மொன்றிரண்டாய் மூவகைத்தாய் மூன்றிடத்தும்
நிற்கும் வினைச்சொற்க ணேர்ந்து. (க)

அம்மாமெம் மேமுங் கடதறமே லாங்கணைந்த
உம்மு முளப்பாட்டுத் தன்மையாம் - தம்மொடு
புல்லுங் குடுதுறுவு மென்னேனும் பொற்றொடியாய்
அல்லுந் தனித்தன்மை யாம். (உ)

ஆங்குரைத்த அன்னும் அள்ளாளும் அர்ஆர்ப
பாங்குடைய முப்பாற் படர்க்கையாம் - தேங்குழலாய்
யாவொனுஞ்சொன் முப்பாற்கு மெய்து மொருவனொன்ப
தோருயிரு பாற்கு முரித்து. (௩)

சொன்ன அதுவத் தறுமெவு மஃறிணைப்
பன்மை யொருமைப் படர்க்கையாம் - பின்னை
எவனென் வினவவ் விருபாற் பொருட்கும்
சிவணுதலாந் தொன்னூற் றெளிவு. (௪)

மின்னும் இர்ஈரும் விளம்பு மிருதிணையின்
முன்னிலைப் பன்மைக்கா மொய்குழலாய் - சொன்ன
ஒருமைக்கண் முன்னிலையாம் இ ஐ ஆய் உண்செல்
பொருளெவன் பனவும் புகல். (௫)

செய்து செயச்செய்யாச் செய்திய செய்தெனச்
செய்புசெ யின்செ யியர்செயற்கு - மொய்குழால்
பின்முன்பான் பாக்கும் பிறவும் வினையெச்சச்
சொன்முன் வகுத்தோர் துணிவு. (௬)

ஆறன்மேற் செல்லும் பெயரெச்ச மன்றல்ல
வேறில்லை யுண்டு வியங்கோளும் - தேறும்
இடமூன்றூ டெய்தி யிருதிணைப்பா லைந்தும்
உடனொன்றிச் சேறலு முண்டு. (௭)

சாற்றும் பெயர்வினை யெச்சங்க டாமடுக்கித்
தோற்ற லெதிர்மறுத்துச் சொன்னாலும் - ஏற்றபொருள்
குன்றாச் சில்சொ லிடைவந்து கூடியுடன்
நின்றுதன் மெய்ந்நு னெறி. (௮)

நெடிய னுடைய னிலத்த னிளையன்
கடியன் மகத்தன் கரியன் - தொடியனென

ஒண்ணுதான் மற்றவையு மெண்ணி யுயர்திணைப்பின்
நண்ணும் வினைக்குறிப்பு நாட்டு. (௯)

கரிதரிது தீது கடிது நெடிது
பெரிதுடைத்து பெய்து பிறிது - பரிதென
ஆயிழாய் பன்மையினுஞ் சொல்க வஃறிணையின்
மேய் வினைக்குறிப்பா மிக்கு. (௧௦)

சென்று முதலொடு சேருஞ் சினைவினையும்
அன்றியா வோவாகி யாயோயாய் - நின்றனவும்
மொய்குழான் முன்னிலைமுன் னீயேயு மெண்டொகையும்
எய்துங் கடப்பாட் டின. (௧௧)

இசைநிறை நான்கு வரம்பாம் விரைசொல்
வசையிலா மூன்று வரம்பாம் - அசைநிலை
ஆய்ந்த வொருசொ லடுக்கிரண்டாந் தாம்பிரியா
எய்ந்திரட்டைச் சொற்க ளிரட்டு. (௧௨)

வினைமரபு முற்றிற்று.

ஆ வெண்பா - ௭௯.

---

## இடைச்சொல்மரபு.

சாரியையா யொன்ற லுருபாத றங்குறிப்பின்
நேரும் பொருளாக்க நின்றசையாப் - பேர்தல்
வினைச்சொற்கீ றாத லிசைநிறைத்தன் மேவல்
அனைத்தே யிடைச்சொ லளவு. (௧)

தெரிநிலை யாக்கஞ் சிறப்பெச்ச முற்றெண்
அரிதா மெதிர்மறையே யையம் - தருமும்மை

தேற்றம் வினவெண் ணெதிர்மறையுந் தேமொழியாய்
ஈற்றசையு மேகார மென். (உ)

காண்டகுமன் னாக்கங் கழிவே யொழியிசைகொன்
ஆண்டறிகா லம்பெருமை யச்சமே - நீண்ட
பயனின்மை தில்லை பருவம் விழைவு
நயனி லொழியிசையு நாட்டு. (௩)

வினைபெயரு மெண்ணு மிசைகுறிப்பும் பண்பும்
மெனவென் றிரண்டு மியலும் - வினையுங்கால்
மன்றவெனுஞ் சொற்றேற்றந் தஞ்ச மெளிமையாம்
என்று வெனவிரண்டு மெண். (௪)

சிறப்பும் வினவுந் தெரிநிலையு மெண்ணும்
உறப்பி னெதிர்மறையி னோடும் - வெறுத்த
ஒழியிசையு மீற்றசையு மோகாரஞ் சொல்லா
தொழிபொருளுஞ் சாற்றி யுணர்.  (௫)

இடைச்சொல்மரபு முற்றிற்று.

ஆ வெண்பா -அக.

---

## உரிச்சொல்மரபு.

ஒண்பேர் வினையொடுந் தோன்றி யுரிச்சொலிசை
பண்பு குறிப்பாற் பரந்தியலும் - எண்சேர்
பலசொ லொருபொருட் கேற்றுமொரு சொற்றான்
பலபொருட் கேற்றுமாம் பட்டு. (க)

கம்பலை சும்மை கலியழுங்க லார்ப்பரவம்
நம்பொடு மேவு நசையாகும் - வம்பு

நிலையின்மை பொன்மை நிறம்பசலை யென்ப
விலைசென்றாடை வாளொளியாம் வேறு. (௨)

விரைவு விளக்க மிகுதி சிறப்பு
வரைவு புதுமையுடன் கூர்மை - புரைதீர்
கரிப்பையயங் காப்பச்சந் தேற்றமீ ராறும்
தெரிக்கிற் கடிச்சொற் றிறம். (௩)

வெம்மை விருப்பாம் வியலகல மாகுமரி
ஐம்மை யெய்யாமை யறியாமை - கொம்மை
இளமை நளிசெறிவா மேவேற்ற மல்லல்
வளமை வயம் வலியாம் வந்து. (௪)

புரையுயர் வாகும் புனிறீன் றணிமை
விரைவாந் துனைவுங் கதழ்வும் - குரையொலியாம்
சொல்லுங் கமவுந் துவன்று நிறைவாகும்
எல்லே விளக்க மெனல். (௫)

உரிச்சொல்மரபு முற்றிற்று.

ஆ வெண்பா - அசு.

---

## எச்சமரபு.

வேற்றுமை யும்மை வினைபண் புவமையும்
தோற்றிய வன்மொழியுந் தொக்கவிடத் - தேற்ற
இருசொல்லு மொன்று மிலக்கணத்தாற் பல்சொல்
ஒருசொல்லாய்ச் சேறலு முண்டு. (௧)

உருபுவமை யும்மை விரியி னடைவே
உருபுவமை யும்மைத் தொகையாம் - ஒருகாலம்

தோன்றின் வினைத்தொகையாம் பண்புமிரு பேரொட்டும்
தோன்றுமேற் பண்புத் தொகை. (உ)

ஏனைத் தொகைச் சொற் களைந்த னிறுதிக்கண்
ஆன்பெயர் தோன்றி னன்மொழியாம் - மானனையாய்
செய்யுமெனும் பேரெச்சத் தீற்றுமிசைச் சில்லுகர
மெய்யொடும்போ மீற்றெடும்போம் வேறு. (ங)

முன்மொழியும் பின்மொழியு மூண்ட விருமொழியும்
அன்மொழியு மென்றிவற்று லாம்பொருள்கள் - முன்மொழிதான்
கால மிடத்தாற் கருத்தோடுஞ் சேர்த்தறிதல்
மேலையோர் கண்ட விதி. (ச)

உலைவி லுயர்திணைமே லும்மைத் தொகைதான்
பலர்சொ னடைத்தாய்ப் பயிலும் - சிலவுறுதால்
முற்றும்மை யெச்சப் படுதலுமுண் டாமிடைச்சொல்
நிற்றலுமுண் டிறு திரிந்து. (ரு)

இன்னவொன முன்னத்தாற் சொல்லுத லென்றசென்ற
என்ன லவையின்றி யிட்டுரைத்தல் - தன்வினையால்
செய்யப் படும்பொருளைச் செய்ததெனச் சொல்லுதலும்
எய்தப் படும்வழக்கிற் கிங்கு. (சு)

மெலித்தல் குறுக்கல் விரித்த றொகுத்தல்
வலித்தலே நீட்டல் வரினும் - ஒலிக்கும்
வரிவளாய் தொல்குறைச்சொல் வந்திடினு மூண்மை
தெரிதலாங் கற்றோர் செயல். (எ)

அடிமொழி சுண்ண நிரனிறை விற்பூட்
டடிமறி யாற்று வரவு - துடியிடையாய்
தாப்பிசை தாவின் மொழிமாற் றனைமறி
பாப்புப் பொருள்கோளொன் பான். (அ)

சொல்லாற் றெரிதல் குறிப்பினாற் றோன்றுதலென்
றெல்லாப் பொருளு மிரண்டாகும் - மெல்லியலாய்
தொன்மொழியு மந்திரமுஞ் சொற்பொரு டோன்றுதல்
இன்மையு முண்மையுமா மீங்கு. (௯)

மூன்றுரைத்த காலங்கண் மூன்று மயங்கிடினும்
வந்தொருமை பன்மை மயங்கினும் - பைந்தொடியாய்
சான்றோர் வழக்கினையுஞ் செய்யுளையுஞ் சார்ந்தியலின்
ஆன்ற மரபா மது. (௧௦)

புல்லா வெழுத்தின் கிளவி பொருள்படினும்
இல்லா விலக்கணத்த தென்றொழிக்க - நல்லாய்
மொழிந்த மொழிப்பகுதிக் கண்ணே மொழியா
தொழிந்தனவுஞ் சார்த்தி யுரை. (௧௧)

தொல்காப் பியக்கடலிற் சொற்றீபச் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோடும் படவென்ப - பல்கோட்டுக்
கோமிகா மற்புல்லை வெல்லுங் குணவீர
நேமிநா தத்தி னெறி. (௧௨)

எச்சமரபு முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றிற்று.

ஆ அதிகாரம் ௨ - க்கு வெண்பா - ௯௮.

நேமிநாதமூலம் முற்றுப்பெற்றது.

கடவுடுணை.

# வீரசோழியம்.

## பாயிரம்.

மிக்கவன்போதியின் மேதக்கிருந்தவன் மெய்த்தவத்தால்
தொக்கவன்யார்க்குந் தொடரவொண்ணுதவன் றூயனெனத்
தக்கவன்பாதந் தலைமேற்புனைந்து தமிழுரைக்கப்
புக்கவன்பைம்பொழிற் பொன்பற்றிமன்புத்த மித்திரனே. (க)

ஆயுங்குணத்தவ லோகிதன்பக்க லகத்தியன்கேட்
டேயும்புவனிக் கியம்பியதண்டமி ழீங்குரைக்க
நீயுமுளையோ வெனிற்கருடன்சென்ற நீள்விசும்பில்
ஈயும்பறக்கு மிதற்கென்கொலோசொல்லு மேந்திழையே. (உ)

காமேவெழுத்துச்சொ னற்பொருள்யாப்பலங் காரமெனும்
பாமேவுபஞ்ச வதிகாரமாம்பரப் பைச்சுருக்கித்
தேமேவியதொங்கற் றேர்வீரசோழன் றிருப்பெயரால்
பூமேலுரைப்பன் வடநூன்மரபும் புகன்றுகொண்டே. (ங)

பாயிரம் முற்றிற்று.

## முதலாவது எழுத்ததிகாரம்.

### சந்திப்படலம்.

அறிந்தவெழுத்தம்முன் பன்னிரண்டாவிக ளானகம்முன்
பிறந்தபதினெட்டு மெய்யேவொய்தம் பெயர்த்திடையா
முறிந்தனயம்முத லாறுஞ்ஞண நமனவென்று
செறிந்தனமெல்லினஞ் செப்பாதவல்லினந் தேமொழியே. (க)

இறுதிமெய்நீங்கிய வீராறிலைந்து குறினெடிலேழ்
பெறுவரியானெடு நீர்மையளபு பிணைந்தவர்க்கம்
மறுவறுவல்லொற்று மெல்லொற்றுமாம்வன்மை மேலுகரம்
உறுவதுனையுந் தொடர்மொழிப்பின்னு நெடிற்பின்னுமே. (௨)

அகரம்வகரத்தி னோடியைந்தௌவாம் யகரத்தினோ
டகரவியைந்தைய தாகும் ஆ ஏ ஓ வினாவந்தமாம்
எகரஒந்நீட்சிமெய் யிற்புள்ளிமேவும் அ இ உச்சுட்டாம்
இகரங்குறுகி வருங்குற்றுகரம்பின் யவ்வரினே. (௩)

ஏயாஎச்சொன்முன் வினாவெடுத்தல்படுத் தன்னலிதல்
ஓயாதுரப்ப லெனநால்வகையிற் பிறக்குமெய்கள்
சாயாமயக்கந்தம் முன்னர்ப்பிறவொடு தாமும்வந்து
வீயாதவீரொற்று மூவொற்றுடனிலை வேண்டுவரே. (௪)

குற்றெழுத்தொன்றொன் றரையாகுமையௌ விரண்டுநெடில்
ஒற்றெழுத்தாய்தம்இ உவரைமூன்றள போங்குயிர்மெய்
மற்றெழுத்தன்றுயிர் மாத்திரையேபெறு மன்னுகின்ற
ஒற்றெழுத்தின்பின் னுயிர்வரினேறு மொளியிழையே. (௫)

உந்திமுதலெழுங் காற்றுப்பிறந்துர முஞ்சிரமும்
பந்தமலிகண் டமுமூக்குமுற்றண்ணம் பல்லுடனே
முந்துமிதழ்நா மொழியுறுப்பாகு முயற்சியினால்
வந்துநிகழு மெழுத்தென்றுசொல்லுவர் வாணுதலே. (௬)

ஆவியனைத்துங் கசதநபமவ் வரியும்வவ்வில்
ஏவியவெட்டும்யவ் வாறுஞநான்குமெல் லாவுலகும்

மேவியவெண் குடைச் செம்பியன்வீரரா சேந்திரன்றன்
நாவியல்செந்தமிட் சொல்லின்மொழிமுத னன்னுதலே. (எ)

ஈறுமகர ணகரங்கடாமு மிடையினத்தில்
ஏறும்வகர மொழிந்ததைந்துமீரைந் தெழிலுயிரும்
வீறுமலிவேன் கடங்குமரிக்கிடை மேவிற்றென்று
கூறுந்தமிழினுக் கீற்றெழுத்தாமென்பர் கோல்வளையே. (அ)

நின்றசொல்லீறும் வருஞ்சொன்முதலு நிரவித்தம்முள்
ஒன்றிடும்போது மொரோமொழிக்கண்ணு முலகிற்கொப்பின்
நன்றியமும்மை விகாரம்வந்தெய்திடு நன்கியல்பில்
குன்றுதலின்றி வருதலுமுண்டென்று கூறுவரே. (கூ)

ஆன்றமுலோபத்தொ டாகமமாதேச மாரியத்துள்
மூன்றுமொழியொடெழுத்துவிகார முதனடுவீ
றேன்றும்வகையொன்ப தாகலுமுண்டவை யெவ்விடத்தும்
தோன்றுவுலகத் தவர்க்கொத்தபோர்தன்மித் தூமொழியே. (க0)

சொன்னமொழிப்பொரு ணீக்குநகாரமச் சொன்முன்மெய்யேல்
அந்நிலையாக வுடல்கெடுமாவிமுன் னுநிலது
தன்னிலைமாற்றிடும் ஏ ஓ இரண்டுந் தனிமொழிமுன்
மன்னிய ஐ ஔவு மாகும்வடமொழி வாசகத்தே. (கக)

ஆவுமகரக் கிகரத்துக்கையு மௌவுமுகரக்
கேவுமிருவினுக் காரும்விருத்தி யெழிலுகரக்
கோவுமிகரத்திற் கேயுங்குணமென் றுரைப்பவந்தி
தாவுமிவைதத்தி தத்தினுந்தாதுப் பெயரினுமே. (கஉ)

மூன்றொடுநான்கொன்ப தாமுயிர்ப்பின்னுயிர் முந்தினடு
ஆன்றயகாரம்வந் தாகமமாகுமல் லாவுயிருக்
கேன்றவகாரமெட் டேற்குமிரண்டு மிறுதிகெட்டுத்
தோன்றுநிலையு மொரோவிடத்தாமென்பர் தூமொழியே. (கங)

ஆறாமுடலின்பின் தவ்வரினுங்கதைந் தாமுடலாம்
கூறார்ந்தநவ்வரின் முன்பினதாங்குறிற் பின்புமெய்கள்
ஏறுவுயிர்பின் வரவிரண்டாகும்யவ் வோடுரழ
ஈறுவரில்வன்மை பின்பில்வர்க்கத்தொற் றிடைப்படுமே. (கச)

நான்கொடுமூன்றென்ப தாமுயிரின்பின்பு நவ்வருமேல்
ஏன்றஞகாரம தாகும்பதினைந்தொ டெண்ணிரண்டாய்ந்
தோன்றுடற்பின்னர்த் தகாரம்வரினிரண் டுந்தொடர்பால்
ஆன்றவைந்தாமுட லாமுன்பிலொற்றுக் கழிவுமுண்டே. (கரு)

எண்ணிரண்டாமொற்று வன்மைவந்தாற்பின் பியைந்தவைந்தா
கண்ணியவொற்று நகரம்வரின்முன்மெய் ணவ்வதுவாம்
தண்ணியமவ்வந் திடினுமஃதே தனிநெடிற்பின்
பண்ணியவொற்றுப்பின் னுன்வரப்போமொரு காற்பயின்றே. (கசு)

பன்மூன்றதாமுட னப்பின்வருமெனி னீற்றெழுத்தாம்
பன்னேழதாம்வன்மை பின்வரினுயிடைத் தவ்வுமஃதாம்
பின்னுமிகார மதுபன்னொன்றாமுடல் பின்வருமேல்
சொன்னூரியவின்பின் றோன்றுநகார ஞகாரமென்றே. (கஎ)

ஐம்மூன்றதாமுடல் வன்மைபின்வந்திடி லாறொடைந்தாம்
மெய்ம்மாண் பதாநவ்வரின்முன்னழிந்துபின் மிக்கணவ்வாம்

மம்மேல்வரினிரு மூன்றுமுடன்மற் றியல்புசந்தி
தம்மாசகலங் கிடப்பின்களாமென்ப தாழ்குழலே. (கஅ)

வன்மைவந்தாற்பின்பு பத்தாமுடல்வன்மை யின்வருக்கத்
தன்மையொற்றுகு ஞமக்கள்பின்வரிற் சாற்றுமப்போம்
மூன்வயிற்கால்வவ் வரிற்பதின்மூன்று முடலழியும்
பின்வயிற்றவ்வரிற் றவ்வுங்கடைவன்மைப் பேறுறுமே. (சக)

ஈற்றின்பின்னவ்வரி னீற்றெழுத்தாமெழிற் றவ்வரிற்றன்
வேற்றுப்பதினேழ தாமுடலாமெய்து மாவியின்பின்
ஆற்றுந்திறல்வல் லினம்வந்திடல்வற் றின்வருக்கம்
போற்றுமிவையென்ற வல்லொற்றுமெல்லொற்றும் புக்கிடுமே. ()

ஆவிபின்றோன்றக் கெடுங்குற்றுகர மவற்றின்மெல்லொற்
றேவியவாறெழில் வல்லொற்றுமாமினி வன்மையொற்று
மேவியதன்முன் விளைதலும்வேண்டுவ ராவிவந்தால்
பாவியமுற்றுக ரத்தின்சிதைவும் பகர்ந்தனரே. (உக)

ஈறும்லகார மதவந்தெதிர்ந்திடி வீற்றெழுத்தேல்
ஆறுங்கடைவன்மை யாம்வன்மைதோன்றிலேந் தாமுடலாம்
ஆறுமுடல்வல் லினம்வரினுவிமு ஞவியொடும்
கூறுழகார மழிந்துடகாரங் குறுகிடுமே. (உஉ)

ஒன்றுக்கொருவோ ரிருவீரிரண்டுக்கு மூன்றுமுமூ
அன்றுற்றநாலுக்கு நான்கைந்தையாறு வேழெழுவாம் [ள்ளும்பான்
தொன்றுற்றவெட்டுக்கெண் ணென்பதொன்பானொடு தொண்டொரு (உங)
புன்றுற்றநூறு பதுபஃதுபத்துநூ றாயிரமே.

ஆவிக்குறிற்பின் ஞமவத்தோன்றிலவ் வொற்றிடையாம்
மேவியபன்னொன்று தோன்றில்வவ்வாமெய்யி லைந்திருமூன்
றுவதுமுண்டொற் றொரோவழித்தோன்றிடு மாவுமவ்வாய்த்
தாவியவைந்தா முயிர்பின்பெறுவன தாமுமுண்டே. (உச)

நின்றசொல்லீற்றுமெய்ம் முன்னுமுதலுயிர் நீண்டுமெய்யும்
பொன்றுமுயிரொ டுயிர்மெய்வந்தால்வந்த வாவியும்போய்க்
குன்றுமொரோவழிக் கூறியவாவி யொரோவழிப்போம்
அன்றிலனள ணமனக்களொன்றுகொன் றுவனவே. (உரு)

கூறியசுட்டின்பின் னுய்தமுங்கூடுஞ் சுட்டீற்றுகரம்
மாறியுயிரிரண் டாவதுமாம்வந்த சுட்டொருகால்
வீறுடைநெட்டெழுத் தாகுமளபும் விரிந்துநிற்கும்
நூறுடைவெள்ளிதட் டாமணைக்கோயி னுடங்கிடையே. (உசு)

துப்பார்பெயர்வேற் றுமையினகத்துந் தொகையின்கண்ணும்
செப்பார்மொழிமுதற் பின்சாரியைவரிற் றோர்ந்தவற்றுள்
ஒப்பார்மொழியீ றுயிரொடும்போமொரு காலுடல்போம்
தப்பாவுயிர்மெய் கெடுமொருகாலென்பர் தாழ்குழலே. (உஎ)

எண்ணிரண்டாமொற்றுப் பன்மூன்றுமெய்யி னிவற்றின்பின்னே
அண்ணியதவ்வரிற் றட்டறவாமவை யாய்தமுமாம்
பண்ணியசந்தி பகராதனவும் பகர்ந்தவற்றால்
கண்ணியுரைக்க மதியால்வனசக் கனங்குழையே. (உஅ)

சந்திப்படலம் முற்றிற்று.

ஆ. கலித்துறை - ஙக.

## ௨-வது. சொல்லதிகாரம்.

### வேற்றுமைப்படலம்.

எட்டாமெழுவாய் முதற்பெயர்வேற்றுமை யாறுளவாம்
கட்டார்கருத்தா முதற்காரகமவை கட்டுரைப்பின்
ஒட்டார்கருத்தா கருமங்கரணமொண் கோளியோடும்
சிட்டாரவதியொ டாதாரமென்றறி தேமொழியே, (௧)

ஒருவனொருத்தியொன் றுஞ்சிறப்போடுபல் லோர்பலவைக்
கருதுமுறையிற் கலப்பனவேற்றுமை காண்முதல்சு
மருவும்அர் ஆர் அர்கள் ஆர்கள்கள் மார்முதல் வேற்றுமையின்
உருவம்விளிவேற் றுமையொழித்தெங்கு முறப்பெறுமே. (௨)

ஒருவனொருத்தி பலவொன்றொடுபல வுஞ்சிறப்பின்
உருபுகண்மூன்று முடன்வைத்துப்பினெட்டு வேற்றுமையும்
மருவவிறுவி யுறழ்தரவாங்கா ரகபதங்கள்
உருவுமலியு மறுபத்துநான்குள வொண்டொடியே. (௩)

ஆதியிலாண்பெ ணலியென்றுநாட்டி யதினருகே
ஓதியவேற்றுமை யேழையுஞ்சேர்வித் தொருங்கதன்பின்
வாதியலொன்றொ டிரண்டுபலவென வைத்துறழத்
தீதியலாத வறுபத்துமூன்றுறுந் தேர்ந்தறியே. (௪)

கூறியசொற்பின் பொருண்மாத்திரத்திற் குலவெழுவாய்
வீறுடைவேற்றுமை யெய்துமொருவ னொருத்தியொன்றின்
ஏறியசுப்பல விற்சுவ்வுங்கள்ளுமெங் கும்மழியும்
ஊறியசுச்சிறப் புப்பலரிற்கள் ளொழிந்தனவே. (௫)

ஐயென்பதுகரு மத்திரண்டாவ ததுவொருகால்
பையவழித்ரு மூன்றேடொடாலாம் பகர்கருத்தா
வையநிகழ்கர ணத்தின்வருங்குப் பொருட்டென்பதும்
மெய்திகழ்வேற் றுமை நான்காவதாமிக்க கோளியிலே. (௬)

ஆனுளாரார்க ளதுவினவுறிற் குடைப்பின்குவ்வேல்
தூனுடியபத மாறுவலாதார மேழினிற்கே
தானுமுறைவயின் பக்கலுழியில்கண் சார்பிறவும்
வானுமலிநின்ற வற்றில்வருஉமைந் தவதியிலே. (எ)

ஆயாளீயேயவ்வொ டாவாஞேலோயீ ரளபெடைகாள்
மாயாவிளியி னுருபுகண்மற்றிவை முன்னிலைக்கண்
ணேயர்குமுன்சொன்ன வேழ்வேற்றுமையு மெல்லாவிடத்தும்
ஓயர்தியல்கை யுணர்பெரியோர்த முறைப்படியே. (அ)

உன்னுமென்னுந்தன்னும் யாவுமவ்வும்மிவ்வு மூவ்வுமெவ்வும்
என்னுமிவற்றின்முன் னீநான்ருன்சுவ்வரில் யாமுதல
வன்னும்வள்ளுந்துவ்வும் வையுஞ்சிறப்பினீர் நாமொடுதாம்
பின்னிலைந்தும்வர் பலரிற்கள்ளோடுவர் கள்ளென்பவே. (௯)

வேற்றுமைப்படலம் முற்றிற்று.

ஆ கலித்துறை - ௪௦.

## உபகாரகப்படலம்.

மேதகுநற்றொழில் செய்வான்கருத்தா வியன்கருவி
தீதில்கரணஞ் செயப்பட்டதாகுந் திறற்கருமம்
யாதனினீங்கு மவதியதாமிட மாதாரமாம்
கோதறுகோளிமன் கொள்பவனாகுங் கொடியிடையே. (௧)

வனாநின்றிழிந்தங்கொர் வேதியன்வாவியின் கண்மலிந்த
வினாநின்றபூவைக் கரத்தாற் பறித்து விமலனுக்குத்

துணைநின்றதீவினை நீங்கவிட்டானென்று சொல்லுதலும்
உளைநின்றகாரக மாறும்பிறக்கு மொளியிழையே. (உ)

காரணந் தான்றெரி தான்றெரியாக்கரு மந்தலைமை
ஆரணங்கேயைந் துளகருத்தாவ சலஞ்சலமாம்
பூரணமாகு மவதிபுறமக மாங்கரணம்
சீரணங்கார்வங் கிடப்பிறப்பாங்கோளி தேமொழியே. (௩)

பற்றொருவீடே யிருபுறந்தான்றெரி தான்றெரியா
நற்கருத்தாத்தீ பகமாங்கருமநான் காதாரமேல்
பொற்பமர்சேர்வு கலப்புப்புலனொ டயலென்பதாங்
கற்புமலியு மிருபத்துமூவகைக் காரகமே. (௪)

ஆதியதான்றெரி யாக்கருத்தாவதல் லாக்கருத்தா
ஆதியதாரொடு மூன்றும்பெறுமென்ப ராதியையே
ஓதினர்தான்றெரி யாக்கருமத்திற் கொழிகருமம்
மேதகுமூன்றிரண் டாறுநான்காமென்பர் மெல்லியலே. (௫)

மூன்றைந்தொடாறு கரணம்பெறுமூரட் கோளியதே
மூன்றிருமூன்றொடு நான்காந்தருமுறை யாலவதி
தோன்றுமைந்தாமற்றை யாதாரமேழின்க ணேயென்பவாம்
வான்றிகடெய்வ வடநூற்புலவர்தம் வாய்மொழியே. (௬)

உபகாரகப்படலம் முற்றிற்று.

ஆக கலித்துறை — ௩௬.

---

## தொகைப்படலம்.

நாமங்களிற்பொருந் தும்பொருணற்றொகை யதொகைக்கண்
நாமங்கழியுமுன் சாற்றியவேற்றுமை வேற்றுமையைச்

சேமங்கொள்சார்பக வெய்தியசொல்லுஞ் சிலவிடத்துப்
போமங்கதன்பொரு டன்னையெல்லார்க்கும் பொருட்படுத்தே. (க)

தற்புருடன்பல நெற்கன்மதாரயந் தாங்கியசீர்
நற்றுவிகுத்தொகை நாவார்துவந்துவ நல்லதெய்வச்
சொற்பயன்மாந்தர்க ளவ்வியபாவ மிதென்றுதொன்மை
கற்பகமாப்பகர்ந் தார்தொகையாறுங் கனங்குழையே. (உ)

எழுவாய்முதலெழு வேற்றுமையோடு மெழுந்தடையில்
வழுவாதநஞ்ஞொடெட் டாந்தற்புருடன் வளர்துவிகு
தழுவார்ந்தவெண்மொழி முன்னாய்வருந் தத்திதப்பொருண்மேல்
குழுவாவொருமையொப் புப்பன்மையொப்புக் குறியிரண்டே. (ங)

இருமொழிபன்மொழி பின்மொழியெண்ணோ டிருமொழியெண்
மருவும்விதியா ரிலக்கணமற்றைச் சகமுன்மொழி
மரவுந்திகந்தரா ளத்தொகையென்னப் பலநெற்றொகை
விரியுமொரோழவை வேற்றுமொழிப்பொருண் மெல்லியலே. (ச)

முன்மொழிப்பண்பு மிருமொழிப்பண்பு மொழிந்தன்மந்த
பின்மொழியொப்பொடு முன்மொழியொப்பும் பிணக்கொன்றிலா
முன்மொழிநற்கருத் தும்முன்மொழிநற் றுணிவுமென
நன்மொழியார்கன்ம தாரயமாறென்ன நாட்டினரே. (ரு)

முன்மொழியவ்வியஞ் சேர்தொகைபேர்முன் மொழித்தொகையே
சொன்மொழியவ்விய பாவமருவுந் துவந்துவமும்
வன்மொழியாமித ரேதரம்வாய்ந்த சமாகாரமா
நன்மொழியானுரைத் தார்கள்சமாச நறுநுதலே. (சு)

வேற்றுமையும்மை வினைபண்புவமையெ டன்மொழியென்
றூற்றுந்தொகைசெந் தமிணர்களாறென்ப ராய்ந்தபண்பில்
தோற்றுமளவு வடிவுநிறஞ்சுவை சொல்பிறவும்
ஏற்றுமிருபல் லளவுநிறையெண் பெயருமமையே. (எ)

அன்மொழிநற்றொகை யிற்றொகும்போதுமல் லாவிடத்தும்
நன்மொழிப்பின்பு நடுவுங்கெடுநன் கொரோவிடத்து
முன்மொழியீறு கெடும்பன்மையாகு முரட்பொருள்கோள்
பின்மொழிமுற்சொற் பிறிதோர்மொழியொ டிருமொழியே. (அ)

தொகைப்படலம் முற்றிற்று.

ஆகூ கலித்துறை - ருச.

---

## தத்திதப்படலம்.

அன்னியனீன னிகனேயன்வான்வதி யம்மிகரம்
வன்னுவகரத்தொ டானுள்ன்மானக் ஞுதிமற்றும்
துன்னியசேர்த்தத் திதத்தின்பிரத்தியஞ் சுவென்பதும்
மன்னுமரபு பிழையாமலெங்கும் வரப்பெறுமே. (க)

உண்ணுமிதனு லுண்டாக்குமிதனை யுடையனிது
பண்ணுமிதனைப் பயிலுமிதிற்பயன் கொள்ளுமித்தால்
எண்ணுமிதனை யிதனுக்குநாயக னீங்கிருக்கும்
நண்ணுமித்னை யிதையொக்குமிங்குள னன்னயத்தே. (உ)

மகனிவனுக்கிவ ளுக்கிந்தவர்க்கத் தினனிவனைத்
தகவியதேவ னெனும்யாவனென் றுநற் றத்திதங்கள்
திசழும்பிறபொரு ளின்கண்ணினிற்கு நினைந்தவற்றைப்
புகண்மலிதெய்வப் புலவர்க்கும்பொச்ச மடக்கரிதே (ங)

மையம்புணர்வுகம் வல்லளவாதி குணக்குறிப்பில்
வையம்வலிநெடு வாதிபின்னுமன்கன் னுனன்வன்னுள்
ஐயம்வனவள் மிம்முதலாகுந் திரப்பியத்தில்
பையமதிக்க வுலகத்தவர்க்குப் பயன்படவே, (௪)

அச்சியொடாட்டி யணியாத்தியத்தி தியாளொடள்ளி
இச்சிகியாதியும் பெண்மைத்தெளிவா மெழில்வடநூல்
மெச்சியவர்காராந் தத்தினுமூர்ப்பின்னு மிக்கவையாம்
கச்சியவீகாரந் தானேருறகு நறுநுதலே. (௫)

முந்தியவர்க்கங்க ளைந்தினுமுன் னென்றின் மூன்றடங்கும்
பந்தியிற்றெய்வ மொழிமுதல்யவ்வேற் பகருமிய்யாம்
வந்திடும்லவ்விற் குகரமுமாகு வரில்ரக்ரம்
அந்தவிரண்டொ டகரமுமாமென்ப ராயிழையே. (௬)

முதலொற்றிரட்டிக்கு முப்பத்தொன்றெய்திடின் முன்பினிஃ
திதமிக்கவைந்தாமெய் யாகுந்தனியே யிதனயற்குப்
பதமிக்கசவ்வரு மெண்ணுன்குதவ்வாமுப் பானுறுமூன்
றதனுக்குலோபமும் யவ்வொடுகவ்வு மறைவர்களே. (௭)

கூட்டெழுத்தின்பின் யரலக்கடோன்றிடிற் கூட்டிடையே
ஓட்டெழுத்தாகப் பெறுமொரிகாரம்வவ் வுக்கொருவ்வாம்
மீட்டெழுத்துத்தமி ழல்லனபோம்வேறு தேயச்சொல்லின்
மாட்டெழுத்தும்மித னுலறிமற்றை விகாரத்தினே. (௮)

தத்திதப்படலம் முற்றிற்று.

ஆ கலித்துறை — ௬௨.

# தாதுப்படலம்.

மன்னியசீர்வட நூலிற்சரபசு வென்றுவந்து
துன்னியதாதுக் களின்போலிபோலத் தொகுதமிழ்க்கும்
பன்னியதாதுக் களைப்படைத்துக்கொள்க முன்னிலையின்
உன்னியவேவ லொருமைச்சொற் போன்றுல கிற்கொக்கவே. (க)

நடவடுசெய்பண்ணு நண்ணுபோசிந்தி நவிலுண்ணிரு
கிடவிடுகூறு பெறுமறுகொள்ளழை வாழ்கிளைவெல்
கடநடுதங்கு கசிபொசிபூசு மிதுப்புகுசெல்
இடுமுடியேந்துகொ லிவ்வண்ணமற்று மியற்றிக்கொள்ளே. (உ)

வானுமையம்புகை வல்லிவுதல்லல்லன் பானலைகுத்
தான்விதிவைசி முதல்சுப்பிரத்தியக் தாதுவின்பின்
ஆனவினைக்குறிப் புக்காரகத்தி லணையுமென்ப
ஊனமில்சொல்லொன்று முன்புநின்றுகலு முண்டென்பரே. (ங)

தம்மந்திகன்வம் மனமணந்தன்னக ணக்கொடியுச்
சம்மன்மமையகஞ் சர்திரமாவாயு வல்லில்மியான்
கம்மன்றவங்கன் முதலாயினதெய்வத் தாதுவின்கண்
விம்மவருங்கா ரகத்தும்வினைக்குறிப் பின்கணுமே. (ச)

அய்யாயிகராந்த மவ்வாவுக்ராந்த மாவிமுன்பு
னையாதுவிற்கும் பிரத்தியம்பின்வரி னற்குணமும்
பொய்யாவிருத்தியு மோரோவிடத்துப் புகழ்பெயர்ச்சொல்
உய்யாதொழியில்விகாரத்தையோர்ந்துகொ ளெண்ணுதலே. (ரு)

ஆட்டாற்றுதீற்றுதி தாதுக்களையடற் காரிதமென்
றோட்டாவறிக வுளாயின்படியொப்பில் விப்பின்பு

ஞூட்டாவதிகா ரிதக்காரிதமுன்பிற் ருதுவின்கட்
காட்டாவதியவை காரிதக்காரிதக் காரிதமே. (௬)

தாதுவின்பின்பு தனயவிறப்பி னிகட்சியின்கண்
ஓதுங்கிறசுவ்வொ டாநின்றவாங்கும்மும் மோமேஃகான்
பேதமலியு மெதிரின்கணுங் கும் பிறவும்வந்தால்
ஏதமில்சந்திராக் தம்பிழையாம லியற்றிக்கொள்ளே. (௭)

மன்னுந்துமந்தம் பொருட்டுக்கப்பான்தற்கு வானவென்று
பன்னுமெழிற்ருது வின்பின்பிலாகும் பகரில்முன்பு
துன்னியதாதத் தொழிற்பொருட்டாகவென் னுந்தொடர்ச்சி
உன்னியபோதென்று தெய்வப்புலவ ருரைத்தனரோ. (௮)

ஆவுமிட்டுந்துவ்வு முவ்விஞெடிய்யு மரும்புலவர்
ஏவுங்கருத்தா விருதொழிற் கொன்றிடின் முன்புநின்று
மேவும்பொருட்டாது வின்பின்வருமிக்க தன்பெயரோ
பாவுந்துவாந்தம தாமென்றுரைப்பர் பனிமொழியே. (௯)

இல்லையுண்டாலில் லிவைமுதலாவிடைச் சொற்களுக்கோர்
எல்லையுண்டாக வியுற்றவொண்ணு விசையும்பொருளும்
ஒல்லையுண்டாக நிற்கும்மிடமுந்தேர்ந் திவற்றெருடொக்கச்
சொல்லையுண்டாக்குக வென்பதுநூலின் றுணிபொருளே. (௧௦)

ஆனுளாரார்களொ டாதாவிலன்மற் றிலளிலரும்
தானுமிலர்க ளிலதிலதாதுத் தடைப்பொருட்கண்
மேனுமுரைத்த மரபே வருமிக்க வாதொழிமுன்
ஏனுவுளமற்று நற்றடைமன்னும் பிரத்தியமே. (௧௧)

தாதுப்படலம் முற்றிற்று.

ஆ கலித்துறை - ௭௩.

## கிரியாபதப்படலம்.

ஒருவனொருத்தி சிறப்புப்பலரொன் றொடுபலவை
மருவுபடர்க்கை யொடுகாலமூன்றையும் வைத்துறழ்த்
துருவமலிபதி னெட்டாந்தொழிற்பதந் தொல்கருத்தா
உருவமலியும் பொருண்மேனிகழு மொளியிழையே. (௧)

முன்னிலைதன்மை யிடத்தினிற்காலங்கண் மூன்றையும்வைத்
துன்னுமொருமை சிறப்பொடுபன்மையு மூய்த்துறழ்ந்தால்
பன்னுந்தொழிற்சொற் பதினெட்டுளகருத் தாப்பொருண்மேல்
மன்னிநிகழ்தொகை முப்பதொடாறும் வகுத்தறியே. (௨)

தானானுந்தாளாளுந் தாராருந்தார்களொ டார்களென்று
மேனுமுரைத்த பிரத்தியமாகுந் தத்துவத்துவும்
தேனார்குழலி தனவுமனவுந் திகழ்படர்க்கை
ஆனுவிறப்பிற் றொழிற்பதமாறிற்கு மாய்ந்தறியே. (௩)

நின்றானின்றனொடு நின்றாளின்றளிவை நின்றார்நின்றர்
நின்றார்களொடுநின் றார்களுநின்றதுந் நின்றதுவும்
தென்றாதசீர்நின் றனநின்றனவுந் திகழ்படர்க்கைப்
பின்றாநிகழ்கை தொழிற்பதமாறிற்கும் பேர்த்தறியே. (௪)

வான்பானும்வாள்பாளும் வார்பாரும்வார்களும் பார்களுஞ்சேர்
தான்பாவியவது வும்பதுவுந்தத்தை யத்தைவென்ற
தேன்பாவுஞ்சொல்லி வனவும்பனவுந் திகழ்படர்க்கை
வான்பாண்மலியு மெதிர்வீற் றொழிற்பத மாறிற்குமே. (௫)

தாயாயுந்தீருஞ் சாற்றியதீர்களொ டீர்களுமாம்
சாயாதமுன்னிலை யின்னிறப்பாந்தன்மை தன்னிறப்பில்

தேயாததேனேனுந் தேமேமுந்தோமோமு மாகுமென்ப
வேயார்பொதியத் தகத்தியனார்சொன்ன மெய்த்தமிழ்க்கே. (௬)

இரு அய்நின்றுய்கிறீர் நின்றீர்கிறீர்கணின் றீர்களுமாய்
இருநின்றனமுன் னிலையினிகழ்ச்சி யிதன்கட்டன்மை
கிறேனனின்றேன்கிறே னின்றேங்கிறோமுநின் றோமுமென்றும்
தெருநின்றகட்பவ ளந்திகழ்வாய்நற் றிருந்திழையே. (௭)

வாய்பாய்வீர்பீர்வீர்கள் பீர்களிவைமன்னு முன்னிலையில்
சாய்பாய்விடுமெதிர் காலமிதனுழித் தன்மைசொல்லின்
வேய்பாவியதோளிவேன் பேன்வேம்பேமொடு வோம்போமுமாம்
சேய்பாவிய செழும்போதிப்பிரான்றன் றிருந்துறைக்கே. (௮)

ஓங்காதமுன்னிலைப் பாலேவலாங்கா லொருமையிற் சுப்
பாங்கார்சிறப்பிலா மேயுமின்கப்பன்மை யாமிடத்து
நீங்காதமின்களுங் கள்ளாமிசைவினிற் கவ்வென்பதாம்
தாங்காப்பரோக்கத் தினிற்போலுமாமென்பர் தாழ்குழலே. (௯)

தன்மைத்துணிவா மொருமைவனபன்தஞ்சம் போமொடுவோம்
பன்மைக்கணன்றிப் படர்க்கையின்கண்ணும் மொருமையிலாம்
பன்மைக்கண்வர்பர்கள் ளோடாகுமுன்னிலை தன்னொருமைத்
தன்மைச்சிவைதிபன் மைக்கிவிசிப்பித்திப் பின்னரவே. (௧௦)

வினைக்குறிப்போடு கருமம்படர்க்கையின் மிக்கவொன்றை
அனைத்தென்னலாமவ் வொடுபடுத்தாதுபின் னுமியற்கை
தனைக்கருமம்பெறுந் தாதுக்கண்மற்றும் படுவினைப்போல்
நினைக்கவருமற்றிவையும் பெயர்ச்சொ னிகர்த்திடுமே. (௧௧)

ஈரெட்டுமூவைந்து மாமுடறேற்றவு மீற்றுவன்மை
தேரிட்டுமூன்று முடலொடுதேற்றவுஞ் சிந்தைசெய்து
சேரிட்டுரைப்ப ரறிவொன்றிலாதவர் நீயவற்றைப்
பாரிட்டமாகப் பெரியோர்தமதுரை பார்த்தறியே. (௧௨)

மதத்திற்பொலியும் வடசொற்கிடப்புந் தமிழ்மரபும்
உதத்திற்பொலியேழை சொற்களின்குற்றமு மோங்குவினைப்
பதத்திற்சிதைவு மறிந்தேமுடிக்கபன் னூறுமிரம்
விதத்திற்பொலியும் புகழவலோகிதன் மெய்த்தமிழே. (௧௩)

கிரியாபதப்படலம் முற்றிற்று.

ஆ. கலித்துறை - அ௩.

---

## சொல்லாராய்ச்சியிற் பிறமயக்கங்கள்வருமாறு.

வேற்றுமை யெட்டுந் திணையிரண்டும் பாலைந்தும்
மாற்றுதற் கொத்த வழுவேழும் — ஆறெட்டும்
ஏற்றமுக்காலமிட மூன்றே டிரண்டிடத்தால்
தோற்ற வுரைப்பதாஞ் சொல். (௧)

திணைபான் மரபு விஞச்செப் பிடஞ்சொல்
இணையா வழுத்தொகையோ டெச்சம் — அணையாக்
கவினையபார் வேற்றுமையுங் காலமயக் குங்கொண்
டவினையறு ராராய்ந்தார் சொல். (௨)

சொல்லதிகாரம் முற்றிற்று.

ஆ. பாக்கள்-அஅ.

---

# ௩-வது. பொருளதிகாரம்.

## பொருட்படலம்.

ஆற்றுமகமே புறமேயகப்புற மன்றிவென்றி
யேற்றும்புறப்புற மென்றும்பொருளளப் பானவை
ஏற்றும்பிரமேய மென்றும்வகுப்ப திவையுமன்றிச்
சாற்றும்புலவரு மெண்ணிறந்தாரொன்பர் தாழ்குழலே. (௧)

முல்லைக்குறிஞ்சி மருதத்தொடுமுது பாலைநெய்தல்
சொல்லியகாஞ்சி சுரநடைக்கிளை பாலைதும்பை
இல்லவண்முல்லை தபுதாரந்தாபத மேய்ந்தவள்ளி
அல்லதுகாந்தள் குறுங்கலிவெட்சி யடல்வஞ்சியே. (௨)

கூற்றிசைவாகை கரந்தைபெருந்திணை கொற்றநொச்சி
பற்றியபாசறை முல்லையுழிஞை யெனப்பகர்ந்த
மற்றிவையையைந்து மாம்பொருணன்கினும் வண்புகட்சி
பற்றியபாடாண் பொதுவியலாதியும் பார்த்தறியே. (௩)

முல்லைகுறிஞ்சி மருதத்தொடுபாலை நெய்தலைந்தும்
சொல்லுமகமா மதனுக்குரைதொகு சுட்டகமோ
டெல்லைநிகழு மிருபதொடேழுள வேனையவற்
றெல்லைநிகழு முரையுமறிந்துகொ ளொண்ணுதலே. (௪)

சுட்டகமேதிணை கைகோணடைசுட் டிடங்கிளவி
ஒட்டியகேள்வி மொழிவகைகோளுட் பெறுபொருளென்
றிட்டிகச்சொற்பொரு ளெச்சமிறைச்சி பயன்குறிப்புக்
கட்டகமெய்ப்பாடு காரணங்காலங் கருத்தியல்பே. (௫)

ஏற்றும்வினைவொ டுவம்மிலக்கண மேய்த்தொல்லோர்
போற்றும்புடையுரை யேமொழிசேர்தன்மை யேயுமன்றி
ஆற்றும்பொருளடை வென்றுமுன்னாயல் லவற்றினுக்கு
மாற்றுமுறையும் வகுக்குமுறையு மதித்தறியே. (௬)

மலையிருண்முன்பனி கூதிர்வெற்பன்கண மூங்கில்மஞ்ஞை
இலைமலிவேங்கைசெங் காந்தளில்லவ் மிகன்முருகன்
சிலைமலிகுன்றுவர் தேனேபுணர்தல் தினைசுனையும்
கொலைமலியானை குறிஞ்சியென்றின்ன குறிஞ்சியிலே. (௭)

ஓதியவேனி லொடுபின்பனியகில் வெம்பரலே
தீதியல்வேடர் கலையொள்விடலைதிண் பாலையத்தம்
கோதியல்செந்நாய் பருந்தொடுகொம்பனை யார்ப்பிரிதல்
வாதியற்கன்னி குறும்பர்வெம்பாலை மடவரலே. (௮)

காடுகார்மாலை யிடையர்முதிரைகான் யாறுமுல்லை
நீடுமால்கொன்றை நிரைமேய்த்தலோடு நெடுங்குருந்தம்
கேடில்கார்தோன்றி சிறுபான்கிழத்தி மனையிருத்தல்
நீடுசேர்புன்கு பிறவுமுல்லைத்திணை பெண்கொடியே. (௯)

பொற்றாமரையின் திரன்பொய்கைபூந்தார் பழனஞ்செந்நெல்
வற்றாவெருமை வளர்பனிநீர்நாய் வடமகன்றில்
தெற்றாமனையூட லூரன்கடைசியா செங்கழுநீர்
சுற்றாமருதத் திணையிலுண்டாவன தூமொழியே. (௰)

மீனேகடல்பனி கொண்கன்றிமிலம் விளரிநிலாக்
கானேதரும்புன்னை கண்டலனஞ்சுறுக் காதலுப்பு

வானோர்வருணன் முதலெனவைய ரிரங்கல்கைதை
தேனேதருமொழி யாயந்நெய்த னெளிந்தறியே. (கக)

ஏற்றுழிஞ்துபாலை பாசறைமுல்லை யியன்றவள்ளி
தோற்றுஞ்சரநடை யில்வண்முல்லைதொல் காந்தளன்றி
மாற்றுங்குறுங்கலி தாபதங்குற்றிசை கைக்கிளையோ
டாற்றும்பெருந்திணை யாந்தபுதார மகப்புறமே. (கஉ)

வெட்சிகரந்தை விறல்வஞ்சிகாஞ்சி யுழிஞைநொச்சி
உட்கியதும்பை யென்றேழும்புறமுயர் வாகைதன்பின்
கொட்கும்பொதுவியல் பாடாண்புறப்புறங் கொண்டிவற்றை
உட்கும்தவிட் டேவோருணைப்படி யோர்ந்தறியே. (கங)

ஒருப்பாடுநற்சொற் செலவொற்றுரைப்புப் புகல்பொருதல்
விருப்பாநிரைகொண் டவாைத்தடுத்தல் நெறிசெலுத்தல்
செருப்பாடுகைப்படை காத்தூர்புகல்திறங் கூறிடுதல்
பருப்பாடுபாலாற் களித்தல்வெட்சித்திறம் பான்மொழியே. (கச)

ஓடாப்படையாண்மை புன்னனிரைமீட்டன் மன்னர்வெற்றி
கோடாத்திறங்கூற றன்றிறங்கூறுதல் கொற்றப்பொற்றூர்
சூடாப்பொலிசுத லாரமரோட்டல் துகளறுகல்
தேடாப்பொறித்தல் கரந்தைத்திறமற்றுந் தேர்ந்தறியே. (கரு)

அரவமெடுத்தல் வயங்கியலிகை விலக்கருமை
விரவுதனிச்சே வகம்வென்றிகூறல்வென் றூர்விளக்கம்
நிரவும்வழிவொடு சோற்றுநிலைகொற் றவர்மெலிவும்
பரவுதழிஞ்சியென் றின்னவைவஞ்சியின் பாற்படுமே. (கசு)

நிலையாமைவாழ்த்து மயக்கமுதுமை நிலையினொடும்
தொலையாமகிழ்ச்சி பெருமைதீப்பாய்தல் சுரத்திடைத்தன்
தலையார்கணவன் றனையிழத்தல்தனி யேயிரங்கல்
கலையார்மனைவிபெய் ஞுஞறவென்றிவை காஞ்சியென்னே. (௧௭)

வேந்தன்சிறப்பு மதிலேறுதல்வென்ற வாட்சிறப்புக்
கார்த்தும்படைமிசை நாட்கோளொடுகாவ லேமுடிகோள்
ஏந்துந்தொகைநிலை கொற்றநீர்ப்போர்ச்செல்வ மூர்ச்செருவே
போந்தமுதிர்வு குறுமையென்றுமுழி ஞைப்புணர்ப்பே. (௧௮)

நாற்குலப்பக்கமுக் காலங்களவழி நற்குரவை
ஆற்றல்வல்லாண்வேட்கை யார்பக்கமேன்மை யரும்பொருளே
தோற்றியகாவல் துறவுகொடைபடை யாளர்பக்கம்
மாற்றியவொற்றுமை யோடுமற்றுமிவை வாகையிலே. (௧௯)

நிலைபாழிகோளொடு வாளாட்டுடைபடை நீள்களிற்றின்
தொலையார்மலைவிவை தும்பைவிகற்பங்க டொன்மைமிக்க
தலையாயநல்லவை தன்னினுங்கண்டிங் கொழிந்தவெல்லாம்
சிலையாருநன்னுதல் மாதேயறிந்துகொள் செப்பிடவே. (௨௦)

புகட்சிபரவல் குறிப்புக்கொடிநிலை கந்தழியே
இகட்சிமலிவள்ளி யென்றிவையாறு நெறிமுறையில்
திகட்சிமலைதரு பாடாண்பகுதி செப்பாதனவும்
இகட்சியுண்டாகா வகைதேர்ந்தறித லியல்புடைத்தே. (௨௧)

பொருட்படலம் முற்றிற்று.

பொருளதிகாரம் முற்றிற்று.

ஆக பாக்கள் - ௧௦௯.

## ௪-வது. யாப்பதிகாரம்.

### யாப்புப்படலம்.

குறிலுநெடிலு மேனுமிவ்வேரசை குற்றெழுத்துப்
பெறின்முனிவையே நிரையசை யாம் பிழைப் பில்லைபின்பொற்
றிறினுமசையிரண் டொன்றின்முற்சீரு வசையொன்றிரேர்
இறுவதிடைச்சீர் நிரையிறிற்பிற்சீ ரொனவியம்பே. (க)

கருவிளங்கூவிளந் தேமாபுளிமா வெனக்கலந்து
மருவியநான்கு முதற்சீர்களாமற் றவற்றினந்தத்
திருவமாங்காய்வரி னுமிடைச்சீரொண் கனிவருமேல்
செருவமர்வேற்கண்ணி னுய்கடைச்சீரொனத் தேர்ந்தறியே. (உ)

இருசீருமுச்சீரு நாற்சீருமஞ்சீரு மைந்தின்மிக்கு
வருசீருமந்தரங் காறீப்புனலொடு மண்பெயரார்
திரிசீரடியாங் குறள்சிந்தளவு நெடிற்றலைமை
தெரிசீர்க்கழிநெடி லென்றுமிரணிறை செப்புவரே. (௩)

முன்னிரண்டாவியு மீறுமையும்மோனை முன்னவற்றின்
பின்னிரண்டாவியு மேழுமெட்டும்மோனை யாறுமைந்தும்
பன்னிரண்டாமுயிர் முன்னிரண்டும்மோனை பண்ணுர்தச்சப்
பின்னிரண்டா ஞமவ்வும்வ்வும்மோனை பெண்ணணங்கே. (௪)

ஒன்றுமுதலள வொத்திரண்டாமெழுத் தொன்றிவரின்
ஒன்றுரதனை யெதுகையென்றேதுவர் தன்மைகுன்று
மூன்றுவதொன்ற லிரண்டடியொன்றன் முழுதுமொன்ற
ஆன்றுவிடைமுயி ராசிடையாய்வரு மாங்கதுவே. (௫)

பத்தியங்கத்திய மென்றிரண்டாஞ்செய்யுள் பத்தியமேல்
எத்தியபாதங்க ளால்வந்தியலு மெனமொழிந்த

கத்தியங்கட்டுளை செய்யுளின்போலி கலந்தவற்றோ
டொத்தியல்கின்றமை யாலொன்றுதாமு முனைத்தனரே. (௬)

ஒன்றுமிடைச்சீர் வருஞ்சீரொடுமுதற் சீர்கடெற்றும்
என்றுமளவடி யீற்றடியல்லன வீற்றடியும்
நன்றுமலர்காசு நாள்பிறப்பென்றிற்ற சிந்தடியே
துன்றுங்கடைச்சீர் புகாவென்பர்வெள்ளையிற் றூமொழியே. (௭)

வேண்டியவீரடி யாற்குறளாமிக்க மூவடியால்
தூண்டியசிந்தியல் நான்கடிநேரிசை தொக்கதனில்
நீண்டியபாதத்துப் பஃறொடையாமித னேரிசையே
நீண்டிசையாங்கலி நேரிசைபேதிக்கி லின்னிசையே. (௮)

சுற்றயன்முச்சீர் வரினேரிசையா மிணைக்குறட்பா
ஏற்றகுறள்சிந் திடைபேருகில மண்டிலப்பாச்
சாற்றியதன்னே ரடியாலியலுந் தலைநடுவீ
றூற்றியபாதத் தகவலடிமறி மண்டிலமே. (௯)

தரவொடுதாழிசை சுற்றுமராகமம் போதரங்கம்
உரவுடனற்றனி வாரமென்றுங்கலி யோர்த்தனனே
வரவிசைநேரிசை யம்போதரங்கம்பின் வண்ணகமே
விரவியகொச்சகம் வெண்கலியென்று விகற்பிப்பரே. (௧௦)

வண்ணகவொத்தாழிசைக் காறுறுப்பென்ப ரைந்துறுப்பு
நண்ணுவதம்போ தரங்கவொத்தாழிசை நான்குறுப்பாம்
எண்ணியநேரிசை யொத்தாழிசைதா னிறுதிசிந்தாய்த்
திண்ணியநேரடி யால்வரும்வெண்கலி தேர்மொழியே. (௧௧)

நிலவுந்தரவுந் தரவிணையுந்நின்ற தாழிசைகள்
சிலவும்பலவுஞ் சிறந்தமயங்கியுஞ் சேர்விகற்பம்
பலவும்வரினும் பவள்முஞ்சேலும் பனிமுல்லையும்
குலவுந்திருமுகத் தாய்கொண்டவான்பெயர் கொச்சகமே. (கஉ)

சிந்துங்குறளு மடியென்பர்வஞ்சிக்குச் சீர்தனிச்சொல்
வந்தஞ்சுரிதக மாசிரியத்தான் மருவும்வெள்ளை
முந்தியிறுதி யகவலதாகி முடியுமென்றால்
இந்துநுதன்மடவாய் மருட்பாவென் றியம்புவரே. (கங)

யாழுதனிற்பது கூன்வஞ்சியிற்றினும் பாதத்துள்ளும்
ஆழிரண்டொத்து நிகழடிவெண்செந் துறையிழுகிப்
போமிசைச்செந்துறை சந்தஞ்சிதைகுறள் பூண்பலசீர்
தாமதுவந்தங் குறைநவுமாங்குறட் டாழிசையே. (கச)

நான்கொடுமூன்றடி தோறுந்தனிச்சொல்லு நண்ணுமெனிற்
றூன்பெயர்வெள்ளை விருத்தமுப்பாதந் தழுவிவெள்ளை
போன்றிறும்வெண்டா ழிசைமூன்றிழிவே ழடிபொருந்தி
ஆன்றவந்தங்குறை யின்வெண்டுறையென்ப ராயிழையே. (கரு)

மூன்றடியொப்பன தாழிசைநான்காய்க் கடையயற்கண்
ஏன்றடிநைந்து மிடைமடக்காயு மிடையிடையே
தோன்றடிகுன்றியு மாகுந்துறைநேரில் கழிநெடிலாய்
ஆன்றடிநான்கொத் திடிலாசிரிய விருத்தமன்றே. (கசு)

ஈரடியாதி யெனைத்தடியாலும்வந் தீற்றினின்ற
ஓரடிநீளிற் கலித்தாழிசையொலி யோர்விருத்தம்

நேரடிநான்காய் நிகழுமென்றூர்நெடி லென்றுரைத்த
பேரடிநான்கு கலித்துறையாமென்பர் பெய்வளையே. (கஎ)

நெடிலடிநான்கவை நேர்ந்துநின்றேபதி னாறெழுத்தாய்
முடிவனவாம்பதி னேழுநிரைவரின் முன்மொழிந்த
படிவழுவாது நடைபெறுமோசைவண் டேந்திநின்ற
கடிகமழ்கோதைக் கயனெடுங்கண்ணி கலித்துறையே. (கஅ)

துன்னுங்குறளடி நான்குவஞ்சித்துறை சிந்தடிநான்
குன்னும்விருத்தந் துறைமூன்றொருபொரு டாழிசையாம்
இன்னும்வரினு மடக்குகபோலியென் றேற்பமுன்னூல்
பன்னுமவர்க்கு முடம்பாடெனவறி பைந்தொடியே. (கக)

மேவுங்குறள்சிந் தொடுதிரிபாதிவெண் பாத்திலதம்
மேவும்விருத்தஞ் சவலையென்றேழு மினியவற்றுள்
தாவுமிலக்கணந் தப்பிடலாங்கவ்வ தம்பெயரால்
பாவுநிலையுடைப் போலியுமென்றறி பத்தியமே. (உ0)

எழுசீரடியிரண் டாற்குறளாகு மிரண்டடியொத்
தழிசீரிலாதது சிந்தாமடிமூன்று தம்மிலொக்கில்
விழுசீரிலாத திரிபாதிநான்கடி மேவிவெண்பாத்
தொழுசீர்பதினைந்த தாய்நடுவே தனிச் சொல்வருமே. (உக)

நேர்முந்துநிற்பதி னாறெழுத்தாகி நிறைமுதலாம்
சீர்முந்துநிற்பதி னேழாய்முடிந்துசெப் பாரடிகள்
ஏர்முந்துநான்கொத் திருப்பதுசீரா லியன்றிடுமேல்
தேர்முந்து பேரல்குன் மாதேயஃது திலதமன்றே. (உஉ)

அளவோரடிபோ லொருநான்குபேத மிலாதுமெய்ப்ப
துளதேலஃது விருத்தமென்றேயறி யுள்ளங்கொள்ளும்
களவேறுஸழந்து கயலினுநீண்டு கடுவடுவின்
பிளவேயனைய பெருமதர்நாட்டத்துப் பெய்வளையே. (உ௩)

இடையுமுதலுங் கடையுங்குறைந்து மிடையிடையே
அடையுமடிகுறைந் தும்வரினன்கடி யப்பெயரால்
நடைமூன்றியன்ற சவலையென்றோதுவர் நான்கின்மிக்க
தொடையுந்திறம்புவ தாய்விடிற்போலி துடியிடையே. (உ௪)

ஒன்றாதியென்ப ரொருசாரவரொரு நான்குமூன்றும்
என்றுவிரிதுசந் தத்தினெழுத்தெ யிருபதின்மேல்
நன்றாயவாறுயர் வாமென்றுரைப்பர்நற் றண்டகமேல்
பின்றாதகட்டளை நான்குமூன்றாகிப் பெருகிடுமே. (உ௫)

ஏறியநெட்டெழுத் தேநெடிலொற்றே யெழில்வடநூல்
கூறியசீர்க்குறி லொற்றேகுருவாங் குறிலதுவே
வேறியல்செய்கை யிலகுவென்றாகும் வியன்குறிலும்
ஈறியலிற்பிறி தாமொருகாலென் றியம்புவரே. (உ௬)

ஒப்பாருறழ்ச்சியுங் கேடுமுத்திட்டமு மொன்றிரண்டென்
அப்பாலிலகு குருச்செய்கையுமந்தச் சந்தங்களால்
துப்பார்தொகையு நிலவளவுமென்று சொல்லிவைத்தார்
செப்பார்தெளிவுக ளாறையுஞ்சேறடித் தேமொழியே. (உஎ)

ஆதியினிற்குருப் பாதம்வைத்தாதிக் குருவதன்கீழ்
ஓதியசீரில குத்தன்னையாக்கி யொழிந்தவற்றை

ரூதியன்மேற்படிக் கொப்பித்துமுன்புறப் பாழ்கிடக்கில்
தீதியலாக்குருக் கொண்டேமறைக்க திறப்படவே. (௨௮)

ஏறும்படியெனைத் தாவதுகெட்டதென் றுலவ்வெண்ணைத்
தேறும்படியறா செய்திலகுகொள்க சேரிஞொற்றை
வேறுமுருவொன்று பெய்தலைசெய்து வியன்குருவைத்
தீறுதிகழு மளவு மியற்றுக விப்படியே. (௨௯)

காட்டியவீடனைத் தாவதென்றுலதன் கண்ணெழுத்திற்
கூட்டியவொன்றுதி கொண்டிரட்டித்துக் கோப்பியல
நாட்டியசீரில குக்களின்மேனண் ணியவிலக்கம்
ஈட்டியங்கொன்றிட்டுனைக்குமிதனையுத் திட்டமென்னே. (௩௦)

ஓங்கியசந்தத் தெழுத்துக்களைவீ டிரண்டொருமூன்
றுங்கியநான்கைந்தொ டாறேழெனவிரண் டாலிசைத்துத்
தாங்கியவீடொன்றென் றீறெழித்திட்டுத் தமதயலெண்
பாங்கிற்றொகுத்து லகுக்குருப்பெய்து பகர்தொகையே. (௩௧)

தொகைநான்கிடமிட் டெழுத்தான்முரணித் தொடருமனா
தகையாதவுண்ண நடுவணவாற்றித் தருங்கடையில்
சிகையாகவிட்டெழுத் தோடிலகுக்களுஞ் சீர்க்குருவும்
மிகையாகுமாத்தி ரையுமடைவேயறி மெல்லியலே. (௩௨)

எழுத்தளவுமிரண் டேமுதலாய்க்கொண் டிரட்டிசெய்யக்
குழுத்தவிறுதித் தொகையேதொகைகுல வுந்தொகையை
அழுத்தவிரட்டிசெய் தங்கொன்றுநீக்க வதுவுறழ்வால்
விழுத்தவியன்ற நிலத்தின்விரவென்ப மெல்லியலே. (௩௩)

மருவுநெடில்குறில் வல்லொற்றுமெல்லொற் றிடையிலொற்றென்
றுருவந்திகழ்ந்தவை யுய்க்குங்குறிகளொப் பரர்நிரைநேர்
துருவமுலிபுள்ளி வட்டம்விலகென்பர் தொன்மைகுன்றாத்
திருவுமழகும் புகழுந்திகழ்தரு தேமொழியே. (நூச)

இப்படிக்கட்டளைத் துண்டமொன்றாக்கிய தீரிரண்டில்
ஒப்புடையெட்டிற் பதின்றினின்முப்பத் தோரிண்டில்
செப்பிடவாக்குக தண்டகம்வல்லொற்றல் லாதவொற்றுத்
துப்புடனுச்சாரணையி னல்லான்மிகத் தோன்றரிதே. (நரு)

மெல்லிசையேந்த லொழுகுருட்டெண்ணொரு வேழுடுகு
வல்லியல்பாவகப் பாட்டுநலிவகை போடியையு
சொல்லியசித்திரந் தாவுபுறப்பாட் டளபெடையும்
வல்லிசைதூங்க னெடுஞ்சீர்குறுஞ்சீ ரிவைவண்ணமே. (நசு)

யாப்புப்படலம் முற்றிற்று.

யாப்பதிகாரம் முற்றிற்று.

ஆ பாக்கள்-கசரு.

---

## ரு - வது. அலங்காரம்.

## அலங்காரப்படலம்.

உரையுடலாக வுயிர்பொருளாக வுரைத்தவண்ணம்
நிரைநிறமாநடையே செல்வாநின்ற செய்யுட்களாம்
தரைமலிமானிடர் தம்மலங்காரங்க டண்டிசொன்ன
கரைமலிநூலின் படியேயுரைப்பன் கனங்குழையே. (க)

சார்ந்தவழக்கொடு தப்பாவடவெழுத் தைத்தவிர்ந்து
தேர்ந்துணர்வார்க்கு மினிமையைத்தந்து செய்யுட்களினும்

நேர்ந்துசொலப்பட் டியர்ந்தவர்ரனிர லேபொருளை
ஓர்ந்துகொள்ளப்படுஞ் சொற்குற்றமற்ற வுறுப்பென்பரே. (௨)

தெற்றிவழக்கொடு தேர்ந்துணர்வார்க்கின்பஞ் செய்யலின்றிப்
பற்றிவடநூ லெழுத்துக்களோடு பயின்றுளாயின்
மற்றிவையில்லென்று வாங்கவும்பட்டுப் பொருண்மருண்டிப்
பெற்றியுடைச்சொற் பழித்தவுறுப்பென்று பேசுவரே. (௩)

ஆக்குதல்கேட்டவர்க் கின்பத்தினையன்றி யவ்வவரே
போக்குதல்செய்த கருத்திற்பொருளாய்ப் புராதனரால்
நீக்குதல்செய்தகுற் றத்தைக்கடத்த னெறிமுறையே
தாக்குதல்செய்த பொருள்காண்சிறப்புயிர் தாழ்குழலே. (௪)

தெரிவான்றித பொருளெனப்போதல் சிதைவுசொல்லப்
புரிவான்பொருளுக்கு மேறுதன்மற்றும் பொருளுண்டென்று
பரிவானுடன்சொல்ல வேண்டுதலென்றிந்தப் பாட்டில்வைத்த
விரிவாம்பொருளென்னு மாவியின்குற்றம் விளங்கிழையே. (௫)

ஈண்டுஞ்சிலிட்ட முதாரதைகாந்தி புலன்சமதை
தூண்டுஞ்சமாதி பொருட்டெளிவோகஞ் சுகுமாரதை
ஈண்டுமின்பத்தொடு பத்தாவியென்னும் விதர்ப்பன்கௌடன்
வேண்டுமிவற்றை விபரீதமாக விளங்கிழையே. (௬)

ஒப்பார்பொருளே யுயிரானமையி னுரைத்தவற்றைத்
துப்பார்லங்கார மாகத்தொகுக்கச்சொல் லும்பொருளும்
செப்பார்தரமுற்றி லேயலங்காரத் திகழ்வதன்றேல்
தப்பார்தருமென்று கண்டுரைத்தார்பண்டு தண்டிகளே. (௭)

செறிவார்சிலேட்டந் தொகைமிகையாமோகஞ் சீர்சமதை
அறிவாரடியெப்பு தாகுஞ்சமாதி யவனிக்கொப்பப்
பிறிவார்குணமொன் றதொன்றிற்கிடப்பன மென்மையொன்றின்
நெறிவார்குழலி சுகுமாரதையென்று நேர்ந்தனையே. (அ)

ஆனுவழகினைக் காந்தியென்கின்ற தததமிழில்
ஞானவிதமாய் நடைபெற்றியலு நனிபுகட்சி
தானுமிடத்தினும் வார்த்தையின்கண்ணுந் தலைசிறந்து
தேனுய்விதர்ப்பருக் குங்கவுடர்க்குந் திறப்படுமே. (கூ)

திரப்பியஞ்சாதி தொழில்குணமாக்தன்மை சீருவமை
யுரப்பியவெரப்பா முருவகமாவ தத்தன்றிருவு
காப்பியசொல்லெங்கு மொன்றேயுபகார மேல்விளக்கு
நிரப்பியமீட்சியு மற்றதன்போலி நினைவனையே. (க0)

கூறும்பிறபொருள் வைப்புத்தடைமொழி கொள்பொருளில்
ஏறுமிரண்டியொன் றேறும்விரோக மேதுவின்மை
தேறும்விபாவனை யன்றித்திகழ்சுருக் கேபெருக்கே
ஈறுமிகுசோக்க மேதுநுணுக்க மிலேசமென்னே. (கக)

அடைவுமகிழ்ச்சி சுவையூக்கமாம்பரி யாயமொழி
அடைவுமலிதுணைப் பேறொடுதாத்த மவநுதியும்
உடைவுநிகழுஞ் சிலேடைசிறப்பொ டெனிலைச்சொற்
புடையின்முரணுவ லாச்சொற்புரிவில் புகழ்ச்சிகூட்டே. (கஉ)

ஆக்குமொருங்கிய லேயரிமாற்றத்தொ டாசிவிராத்
தாக்குமொழிப்புா விகமிவையேழைந்துந் தண்டிசொன்ன

வாக்குமலியலங் காரமென்வுறி மற்றுமின்ன
நோக்குமெனிற் பலவாமலங்கார நுடங்கிடையே. (கங)

புகழ்ச்சிபழிப்பு விரோதங்கருத்திசை புணர்மையையும்
இகழ்ச்சியெதிர்ப்பொரு ளற்புதநோக்கித ரேதரந்தான்
நிகழ்ச்சிமிகைபண் புயர்வுநியம மநியமமும்
திகழ்ச்சிமலிதடைட் டெற்றுச்சிலேடை துணிவென்பரே. (கச)

உம்மைபொருளிரெ ணொப்புமைகூட் டமுதத்தொடு
செம்மைதிகழ்வாக் கியப்பொருள்கோவைதிண் காரணமும்
வெம்மைமயக்கம் பலவியல்விக்கிரி யத்திரெண்டு
மெய்ம்மைபிறசந்தா னமுமென் றுவமை விகற்பபரே. (கரு)

பட்டாங்குரைத்தல் புகழ்தல் பழித்தலிற் பண்புயன்
சிட்டார்தொழில்வடி வாதியுவமை செறிந்துறப்புத்
தட்டாஇயலும் பொருளுமுவமையுஞ் சார்பொதுவாய்
முட்டாமலேநிகழ் காரணமும்பெறு மொய்குழலே. (கசு)

ஒப்பிலுவமை யிழிவுயர்வோடு முயரிழிவு
துப்பில்சமமே தலைப்பெயல்கூற்றுத் தொகைவிரிவு
தப்பிலுறழ்ந்து வரலேயொருவழி யோர்பொருண்மேல்
செப்புசின்முத லோப்புமையென்று தேர்ந்தறியே. (கஎ)

தெற்றுத்தொகையவ் வியமேதுப்பண்பு விரியுவமை
மற்றுச்சிலேடை சகலமியைபு வரப்புணர்த்த
முற்றுத்தொகைவிரி நின்றோடவயவி முந்துறப்புப்
பெற்றுப்பயிறத்து வாயனர்தன்றே டிலைப்பிலியே. (கஅ)

தாக்குஞ்சமாதான மேவிதிரோகந் தடைமொழியும்
ஊக்குமுருவகத் தோடொன்றுருவக மேகாங்கமென்
ருக்குமுருவக மைந்நான்கொன்றும்பிற வந்தனவும்
நீக்குவனவிட்டுத் தொல்லோருரைப்படி நேர்ந்தறியே. (கக)

தேரும்பொதுவே சிறப்புநிலையே சிலேடையன்றி
ஏரும்முரணியை போடியையின்மை யியைபுதம்மிற்
பேரும்விரவிய லோநற்பிறபொருள் வைப்புத்தண்டி
சீரும்பொலிவு மலியுந்தன் னூலினிற் செப்பியதே. (உ௦)

ஆசியனுதரங் காரணங்காரிய மையமேதுப்
பேசுமுபாயஞ் சிலேடைமுயற்சி பிறபொருள்வைப்
பேசில்கருணைநட் போடுகரும மிகழ்ச்சிவன்சொல்
தேசினிரக்கந் தன்மையனுசயஞ் செற்றமென்னே. (உக)

வெப்பந்தரும் பரவசத்தோடு வியன்குணமற்
றெப்புப்பொருளின் றடைமொழிதன்னை யுரைத்துணர்ந்து
செப்பமுடையவர் காலங்கண்மூன்றிற் றிருத்திப்பின்னும்
எப்பண்புகொண்ட விகற்பம்வரினு மியற்றுவரோ. (உஉ)

ஒருமையிருமை சிலேடையுயர்பினொ டேதுவன்றிப்
பெருமைமலிசாதி யொப்பாம்விதிரோகம் பேசுதொழில்
அருமைமலிகுணஞ் சாதியென்றுருமவ் வேதுவுமற்
றிருமைநிகழ்ஞா பகங்காரகமா மிலங்கிழையே. (உங)

பாவும்விபாவனை பல்லோரறியும் பரிசொழித்து
மேவுமியல்பு குறிப்பேதுநீக்கி விளைவுரையாம்

வீவில்கவிதான் கருதுபொருளை வெளிப்படுத்தற்
கோவியமேசுருக் காமறைசொல்லி னுரைத்திடினே. (உச)

அருளுமதிசய மான்றோர்வியப்ப துலகிறவாப்
பொருள்குணமையர் துணிவுதிரிவெனப் போற்றுவரால்
பெருகியநோக்கது தற்குறிப்பேற்றம் பெயர்பொருளாய்
வருவதும்பேராப் பொருளதுமாக வகுத்தனரே. (உரு)

ஏதுவுரைப்பி னிதுவிதுவின்விளை வென்றுரைத்தல்
ஓதியகாரக ஞாபகமுள்ளதொ டொன்றினென்றும்
ஆதியபாவ மழிவுபாடென்று மபாவமின்மை
நீதியொருங்குடன் றோற்றம்யுத்தா யுத்தஞ்செப்புவரே. (உசு)

திகழூநுணுக்கங் குறிப்பிற் றொழிலிற் றிறமுணர்த்தல்
நிகழுமிலேசமெய்ச் சத்துவம்வேறு நெறியினுய்த்தல்
இகழுமொழியிற் புகழ்தலுமேத்திய வின்னுரையில்
புகழுநடையிற் பழித்தலும் போற்றுவர் பொற்றொடியே. (உஎ)

நிரனிறையாவது சொல்லும்பொருளு நிரனிறுத்தல்
விரவுமகிழ்ச்சி யுளநிகழார்வம் விளம்புமொழி
உரியசுவைதா னிரதமேம்பாட்டுரை யூக்கமென்ப
பரியாயமோர்பொரு டோன்றப்பிறிது பகர்தலென்னே. (உஅ)

தாங்குஞ்சமாயிதந் தான்முயல்செய்தி தனதுபயன்
ஆங்கதனாலன்றி மற்றொன்றினால்வந்த தாகச்சொல்லல்
தீங்கிலுதாரதை செல்வமுமுள்ளமுஞ் சீர்மைசெப்பல்
ஓங்குமவனுதி யுண்மைதவிர வுரைத்திடலே. (உகூ)

செப்புஞ்சிலேடை யொருதிறஞ்சேர்சொற் பல்பொருளை
ஒப்பவுணர்த்த லொருவினைபல்வினை யோங்குமுரண்
துப்புறழ்வாயின் சொலாய்நியமத்தோ டநியமமும்
தப்பில்விரோதத் துடன்விரோதமுஞ் சாற்றினரோ. (௫0)

செல்லுஞ்சிறப்புத் தொழில்குணமங்கஞ் சிதைந்திடினும்
நல்லபயன்பட நாட்டலுடனிலைச் சொன்னயந்து
சொல்லுங்குணமுத லொத்ததொகுத்தல் சொலும்பொருளும்
புல்லும்விரோதம் புணரின்முரணென்ப பொற்றொடியே. (௫௧)

மாறியிகழ்மொழி வண்புகழாய்நுவ லாச்சொல்வரும்
தேறுந்தெரிவில் புகழ்ச்சியொன்றைப்பழிக் கப்பிறிது
கூறிப்புகழுதல் சுட்டாநிகழ்பயன் கொள்பொருளில்
வேறுபடநன்மைதீமை வெளிப்படன் மெல்லணங்கே. (௫௨)

துப்பாரொருங்கிய நயவினைப்பின் னிரண்டுபொருட்
கொய்பாவொருசொல்லு வைப்பதுயர்பரி மாற்றமது
செப்பார்பொருண்மா றிட்டிகழாசியின் சீர்மைசொலில்
தப்பாதவாசீர் வசனமென்னவுணர் தாழ்குழலே. (௫௩)

பண்புதரும்பல லங்காரஞ்சேர்ந்து பயிலுவது
நண்புதரும்விரா வாம்பாவிகமது நற்கவியின்
ஒண்பொருளின்றொடர் காப்பியமுற்றி னுறைபெறுமால்
விண்புடைநின்றிடை யச்சிறியமுலை மெல்லியலே. (௫௪)

ஈண்டியமுற்றேக தேசவுவமை யுருவகமென்
றீரண்டொருமூன்று வருவகமோதுவர் காரணமும்

தூண்டுமெகார ணமுமாமிகைமொழி சொல்வரெல்லாம்
வேண்டியவேண்டிய வாறுவிகற்பிப்ப மெல்லியலே. (௫௫)

யாப்பையியம்பிடின் முத்தகமோடு குளகந்தொகை
காப்பியமாமுத் தகந்தன்பொருள்ளோர் கவியின்முற்றும்
வாய்ப்பிற்குளகம் பலபாட்டொருவினை மன்னுதொகை
கோப்பிற்பொருளன காப்பியமாநூல் கொடியிடையே. (௫௬)

ஆதியுமீறு மிடையுமடியொன்றி லேமடக்கும்
ஓதியபாதங்க ளன்கினுமாமொரு பாதமுற்றும்
தீதியலாமை மடக்கலுமுண்டு தெரிந்தவற்றைக்
கோதியலாமை விகற்பத்தினிலறி கோல்வளையே. (௫௭)

தந்திரவுத்தி குணமதமேயுரை தார்க்கந்தன்னில்
வந்தியலெண்கோண முதலாயுளமாலை மாற்றுமுன்னு
வந்தியல்சித்திர மென்றின்னவுமலங் காரமென்றே
தந்தியலச்சிலர் சொன்னாரவற்றையுஞ் சார்ந்தறியே. (௫௮)

ஏறியமாலைமாற் றேசக்கரமினத் தாலெழுத்தாய்
கூறியபாட்டு வினாவுத்தரமேக பாதமின்றித்
தேறியகாதை காப்புச்சுழிகுளஞ் சித்திரப்பா
வீறியல்கோமூத் திரியும்பிறவும் விரித்துரையே. (௫௯)

இடையேவடவெழுத் தெய்திலவிரவிய லீண்டெதுகை
நடையேதுமில்லா மணிப்பிரவாளநற் றெய்வச்சொல்லின்
இடையேமுடியும் பதமுடைத்தாங்கிள விக்கவியின்
தொடையேதுறைநற் பிரளிகையாதி துணிந்தறியே. (௬௦)

மறங்கனி தாது வயிரபஞ்சம்பிர தந்தவசுக்
குறங்கணிகம்முத லாந்துறையாகுங் குவலயத்தே
திறம்பலபோக்குங் கிளவிக்கவிசெய் யுளின்பயனே
அறம்பொருளின்ப மொடுவீடெனவறி யாரணங்கே. (சுக)

அந்தச்சிறப்பு.

தடமார்தருபொழிற் பொன்பற்றிகாவலன் ருன்மொழிந்த
படிவீரசோழியக் காரிகைநூற்றெண் பஃதொடொன்றின்
திடமார்பொழிப்புரை யைப்பெருந்தேவன் செகம்பழிச்சக்
கடனுகவோவின் ருன்றமிழ் காதலிற் கற்பவர்க்கே. (சுஉ)

அலங்காரம்.

அலங்காரப்படலம் முற்றிற்று.

## வீரசோழியம் முற்றுப்பெற்றது.

ஆ பாக்கள் – கஅஎ.

---

## இவை அருளிச்செய்தவர்கள்.

---

முறையே, பவணந்திமுனிவர் நாற்கவிராஜநம்பி ஐயனரிதனர் அமுதசாகரமுனிவர் தண்டியாசிரியர் குணவீரபண்டிதனர் புத்தமித்திரனர் என்பவர்கள்.

# பரிசோதனப்பத்திரம்.

## நன்னூல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | நீக்கல். |
|---|---|---|---|---|
| ஙசு | ரு | ளிரு | ளிறு. | |
| ருக | க0 | விளை | வினை. | |

## அகப்பொருள்விளக்கம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | நீக்கல். |
|---|---|---|---|---|
| உஉ | உ0 | முடிடி | முடி. | |
| உகூ | உக | | | பிறைவிமே லிறைவன் குறிப்பிழைப் பேற்றலும் |
| ஙரு | கஎ | ோப | போ | |

## புறப்பொருள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | நீக்கல். |
|---|---|---|---|---|
| ரு0 | சு | தருமே | தரும் | |
| ருஉ | உ | மேற | மேற். | |
| அக | கக | முதலை | முதலைய | |
| அசு | கஉ | தும்பை | தும்பை தும்பை. | |
| கருஉ | உஉ | யுக் | யுங். | |

## யாப்பருங்கலக்காரிகை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | நீக்கல். |
|---|---|---|---|---|
| உ | ரு | ெநடி | னெடி | |